# ஸ்ரீ மகா கோவிந்தம்

10-1



வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்.

3

# ஸ்ரீ மகா கோவிந்தம்




வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்.

# நூல் விவரம்

நூலின் பெயர் : ஸ்ரீ மகா கோவிந்தம்

தொகுப்பாசிரியர் : முத்தமிழ்ப்பண்ணை அரங்கராசன்

முதற்பதிப்பு : 10.05.2009
ஸ்ரீ மகா கோவிந்த சுவாமிகள் நூற்றாண்டு



பக்கம் : 16 + 204 = 220

எழுத்து : 13 புள்ளி

பொருள் : அத்வைத வேதாந்தம்

விலை : ரூ. 60 (ரூபாய் அறுபது மட்டும்)

அச்சுக் கோர்வை : சாரதா அச்சாலயம்,
4/346, சிவவாக்கியம்,
வைரிசெட்டிப்பாளையம் – 621 012.
✆ 04327–252234, 9843239997.

அச்சிட்டோர் : ஸ்ரீராஜராஜேஸ்வரி ஆப்செட் பிரிண்டர்ஸ்,
92, திருச்சி ரோடு, துறையூர் – 621 010.
✆ 04327–222659, 9443781295.

வெளியீடு : முத்தமிழ்ப்பண்ணை அரங்கராசன்,
தாளாளர், கல்விக்கற்பகம்,
வைரிசெட்டிப்பாளையம் – 621 012.
✆ 04327–252268, 9786409336.



ஓம்

ஸ்ரீகுருப்யோ நம:

# ஆசியுரை

ஈன்றளித் தழிக்கும் செய்கைக் கேதுவாம் அயனாய் மாலாய்
ஆன்றஈ சனுமாய்த் தானே அநந்தமூர்த் தியுமாய் நிற்கும்
மூன்றமுத் தனுமாய் இன்பப் புணரிஆ தவனாய் நாளும்
தோன்றிய விமல போத சொருபத்தைப் பணிகின் றேனே.

பாரத நாடு பழம்பெரும் நாடு, நாம் அதன் புதல்வர்கள். இதை என்றென்றும் நினைவு கூற வேண்டும். நமது நாட்டில் காலங்காலமாக மஹான்கள் வாழ்க்கையின் குறிக்கோளையும் அதை அடைவதற்கான வழிமுறைகளையும் இறைவனுடைய அருளால் சாஸ்த்ரங்களின் வாயிலாக அருளிச் செய்து வந்திருக்கிறார்கள்.

பாரத நாட்டிலே பிறந்த ஒவ்வொருவரும் இந்த மஹான்களுடைய வாக்கின்படி, அருளுபதேசத்தின்படி வாழ்வார்களேயானால் அவர்கள் வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவர்களாகவும் யான் எனது என்னும் செருக்கை அறுக்கக்கூடியவர்களாகவும் சிறந்து விளங்குவார்கள் என்பதில் யாதொரு ஐயமுமில்லை.

ஆனால் நாம் கற்க வேண்டியதைக் கற்பதில்லை. அப்படியே கற்றாலும் அதனைக் கசடறக் கற்பதில்லை. கசடறக் கற்றாலும் அதற்குத் தக நிற்பதில்லை. வாழ்க்கையில் நமக்கு வருகின்ற அல்லல்கள், துயரங்களுக்குக் காரணம் இந்த மூன்றையும் நாம் முறையாகக் கடைப்பிடிக்காததுதான். எனவே மஹான்களுடைய, அருளாளர்களுடைய, குருமார்களின் வழிகாட்டுதலின்படி நாம் வாழக் கடமைப் பட்டிருக்கிறோம்.

வருங்காலத் தலைமுறைக்கு இன்பம் தரும் வாழ்வை நாம் வழங்க வேண்டுமானால் நிகழ்காலத் தலைமுறையாகிய நாம் அவ்வாறு வாழ்ந்தால்தான் அவர்களுக்கு அதனை வழிகாட்டி வழங்க முடியும். ஸ்ரீமஹாகோவிந்த ஸ்வாமிகள் நூற்றாண்டின் நினைவாக அவருடைய மாணாக்கர்கள் அவர்மீது உள்ள அன்பை வெளிப்படுத்தும் முகமாக ஸ்ரீமஹாகோவிந்தம் என்ற இந்த சிறந்த நூலை அன்பர்களுக்கு வழங்கி மகிழ்கிறார்கள்.

இதில் பல அம்சங்கள் மிகச் சிறப்பாக அமைந்திருக்கின்றன. ஸ்ரீஸ்வாமிகள் அவர்களால் கூறப்பட்ட உபதேசங்கள் இதில் இருக்கின்றன. ஸ்ரீஸ்வாமிகளுடைய அருமை பெருமைகளை முதலிலே வெளியிட்டிருக்கிறார்கள். இந்த நூல்களைப் படிப்பதற்கு சிறந்த பயிற்சியும் இருக்கத்தான் வேண்டும். அவர்களுக்குத்தான் இந்த நூலிலுள்ள கருத்துக்கள் மிகத் தெளிவாக விளங்கும்.

ஸ்ரீமஹாகோவிந்த ஸ்வாமிகள் இளமையிலேயே நன்கு பற்றைத் துறந்து தகுந்த ஆசிரியரைச் சார்ந்திருந்து மெய்ஞான நூல்களைக் கற்று அதன்படியே நிலைநின்று எல்லோருக்கும் முக்தியைத் தரும் மெய்யுணர்வை வாரி வழங்கியிருக்கிறார்கள் என்பது இந்த நூலின் மூலம் விளங்குகிறது.

பல்வேறு மடாலயப் பொறுப்புகளில் இருந்தாலும் அவர் பற்றற்றவராக இருந்திருக்கிறார் என்பதற்கு அவருடைய வாழ்க்கையில் சான்றுகள் நன்கு கிடைக்கின்றன.

அவர் சாஸ்த்ரங்களை நன்கு முறையாகக் கற்றவர். ஸ்ரீஆதிசங்கரர் கூறும் குருவின் லக்ஷணங்கள் அனைத்தும் நிரம்பப் பெற்றவர். மறந்தும் தீமை செய்யாதவர். உலக ஆசைகளுக்கு வசப்படாதவர். பரம்பொருள் தத்துவத்தை விளக்கிச் சொல்லுவதிலே வல்லவர். தத்துவ நூல்களைக் கற்றுக் கொடுப்பதிலேயே தனது வாழ்நாளை பயன்படுத்தியவர். பொருளையோ இன்பத்தையோ சார்ந்திராது அறத்தையும் முழுமையாகச் சார்ந்திராது வீடுபேற்றையே சார்ந்திருந்து முக்தியடைந்த பெருமகனார் அவர்.

அவர் வாழ்ந்த காலத்தில் அவருடைய அருகாமையில் இருந்தும் அவரை தரிசிக்காமல் போனோமே என்ற மனக்குறை எனக்குண்டு. இருப்பினும் அது இறைவனுடைய திட்டம் என்பதை உணர்ந்து மனதைத் தேற்றிக் கொண்டிருக்கிறேன்.

இதனை பலமுறை படிக்க வேண்டும். அப்பொழுதுதான் இதிலுள்ள தத்துவக் கருத்துக்கள் விளங்கும். "நூதன விவேகி உள்ளம் நுழையாது; நுழையுமாகில் பூதசன்மங்கள் கோடி புனிதனாம் புருடனாமே" என்கிறது கைவல்ய நவநீதம்.

ஆன்ற பதம்ஆம் மூன்றற்கும் அதுநீ ஆனாய் எனும்பொருளில்
சான்ற துரியா தீதத்தில் தடைஅற் றிலங்கொண் சைதந்நியம்
ஊன்றி உணர்ந்தோர் விகற்பமயக் கொழித்துத் தடையும் ஊடறுத்துத்
தோன்றித் தானே தானாவர் துலங்கும் தமக்கே சுவாநுபவம்.

என்றபடி அனைவரும் ஜீவன்முக்தி இன்பத்தை உணர குருவருளை வேண்டுகிறேன்.

இந்த நூலை பேரன்புடன் வெளியிடும் அன்பர்கள் அனைவருக்கும் எனது மனமார்ந்த பரிபூரண நல்வாழ்த்துக்கள்.

ஐயனே எனதுள் ளேநின் றநந்தசன் மங்கள் ஆண்ட
மெய்யனே உப்தே சிக்க வெளிவந்த குருவே போற்றி
உய்யவே முத்தி நல்கும் உதவிக்கோர் உதவி நாயேன்
செய்யுமா றொன்றும் காணேன் திருவடி போற்றி போற்றி.

பேரன்புடன்,
**ஸ்வாமி ஓங்காராநந்த**
ஸ்ரீவிரோதி, சித்திரை 11, அமாவாஸ்யை
(24-04-2009)



திருக்கயிலாய பரம்பரை
வேளாக்குறிச்சி ஆதீனம்,
குருமகா சந்நிதானம்

## ஸ்ரீலஸ்ரீ சத்தியஞான மகாதேவ தேசிக பரமாசாரிய சுவாமிகள்

## ஆசியுரை

அகண்ட சச்சிதானந்த பரம்பொருளாகிய சிவபெருமான் உயிர்கள் உய்யும் பொருட்டு மானிடச் சட்டை தாங்கி குருவடிவாக எழுந்தருளி சித்தாந்தத்தையும் வேதாந்தத்தையும் உபதேசித் தருளினார். அவ்வாறு அருள்பெற்றவர்களில் ஒருவர் தவத்திரு. குருமகா கோவிந்த சுவாமிகள். அவர்களது நூற்றாண்டு விழா 10.05.2009 அன்று வைரிசெட்டிப்பாளையத்தில் சிறப்பாக நடைபெறவிருப்பதறிந்து மிகவும் மகிழ்கிறோம். விழா சிறப்புற நிறைவேறவும், அவரது அடியார்கள் அனைத்து நலன்களும் பெற்று பல சிவபுண்ணியங்களைச் செய்து பல்லாண்டு இனிது வாழவும் நமது ஆன்மார்த்த மூர்த்தியாகிய ஸ்ரீஅஜபாநடனத் தியாகேசப் பெருமானின் திருவடி மலர்களைச் சிந்தித்து வாழ்த்துகிறோம்.

24.4.2009

வேளாக்குறிச்சி ஆதீனத் திருமடம்,
திருப்புகலூர் (P.O) – 609 704,
நாகை மாவட்டம்.
தொ.பே. 94431 13025.



# ஸ்ரீ இராமாஸ்ரமத்திலிருந்து ஸ்ரீ சங்கராஸ்ரமம் வரை



## முத்தமிழ்ப்பண்ணை - அரங்கராசன்

ஸ்ரீ இராமாஸ்ரமத்தில் சுவாமிகள் ஏகாந்த வாசத்தில் இருந்து வந்த சமயம்.

ஏகாம்பரக்குப்பம் – கே.வி.பி.ஆர். பேட்டையிலுள்ள ஸ்ரீசிவசுப்ரமணிய சிவானந்த யதீந்திர மடாலயத் தலைவர் பொறுப்பும், தஞ்சாவூர் கரந்தையிலுள்ள பாலைய ஞானதேசிக சுவாமிகள் மடாலயத்தின் பின் வாரிசு பொறுப்பும் இருந்து வந்தது.

நன்னிலம் ஸ்ரீதாண்டவராய சுவாமிகள் ஆலயத் திருப்பணியை முடித்துப் பொறுப்புகளை ஒப்படைத்துவிட்டு, கொப்பம்பட்டி திரு.நடராஜ ரெட்டியார் – ருக்மணி அம்மையார் தம்பதிகளின் வேண்டுகோளை ஏற்று 1970 ஜூன் 8ல் கொப்பமாபுரி வந்தார்கள். திரு.நடராஜ ரெட்டியார் வீட்டிலேயே தங்கி ருக்மணி அம்மையாருக்கு வேதாந்தப் பாடம் போதித்தார்கள். தனித்து, பெண்களைச் சுவாமிகள் சந்திப்பது வழக்கமில்லை. அதனால் திரு.நடராஜ ரெட்டியாரும் அம்மையாருடன் இருந்து சுவாமிகளிடம் பாடம் கேட்டார்கள்.

நடராஜ ரெட்டியாரின் வீட்டின் வடபுறம் தோட்டத்தில், சுவாமிகள் தங்கவும் பாடம் நடத்தவும் வசதியாக "ஸ்ரீஇராமாஸ்ரமம்" கட்டடம் கட்டப்பட்டு, அங்கு நித்ய பூஜைகளும் விஷேச பூஜைகளும் நடந்து வந்தன.

எதிர்பாராமல் ருக்மணி அம்மையார் காலமாகி விட்டார்கள். அவர்கள் உடலை சுவாமிகளின் மேற்பார்வையில் "ஸ்ரீஇராமாஸ்ரமத்தில்" சமாதி வைக்கப்பட்டுள்ளது.

நடராஜ ரெட்டியாரிடம் அம்மையாரின் இழப்புத் துக்கம் விசாரிக்கச் சென்ற பொழுதுதான், அங்கு சுவாமிகள் இருக்கிற விவரமே எனக்குத் தெரியும். சுவாமிகளைச் சந்திக்க வேண்டுமென்று ரெட்டியாரிடம் கூறினேன். அன்போடு அவர்கள் இராமாஸ்ரமத்திற்கு அழைத்துச் சென்றார்கள். 19.03.1974 அன்று அந்த சந்திப்பு இராமாஸ்ரமத்திலிருந்து தொடங்கியது. நெடிய உருவம், மனதைக் கவரும் உடல் அமைப்பு, எளிய தோற்றம்.

சுவாமிகளிடம் எங்களை ரெட்டியார் அறிமுகப் படுத்தினார். உடன் நண்பர் சப்தரிஷியும் வந்திருந்தார். நாங்கள் கீழே விழுந்து வணங்குமுன்னர், "நின்று நமஸ்காரம் செய்தாலே போதும், பக்தி மனதில் இருந்தால் நல்லது" என்று கூறி விபூதி பிரசாதம் கொடுத்து ஆசிர்வதித்தார்கள். மூவகை தீட்சையும் முறையாகக் கிட்டியது. பேசிக் கொண்டிருந்த பின்னர் எங்களுக்குச் சுவாமிகள் "ஸ்ரீ இராமாஸ்ரம வரலாறு" என்னும் நூலை வழங்கினார்கள். விடை பெற்றபோது, "நேரம் கிடைக்கும்போது வந்து போங்கள்" என்றார்.

தெலுங்கு வருஷப் பிறப்பு 24.03.1974 அன்று பொ.பங்காருசாமி ஆசிரியருடன் சென்று சுவாமிகளை மீண்டும் சந்தித்தேன். எங்களுக்கு இலக்கியம் கொஞ்சம் தெரியும், வேதாந்த சித்தாந்தம் கொஞ்சமும் தெரியாது. எனவே, வேதாந்தம் போதிக்குமாறு பணிவுடன் வேண்டிக் கொண்டோம். "சரி, வாருங்கள்" என்றார். மறுநாளே "நாநா ஜீவவாதக் கட்டளை" பாடம் தொடங்கியது. ஒரு வாரத்தில் முடிந்தது. அதன் பயனாக 1993–இல் சுவாமி ஓங்காரானந்தா அவர்கள் தவநெறி மன்றத்தில் "தத்வ போதம்" வகுப்பு எடுத்தபோது எங்களுக்கு எளிமையாக விளங்கியது.

தமிழ் வருடப் பிறப்பன்று (13.04.1974) சென்று "கைவல்ய நவநீதம்" போதிக்குமாறு வேண்டினோம். அதற்கு முன் "வேதாந்த சூடாமணி" படியுங்கள் என்று 20.04.74 முதல் 29.07.74 வரை போதனை செய்தார்கள்.

சொந்த விவசாயம் செய்து வந்ததாலும், அரசியலில் என்னை கட்சிக்காரர்கள் அழைத்துச் சென்று விடுவதாலும் தொடர்ந்து சுவாமிகளிடம் முறையாகப் படிக்க இயலவில்லை.

சுவாமிகளும் அன்போடு "உங்கள் ஓய்வு நேரத்தில் வாருங்கள்" என்றார். நல்ல மாணவர்களுக்கு போதிக்கிறோம் என்ற மன நிறைவு சுவாமிகளுக்கு இருந்தது. 03.08.1974 லிலிருந்து 13.01.1975 முடிய "கைவல்ய நவநீதம்" கேட்கும்பேறு பெற்றோம்.

அதே சமயம் ஸ்ரீஇராமாஸ்ரமம் அருகிலேயே ஸ்ரீசங்கராஸ்ரமம் கட்டடம் வேலை நடந்து வந்தது. எங்களுக்குப் பாடம் ஸ்ரீஇராமாஸ்ரமத்திலே, சுவாமிகள் தங்கியதும் அங்கேயே. சுவாமிகள் எங்களிடம் மிக எளிமையாகப் பழகி, பல்வேறு அனுபவங்களையும் பகிர்ந்து கொள்வார்கள்.

என்னைத் தவிர மற்றவர்கள் அரசுப் பணியில் இருந்ததால், அவர்கள் சுவாமிகளிடம் அதிக நேரம் செலவிட முடியவில்லை. எனக்கு அடிக்கடி சந்திக்கவும் அதிகமாக உரையாடவும் வாய்ப்புக் கிடைத்தது.

தஞ்சை பால்சாமி மடாதிபதியாகவும் சிறந்த ஞானியாக விளங்கிய ஸ்ரீபிரஹ்மானந்த சுவாமிகள் தமது கடைசி காலத்தில் துறையூர் அருகிலுள்ள சிக்கத்தம்பூர்பாளையத்தில் தங்கி வேதாந்த பாடம் மாணவர்களுக்கு நடத்தி வந்தார்கள். அங்கேயே சமாதி கொண்டு அருள்பாலித்து வருகிறார்கள். ஸ்ரீபிரஹ்மானந்த சுவாமிகள் மடாலயம் என் அத்தையின் கணவரும், ஸ்ரீசித்பவாநந்த சுவாமிகளின் பக்தருமாகிய தண்டலை டி.சி.ஜகந்நாத ரெட்டியார் பொறுப்பில் இருந்தது. அதனால், அங்கு நடைபெறும் ஆண்டு குருபூஜையில் நாங்களும் பங்கு பெற்று வந்தோம்.

இந்த ஆண்டு நாங்கள், சுவாமிகளை அங்கே எழுந்தருள வேண்டினோம். சுவாமிகள், "ஏகாந்த வாசத்தில் இருக்கிறேன், வெளியே எங்கும் செல்ல விருப்பமில்லை" என்றார்கள். நாங்கள்

வற்புறுத்தியதாலும் – நமது சுவாமிகள், தஞ்சை மடத்தின் மடாதிபதியாக இருந்ததாலும், பின்னர் ஒப்புக் கொண்டு புரட்டாசி மாதம் குருபூஜை விழாவில் 30.09.74 ல் தலைமையேற்று நடத்திக் கொடுத்தார்கள். சுவாமிகள் தலைமையில் நாங்களும் உரை நிகழ்ந்தினோம்.

ஐப்பசி மாதம் கே.வி.பி.ஆர். பேட்டையில் சுவாமி சிவானந்தர் குருபூஜை. சுவாமிகள் எங்களையும் வருமாறு அன்போடு பணித்தார்கள். நாங்களும் குருபூஜைக்குச் சென்று 31.10.74ல் விழாவில் சுவாமிகள் தலைமையில் உரையாற்றினோம். சுவாமிகள் மிகவும் மகிழ்ந்தார்கள்.

தஞ்சை மடாதிபதி மு.கோ.கிருஷ்ணசுவாமிகள் 26.11.1989 ல் விதேக முக்தியடைந்த செய்தி கேட்டு சுவாமிகளுடன் கரந்தை சென்றோம். 27.11.1989 ல் மகா சமாதி வைத்து முறைப்படி பூஜைகள் நடைபெற்றது. நமது சுவாமிகள் உடல் நலிவுற்றதால், தஞ்சை மடத்தைக் தக்கவரிடம் ஒப்படைக்க எண்ணினார். சுவாமிகள் விருப்பப்படி குற்றாலம் அகிலானந்த சுவாமிகளுக்கு 30.12.1990 அன்று ராஜபாளையம் ஏ.எஸ்.வேலாயுத ராஜாவும் நானும் இருந்து, உயில் சாசனம் செய்தோம்.

ஏகாம்பரக்குப்பம் மடத்தை வேலூர் மகா நாராயண சுவாமிகளுக்கு எழுதி ஒப்படைத்தோம்.

மடத்து வரவு செலவுகள் வழக்கு விவகாரங்களை என்னிடம் ஒப்படைத்தார். நான் சென்று அவற்றை முடித்து வைத்தேன்.

சுவாமிகள் உடல்நலக் குறைவால் கடைசியில் ஸ்ரீரங்கம் ரெட்டியார் பங்களாவில் திருமதி. யசோதை அம்மாள் பராமரிப்பில் ஓய்வில் இருந்தார்கள். அடிக்கடி நான் பார்த்து வருவேன்; என்னிடம் மனம் விட்டுச் சிலவற்றைக் கூறினார். அவற்றை வெளியிடுவது குரு துரோகமாகும்.

சுவாமிகள் நிறைய நூல்களைப் பயன்படுத்தி பாதுகாத்து வைத்திருந்தார்கள். நூல்கள் வாங்கிய தேதி, வாசித்த தேதி குறிப்பிடுவார். கருத்துகளை அடிக்கோடிட்டு வைப்பார். கருத்துப் பிழையாக இருந்தால் அங்கேயே, தக்க மறுப்புரையும் எழுதி வைப்பார். நூல் எப்படி படித்துக் குறிப்பெடுக்க வேண்டுமென்பதை சுவாமிகளிடம் கற்றுக் கொண்டோம்.

தனது காலத்திற்குப் பின் தாம் பயன்படுத்திய நூல்களை என் பாதுகாப்பில் வைத்திருக்குமாறுக் கூறினார். கிடைத்தற்கரிய நூல்கள் அவை என்பதை அறிந்து ராஜபாளையம் ராம்கோ குரூப்ஸ் உரிமையாளர் ராமசுப்ரமணிய ராஜா, தாம் நடத்தி வரும் காந்தி கலை மன்றத்தில் இந்நூல்களை சேர்க்க விரும்பினார். ராஜபாளையம் காந்தி கலை மன்ற நூலகர் புலவர் நாராயண ராஜா, ராஜபாளையம் ஏ.எஸ்.வேலாயுத ராஜா ஆகியோரிடம் சுவாமிகளின் நூல்களை வாங்கி வரும் பொறுப்பை ஒப்புவித்தார். அவர்கள் இருவரும் என்னிடம் அந்த தகவலைச் சொல்லி நூல்களை வேண்டினர். நானும் ஒப்புதல் கொடுத்த பின் ஸ்ரீராமாஸ்ரமத்திலிருந்த அனைத்து நூல்களும் ராஜபாளையம் எடுத்துச் சென்றார்கள்.

காந்தி கலை மன்றம் – புகழ் பெற்ற பெரிய இலவச வாசக சாலை. அதற்குப் பக்கத்திலேயே தனியாக ஒரு கட்டடம் கட்டி, "ஸ்ரீலிங்கம்மாள் வேதாந்த சாஸ்திர பிரதிஸ்டா" என்னும் பெயரில் வேதாந்த நூலகத்தை சுவாமி தயானந்த ஸரஸ்வதி சுவாமிகள் திறந்து வைத்து ஆசியுரை வழங்கினார். அங்கே சுவாமிகள் நூல்களுடன் மற்ற ஆன்மிக நூல்களும் வைத்துப் பயன்படுத்தப் படுகின்றன. நமது சுவாமிகளின் படமும் அலங்காரம் செய்கிறது.

சுவாமிகள் எங்களுக்கு போதித்த காலத்தில், எதிர்பாராமல் திரு.நடராஜ ரெட்டியாரும் காலமானார்கள். சுவாமிகள் அவருக்கு ஆபத்சந்யாஸம் கொடுத்து ஸ்ரீநடராஜ சுவாமிகள் என்னும் தீக்ஷா நாமமும் தந்து, ஸ்ரீசங்கராஸ்மத்தில் நந்தியின் கீழ் சமாதி வைத்து, முறையாக பூஜைகள் நடைபெற ஏற்பாடு செய்தனர்.

ரெட்டியாருக்குப்பின் அவரது குமாரர் ராமதுரை ரெட்டியார் – யசோதை தம்பதியினர் சுவாமிகளைப் பராமரித்து வந்தனர். ராமதுரை ரெட்டியாரும் திடீரென காலமானதால், யசோதை அம்மாள் அனைத்துப் பொறுப்புகளையும் ஏற்றார்கள்.

எவ்வளவு சென்னாலும் சுவாமிகளைப் பற்றி முழுமையாகக் கூற முடியாது. குருடன் யானையைக் கண்டு சொன்னது போலவே இருக்கும். ஒருவேளை, அர்ஜுனனுக்கு ஸ்ரீகிருஷ்ணர் விஸ்வரூப தரிசனத்தைப் பார்க்க ஞானக்கண் கொடுத்தது போல் நமக்கும் கிடைத்திருந்தால் சுவாமிகளை முழுமையாக அனுபவித்திருக்கலாம்.

சுவாமிகள் அருகிலேயே இருக்கிறார். எப்போது வேண்டுமானாலும் பயன்பெறலாம் என்று எண்ணி, பிறகு பார்த்துக் கொள்ளலாம் என்று நாட்களை நகரவிட்டோம். சுவாமிகளிடம் நாங்கள் கற்றதை விட விடுபட்டது அதிகம். 17 ஆண்டு காலம் பழகியிருந்தாலும் பெற்றது குறைவு என்பதைப் பிறகு உணர்ந்தோம்.

நன்னிலம் தாண்வராய சுவாமிகள் "கைவல்ய நவநீதம்" என்னும் வேதாந்த நூலை மற்றவருக்குத் தந்தார்கள். நமது சுவாமிகள் அந்த ஆலயத் திருப்பணி வசூலுக்காக கொப்பம்பட்டி வந்த காரணத்தாலும், ஸ்ரீராமாஸ்ரமத்தில் தங்கிய காரணத்தாலும் எங்களுக்கு நன்னிலம் சுவாமிகளே நூலையும், அதை போதிக்கும் குருவையும் அனுப்பி அருள் பாலித்தார்கள் என்பதே உண்மை.

1408ல் தாண்டவராய சுவாமிகள் அவதாரம், சரியாக 500 ஆண்டுகள் அதாவது 1908ல் கைவல்யத்தைப் பரப்பிய, நன்னிலம் ஆலயத்திருப்பணி செய்த சுவாமிகள் அவதாரம்.

1908 ல் கோவிலூர் வேதாந்த மட குருபூஜை. கோவிலூரில் துறவு ஏற்பதற்காக அதே ஆண்டு ராஜபாளையத்தில் சுவாமிகள் அவதாரம் செய்தார்களோ?

1927 ஆண்டு கே.வி.பி.ஆர்.பேட்டையில் மடாலயம் அமைக்க அடிக்கல் நாட்டினார்கள், நமது சுவாமிகளின் இரண்டாம் குருவான ஸ்ரீசிவானந்த யதீந்திரர். இங்கே கோவிலூரில் அதே காலத்தில் நமது சுவாமிகள் சந்யாஸ தீக்ஷை பெற்றது, பின்னர் மடாதிபதியாகவோ?

1937 சுவாமிகள் காசியிலிருந்து திரும்புகிறார்கள். அதே சமயம் ஸ்ரீசிவானந்தர் மடாலயம் திறப்பு விழா. ஏன்? நமது சுவாமிகள் மடாதிபதி ஆகவோ?

சுவாமிகளுக்கு நூற்றாண்டு விழா எடுக்க வேண்டுமென்று கடந்த ஐந்து ஆண்டுகளாக சொல்லி வந்தேன். சுவாமிகள் பிறந்த ராஜபாளையம், சந்யாஸம் பெற்ற கோவிலூர், மடாதிபதியாக விளங்கிய கே.வி.பி.ஆர்.பேட்டை, தஞ்சை–கரந்தை, ஆலயத் திருப்பணி செய்த நன்னிலம், சமாதியடைந்த கொப்பமாபுரி ஆகிய இடங்களில் நூற்றாண்டு விழா எடுக்க ஆசைப்பட்டேன். என் எண்ணத்தை நிறைவேற்ற குருவருளும் துணை நின்றது. சுவாமிகளின் பூர்வாசிரம உறவினர்கள் மிகவும் முயன்று செயல்படுத்தினர். குறிப்பாக ராஜபாளையம் திரு. ஏ.வி.கல்யாண வெங்கட்டராமனைப் பாராட்டியாக வேண்டும்.

தொடக்க விழா, ராஜபாளையத்தில் மிகச்சிறப்பாக 20.07.2008ல் நடைபெற்றது. இரண்டாவதாக, தாண்டவராய சுவாமிகள் சமாதி ஆலயத்தில் அந்த பக்தர்கள் சுப்ரமணி, சொக்கலிங்கம், ராமையா, ராமாமிர்தம் அய்யர் போன்றோர் முயற்சியால் 18.08.2008ல் நடைபெற்றது.

“கைவல்ய நவநீதம்” துறையூர் தவநெறி மன்றத்தில் வகுப்பாக நடத்தும் வாய்ப்புக் கிடைத்தது. அதன் பயனாக தவநெறி மன்றத்தில் ஆ.சீராளன் முயற்சியால் 04.01.2009ல் விழா நடைபெற்றது. நான்காவதாக, சுவாமிகள் சந்யாஸ தீக்ஷை பெற்ற கோவிலூர் மடாலயத்தில் 27.12.2008ல் வெகு விமரிசையாக நடைபெற்றது.

இவற்றையெல்லாம் பார்த்து வந்த த.முருங்கப்பட்டி தி.இரா.பஞ்சாமியும், கு.பெ.பாலசுப்ரமணியனும் 16.03.2009ல் முருங்கப்பட்டியில் சுவாமிகள் பட ஊர்வலத்துடன் விழா நடத்தி மகிழ்ந்தனர்.

ஏழாவது விழா – சுவாமிகள் முதன் முதல் மடாதிபதியாக பொறுப்பேற்ற தஞ்சை பால்சாமி மடத்தில் 25.04.2009 ல் நடைபெற்றது.

நிறைவாக, வைரிசெட்டிப்பாளையம் அன்பர்கள் விழா வைரிசெட்டிப்பாளையத்திலேயே நடத்த விரும்பியதால் 10.05.2009ல் நடைபெறுகிறது.

சுவாமிகளின் 80 ஆம் ஆண்டு நிறைவு விழாவில் கே.வி.பி.ஆர். பேட்டை குருபூஜை விழாவில் "மகா.கோவிந்தம்" எனும் நூலை வெளியீடு செய்தோம். நூற்றாண்டு விழாவில் "ஸ்ரீமகா.கோவிந்தம்" என்னும் நூல் – தேனீ சித்பவானந்த ஆஸ்ரமத் தலைவர் ஸ்ரீசுவாமி ஓங்காராநந்தர் ஆசியுரையுடன் வெளி வருகிறது.

சுவாமிகளின் வரலாறு, செந்நாப்புலவர் திரு.சு.சப்தரிஷி அவர்கள் "பூரணத்துவம் நோக்கிய ஒரு புனிதனின் பயணம்" எனும் தலைப்பில் எழுதியிருக்கிறார்கள்.

அடுத்து, சுவாமிகள் அவ்வப்போது வெளியிட்ட நூல்களையும், எங்களுக்குக் கிடைத்த சுவாமிகள் எழுதிய பாடல்களையும் சேர்த்துள்ளோம். சுவாமிகளைப் பற்றி ராம ருக்மணி அம்மையார் எழுதிய குரு ஸ்துதியும், ராஜபாளையம் ஏ.எஸ்.வேலாயுத ராஜா வேதாந்த பாடசாலை பேராசிரியர் புலவர் கொ.பூமிநாத்ன் சுவாமிகள் மீது பாடியுள்ள பாடலும் உள்ளது.

இறுதியில், கோவிலூர் கும்பாபிஷேக மலரில் (1967) சுவாமிகளால் குறிப்பிடப்பட்டுள்ள, சுவாமிகளின் மாணாக்கர்கள் பெயரும், எங்களுக்குக் கிடைத்த நிழல் படமும் சேர்த்துள்ளோம். மலர் வெளிவந்த பின் பலரும் சுவாமிகளிடம் பாடம் கேட்டிருந்தாலும்

எனக்குத் தெரிந்த அன்பர்களின் பெயர் மட்டும் சேர்த்திருக்கிறேன். எனக்குத் தெரியாத பலரும் இருக்கக் கூடும். அவர்கள் என்னை மன்னிக்க வேண்டும்.

சுவாமிகளிடம் பாடம் கேட்க வாய்ப்பில்லாத அன்பர்கள் பலர் – பின்னர் வருந்தியதுண்டு. அவர்களையும், என்னிடம் வேதாந்த பாடம் பயின்ற அன்பர்களையும் பக்தர்கள் என்ற பெயரில் இணைத்திருக்கிறேன். பலர் விடுபட்டிருக்கலாம்.

கடைசியாக 25.07.1991 வியாழனன்று ஸ்ரீரங்கம் பங்களாவில் சுவாமிகளைச் சந்தித்தேன். உடல் நலிந்த நிலையிலும் தெளிவாகப் பேசினார்கள். அடிக்கடி வந்து என்னைப் பார்த்துக் கொள்ளுங்கள் என்றார்.

அடுத்துச் சந்திக்க வாய்ப்பில்லை. 31.07.1991 வியாழன் நள்ளிரவு – சுவாமிகள் விதேக முக்தியடைந்தார்கள் என்னும் தகவல் எங்களுக்குக் கிடைத்தது.

சோகத்தோடு சங்கராஸ்ரமத்தில் நாங்கள் அவரது திருமேனி கொண்டு வரும் வரை காத்திருந்தோம்.

விடியற்காலை திருமேனி கொண்டு வரப்பட்டது. அன்று, முறைப்படி பல சாதுக்களும் அன்பர்களும் பஜனை செய்தபடி ஸ்ரீசங்கராஸ்ரமத்தில் மூலஸ்தானத்தில் சுவாமிகளைச் சமாதி செய்தோம். ஜோதி மறைந்தது – எங்கள் மனதில் இருள் சூழ்ந்தது. தேகாத்ம புத்தியே தலை நின்றது.

ஸ்ரீஇராமாஸ்ரமத்தில் தொடங்கிய சந்திப்பு ஸ்ரீசங்கராஸ்ரமத்தில் முடிந்தது.

| உள்ளே | பக்கம் |
|---|---|
| ஆசியுரை - ஸ்வாமீ ஓங்காராநந்த | 3 |
| ஆசியுரை - ஸ்ரீலஸ்ரீ சத்தியஞான மகாதேவ தேசிக பரமாசாரிய சுவாமிகள் | 6 |
| ஸ்ரீ இராமாஸ்ரமத்திலிருந்து ஸ்ரீ சங்கராஸ்ரமம் வரை | 7 |
| பூரணத்துவம் நோக்கிய ஒரு புனிதனின் பயணம் | 1 |
| திருக்களர் ஸ்ரீவீர சேகர ஞானதேசிக சுவாமிகள் தோத்திரம் | 26 |
| திருக்களர் ஸ்ரீ வீரசேகர ஞான தேசிக ஸ்வாமிகள் திருஎம்பாவை - திருப்பள்ளி எழுச்சி | 34 |
| ஸ்ரீ பகவத்கீதை கூறும் காரண அகங்காரக் கிரந்தி நீக்கத்தால் காரிய காம மரண நீக்கம் | 47 |
| மகாவாக்கிய விசாரம் | 76 |
| யஜுர்வேதத்தின் பிருகதாரண்ய உபநிஷதத்தில் உள்ள அகம் பிரம்மாஸ்மி என்னும் மகா வாக்கிய விசார சங்கிரகம் | 119 |
| மனிதன் எக்காரணத்தினால் உயர்ந்தவன் | 133 |
| சர்வ வேதசாரமான ஸ்ரீ பகவத்கீதை முதலிய சாஸ்திரங்கள் கூறுகின்ற உபதேச சுருக்கக் கருத்துரையான சர்வ துக்கமுறும் காரண வரிசையும் சர்வ துக்கமறும் காரண வரிசையும் | 144 |
| ஹிந்து மத தற்காப்பு | 166 |
| சிந்முத்திரார்த்தம் | 179 |
| துதிகள் | 181 |
| சுவாமிகளின் மாணாக்கர்களும் பக்தர்களும் | 189 |
| சுவாமிகளின் நூற்றாண்டு விழா நடைபெற்ற இடங்கள் | 203 |
| சுவாமிகளின் வரலாற்றுச் சுருக்கம் | 204 |



உ

ஓம் தத் ஸத்

"குருவாய் வருவாய்
அருள்வாய் குகனே"



# பூரணத்துவம் நோக்கிய ஒரு புனிதனின் பயணம்.

**(ஸ்ரீலஸ்ரீ மகா. கோவிந்தசாமி சுவாமிகளின் வரலாறு) - ஆதிரை**

**என்உரை: -**

ஸ்ரீலஸ்ரீ மகா. கோவிந்த சாமி சுவாமிகளின் வாழ்க்கைப் பாதை இத்தொகுப்பு. அவர் நம்மைப் போன்ற மனிதரல்லர். அவர் ஒரு மகான். தெய்வப் பிறவி. நமக்கெல்லாம் சத்குரு. தூய்மையான துறவி.

அவர் வாழ்க்கை; ஒன்றை நோக்கிச் சென்றது அது குறிக் கோள் அன்று. ஏனெனில் அவர் துறவி, துறவிக்கு இலக்கணம் அது தான். துறவிகள் பூரணமாக வேண்டும். அது தான் அவர் கட்குச் சாந்தி. விவேகானந்தர் அப்படித்தான் வாழ்ந்தார்.

அதனால் தான்" பூரணத்துவம் நோக்கிய ஒரு புனிதனின் பயணம் " எனத் தலைப்புச் கொடுத்தேன். இராஜபாளையத்தில் பிறந்தது 'கோவிந்தராஜா 'அவர் இராஜபாளையத்தோடு சரி,19 ஆம் வயதில் கோயிலூரில் உருவெடுக்கிறார் நம்சுவாமிகள். அவர் வாழ்க்கைப் பாதைதான், பூரணத்தை நோக்கிய ஆத்மனின் பயணம்.

அவருள், அநேக உண்மைகள் புதைந்துக் கிடக்கின்றன. அவைகளை வெளிக் கொணர்வதே இத் தொகுப்பு.

"என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே"

என்பது திருமூலர் திருவாக்கு இதில் " தமிழ் செய்யுமாறே" என்பதற்குத் " தமிழ்ப் பாக்களில் என்னைப் பாடுக", என இறைவன் கேட்டான் எனப் பலரும் பொருள் கொள்வர். அவனைப் பாடாத தமிழ்ப் பாக்கள் உண்டா? சங்க இலக்கியங்கள் முதல் இன்று வரை எத்தனை இலக்கியங்கள்! எத்தனைப் புலவர்கள்!, இத்தனை இருந்தும் அவனுக்கு ஆசை விடவில்லையா? இது சரியான பொருளாக இருக்க முடியுமா!

இங்குத் தமிழ் ' என்பதற்குத் தமிழ் வாழ்வு, தமிழ் ஒழுக்கம் எனக் கொள்வதே பொருந்தும்.

மாணிக்கவாசகர், "போற்றி என் வாழ்முதலாகிய பொருளே" என்கிறார், தமிழரின் வாழ்வின் முதற்பொருள் இறைவன். ஆம்! தமிழ் வாழ்வின் முதற் பொருள் இறைவன். அதனால் திருமூலர், 1000 ஆண்டுகள் தவம் செய்து,

" அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது யாரும் அறிந்திலார்
அன்பே சிவமாவது யாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந்தாரே

எனப்பாடினார் "அன்பேசிவம் " என்கிறார்.

இதைத்தான் இறைவன் கேட்டான். தமிழ் மக்களின் வாழ்வின் முதற் பொருள் "அன்பு". "நான் அன்பு வடிவினன்" எனப்பாடு என்கிறார். திருமந்திரம் பரம்பொருளின் எளிமை, பயன்பற்றிப் பாடுகிறது.

முத்தமிழ்ப் பண்ணை அவர்கள், சுவாமிகளின் தலைமைச் சீடர். அருமைச்சீடர் உலகாயத விஷயங்களில் சுவாமிகள் இவரைக் கலந்து ஆலோசிப்பார். சுவாமிகளின் அருமையும் பெருமையும் வெளிஉலகு தெரிந்து கொள்ள முத்தமிழ்ப்பண்ணையே காரணம். இராமகிருஷ்ணருக்கு விவேகானந்தர்போல, நம் சுவாமிகளுக்கு முத்தமிழ்ப் பண்ணை. அத்தகையவர், பண்ணை அவர்கள்

ஆணையிடுவதால் , இதில் ஏதே இருகிறது எனச்சிந்தித்தேன். அதன் காரணம் தான் இத்தலைப்பு. சுவாமிகளின் ஆத்மார்த்தமான அணுகு முறைகளைச் சொல்ல முற்படுகிறேன் சுவாமிகளின் பாதக் கமலங்களைச் சிரமேற்கொண்டு துணிகிறேன்.

சுவாமிகள் அருள் வடிவினர். ஆத்ம விசாரணையிலேயே இருப்பவர். அமைதி அவரது இயல்பு. நடுவு நிலைமை அவரது நோக்கு, பேச்சு, செயல் ஆகியவற்றில் காணலாம். மொத்தமாக அவர் ஒரு ஜீவன் முக்தர்.

சுவாமிகளின் சொரூப நிலையை, அவரது எளிமை அன்பு, பரந்த மனத்தை நேரில் கண்டிருக்கிறேன். சில செய்திகளை, நிறை மனிதரும், வேதாந்த வாழ்வினரும், ஆன்மீகக் காவலரும் ஆகிய இராஜபாளையம் திரு. A.S.வேலாயுதராஜா அவர்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன்.

இவைகளைக் கொண்டு இத் தொகுப்பு உருவாகி உள்ளது. சுவாமிகள் எங்கே! நான் எங்கே! அடியேன் அவரைப் பற்றி எழுத, அவரே எனக்குத் துணை. நூற்றாண்டு விழா நாயகராய சுவாமிகளின் திருவருள், இறையருளாக நம்மைக் காக்க. சுவாமிகளின் அருமைப் பாடுகள் பற்றி எழுத முயல்வது, "குன்றுகுரைத் தெழும் நாயின் " செய்கை. வார்த்தைகளை அவ்வள்ளல் தருவார் என்ற நம்பிக்கையில், எழுதுகோலை எடுக்கிறேன்"எவ்வுடம்பில் எவ்வுயிரும் யாதொன்றால் இடரெய்தின் அவ்வுடம்பில் அவ்வுயிராய் அருள் மொழியும் திருவுள்ளம்" கொண்டவர் நம்குருநாதர்.

**அவதாரம்**

பாரதநாடு பழம் பெரும் நாடு, ஞானத்திலும் மோனத்திலும் நிறைந்தநாடு, வடக்கே இமய மலையில் முனிவர்களும், தெற்கே தேவியும், மற்றும் , இந்திய நாட்டின் முகவரியை உலக நாடுகளுக்குக் கொடுத்த விவேகானந்தத் துறவியும் தவம் செய்யும் புண்ணிய பூமி.

இம் மண்ணின் தெற்குப் பகுதியில், கர்மவீரர் பிறந்த அதே மாவட்டத்தில் நம் ஞான வீரர் பிறந்தார்.

ஆம் , விருது நகர் மாவட்டத்தில் உள்ள இராஜபாளையத்தில் சக்கரராஜாக் கோட்டை எனும் பகுதியில் நம் சுவாமிகள் அவதரித்தார்கள்.

அங்கு, பக்தியில் சிறந்த , வைணவக்குடும்பத்தில் குமாரராஜா – இராஜாம்பாள் அம்மையார் என்னும் தம்பதியினர்க்கு 13.08.1908 தமிழ் கீலக வருடம் ஆடி மாதம் 29 ஆம் தேதி குருவாரம், அமர பக்ஷம் துவிதியை திதி, சதய நக்ஷத்திரம், கும்ப லக்னம் கூடிய நன்னாளில் உதயாதி நாழிகை 31 விநாடி 47க்குச் சரியாக மாலை மணி 6 நிமிஷம் 42 க்கு பிறந்தார்கள்.

சூரிய வம்ச, க்ஷத்திரிய குலத்தில் தோன்றியதற்கேற்ப, 'கோவிந்தராஜா' எனும் பெயர் சூட்டி மகிழ்ந்தனர். சுவாமிகள் , தன் முதல் மொழியாகிய அழுகையைச் சிந்திஅனைவரின் அகத்தைக் குளிரச் செய்தார்.

**குழந்தை சுவாமிகள்**

சக்கரராஜாக் கோட்டை பக்தி நிறைந்த பகுதி. க்ஷத்திரிய குல, ராஜாக்கள் அதிகம் வாழும் பகுதி. எனவே, வைணவ வழிபாடு சிறந்திருந்தது. கோயில்களில் வழிபாடும், பஜனை மடங்களில் பக்திப் பாடல்களும் நிறைந்திருக்கும். மாலையில் கோயில்களும், பஜனைக் கூடங்களும் மக்களால் நிரம்பி வழியும். கோவிந்தராஜா பெண்களின் இடையிலும், ஆண்களின் தோள்களிலும் ஏறிச் சென்று பக்தி மழையில் நனைவார்.

அவரை அறியாமலே இறை நினைவு அவருள் சென்று நிலைத்தது.

**ஆரம்பக் கல்வி**

அவரது பெற்றோர்,குழந்தையின் 5 ஆம் வயதில், ஆரம்பக்

கல்வி பயல அனுப்பினர். தமிழும் , ஆங்கிலமும், அவர்களது தாய் மொழியாகிய தெலுங்கும் பயின்றார். மூன்று மொழிகளையும் நன்கு கற்றார்.

### ஞான நூல்கள்

ஆரம்பக்கல்வி பயின்ற பின்னர், உயர்நிலைக் கல்வி பயிலாது, நாலாயிரத்திவ்யப் பிரபந்தம், திருவாய்மொழி முதலிய பக்திப் பனுவல்களையும், பகவத்கீதை முதலிய, ஞானநூல்களையும் பயின்றார். தமது குல தெய்வமாகிய ஸ்ரீஇராமச்சந்திர மூர்த்தியை வணங்கி வந்தார், அருகில் இருந்த அவர் ஆலயத்திற்குச் சென்று வழிபாடு செய்வார். அமைதியாக இருப்பதே அவரது இயல்பு இவ்வாறு 18 வயது வரை இருந்தார். தமது குடும்பத்தினருக்கு உதவியாகவும் இருந்தார். அப்பகுதிக்கு வரும் சாதுக்களிடம் அன்பாகப் பழகி, அவர்கள் கூறும் அறிவுரைகளை கேட்பார். இவ்வாறு கேட்டுக் கேட்டு, ஜீவ, பிரம்ம ஐக்கிய ஞான நெறிகள் அவர் உள்ளத்தில் தங்கின. வைராக்கிய புருஷராக விளங்கவேண்டிய ஞான வித்து அவருள் தோன்றியது.

### திருமண மறுப்பு

நல்ல உயரமும், திடகாத்திர தேகமும் கொண்ட 'கோவிந்த ராஜா'வுக்கு வயது 19 ஆனது, பெற்றோர்கள் திருமணம் செய்யலாம் என எண்ணி, திருமணம் பற்றிய பேச்சைப் பேசினர். இதைக் கேட்ட சுவாமிகள், சாதுக்கள் மூலம் கேள்வியுற்ற "கோயிலூர் மடத்திற்குச்" சென்றார்.

திகைத்த பெற்றோர், உறவினர்களுடன் சென்று சுவாமிகளிடம் சமாதானம் சொல்லி, அழைத்து வந்தனர். சின்னாட்களில், சுவாமிகளே பெற்றோர்களிடம், தம் கௌ்கையை விளக்கமாகக் கூறி, அவர்களை ஏற்கும் படிச் செய்த பின்னர், கோயிலூர் மடத்திற்கு சென்றனர்.

**துறவியாதல்**

கோயிலூர் , காரைக்குடிக்கு அருகில் உள்ளது. ஸ்ரீ ஜகத்குரு, சங்கர பகவத் பாதாச்சாரிய சுவாமிகளின் அத்வைத ஞான குரு பரம்பரையைச் சேர்ந்தது. அங்கு குருமூர்த்தியாகத் திகழ்ந்தவர். ஸ்ரீ மகாதேவ ஞான தேசிக சுவாமிகள், வேதாந்த ஞான விற்பன்னர், வேதாந்த வாழ்வினர். நிர்வாக சீலர் கருணையில் கடவுள்.

"கல்வியெனும் பல் கடல்" பிழைத்தும்,

"செல்வம் எனும் அல்லலில் " பிழைத்தும்,

அத்வைத ஞான சித்த முடையராகிச் சென்ற, வைராக்கிய புருஷராகிய நம் சுவாமிகளைக் கண்டதும், "வாராய் மகனே" என அன்போடு அழைத்து அருகு இருத்தி, மானஸதீட்சை, சட்சுதீட்சை, ஸ்பரிச தீட்சைகளைக் கொடுத்து ஆசிர்வதித்து, காஷாய சந்நியாசம் கொடுத்தார்கள்.

தீக்ஷா நாமமாக"கோவிந்தசாமி" எனும் நாமம் பெற்றார்கள் அன்று தொட்டு "கு.கோவிந்தராஜா"எனும் நாமத்தோடு இருந்த நம் சுவாமிகள், "மகா கோவிந்தசாமிகள்" என வழங்கலாயினர் "கோவிந்த" எனும் சொல், குருவின் திருவாய் பொலிய வந்ததால், அது மந்திர மாயிற்று , மந்திரபுருஷரன்றோ சுவாமிகள்!

தன்குருவின் முன்னால் நின்றதும், மெய் அரும்பி, விதிர் விதிர்த்து, கண்ணீர் ததும்பி, உள்ளம் பொய்தவிர்ந்து ஒரு சுகம் ஏற்பட்டது. அது தான் ஆனந்தம் எனப்பிற்றை நாட்களில் நம் சுவாமிகள் உணர்ந்தார். (இக் கருத்தை, சுவாமிகளே அடியேனிடம் கூறினார்கள்.)

**துறவு மாணவன்**

மகா . கோவிந்தசாமி சுவாமிகள், தம்குருவாகிய மகாதேவ ஞான தேசிய சுவாமிகளிடம் "நாநா ஜீவவாதக் கட்டளை " முதல் "ஞான வாசிட்டம் " வரையுள்ள , வேதாந்த ஞான சாத்திரங்களையும்;

வேறு இலக்ஷண கிரந்தங்கள் என வழங்கப்பெறும், "விசார சந்திரோதயம் ","பாலபோதம் " "விசாரசாகரம்","பஞ்சதசி" முதலிய வேதாந்த ஞானசாத்திரங் களையும் உபதேச பாடமாகக் கேட்டார். இவைகளில் ஐயம் ஏற்படின், ஆத்மநிஷ்டையுடைய ஞான மூர்த்தியாக விளங்கிய ஸ்ரீ வீரநாராயண ஞானதேசிக சுவாமிகளிடம் கேட்டுத் தெளிந்தார். இவ்வாறு சுமார் 10 ஆண்டுகள் தம் குருவுடன் ஞானத் தவமாகக் கல்விபயின்றார்.

**காசியில் நம்குரு**

சுவாமிகட்கு இப்பொழுது 29 வயது. நீண்ட நாட்களாகவே காசிக்குச் செல்லவேண்டும் என்ற அவா உண்டு. இப்பொழுது அதனுடன் சமஸ்கிருதம் பயில வேண்டும் என்னும் அவாவும் சேர்ந்து கொண்டது. தம் குரு நாதரிடம் விண்ணப்பித்தார். குரு நாதரின் அனுமதி கிடைத்ததும் மகிழ்ந்து, காசிபுறப்பட்டார்.

கங்கையில் நீராடி, விசுவ நாதரைத்தரிசனம் செய்து மகிழ்ந்தார். சில நாட்கள் தங்கி மற்ற தெய்வங்களையும் வணங்கினார். பின் காசியின் அருகில் உள்ள தலங்களைத் தரிசித்துக் காசியினின்றும் புறப்பட்டார். அரித்துவாரம் சென்று கங்கா தரிசனம் செய்து, அதன் அருகில் உள்ள கனகல் எனும் பகுதியில், கங்கைக் கரையில் அமைந்துள்ள ஸ்ரீ சூரத்கிரி மகேசுவரானந்தகிரி மண்டலேசுவர சுவாமிகளின் ஆசிரமத்தில் தங்கினார். அங்கு சமஸ்கிருதம் பயின்றார். பகவத்கீதை முதலிய வேதாந்த ஞான நூல்களைப் பயின்றார்:

நம் சுவாமிகளின் ; தவ பலத்தையும், ஞானத்தின் செறிவையும் அறிந்த மண்டலேசுவரர், ஆசிர்வதித்து, நம் சுவாமிகளுக்கு, "கோவிந்தானந்தகிரி சுவாமி" என்கிற நாமத்தைச் சூட்டினார். ஓராண்டு காலம், அங்கு தங்கி, பல ஞான நூல்களைப் பயின்றார்.

பின்பு, மண்டலேவரரின் அனுமதியுடன், கோயிலூர் வந்து, தம் குருவாகிய ஸ்ரீ மகாதேவஞான தேசிக சுவாமிகளின் அருகிருந்தார்.

("என் பக்கத்திலேயே இரு" என குருதேவர் ஆணை இட்டதாகச் சுவாமிகள் கூறினார்)

**தஞ்சாவூர் வருகை.**

நம்குரு தேவர், கோயிலூரில் ஞானத்தவம் பயின்று, ஆத்மதரிசனத்தில் லயித்திருந்தார். அப்பொழுது தஞ்சை, கரந்தை ஸ்ரீ பாலைய ஞானதேசிக சுவாமிகள் மடாலயத் தலைவராக இருந்த, ஸ்ரீவீர கிருஷ்ணசுவாமிகள் தமது மூப்பின் காரணமாக. அந்தியகாலம் நெருங்கியதை உணர்ந்து, தமக்கு அடுத்ததாக அம் மடத்திற்குத் தலைவரை நியமிக்க வேண்டும் என, ஒரு சாது மூலம், கோயிலூர் மடத்தின் தலைமைக்குச் செய்தி அனுப்பினார்.

இதைக் கேட்ட, ஸ்ரீ மகாதேவ ஞான தேசிக சுவாமிகள், நம் சுவாமிகளே அதற்குத் தகுதியானவர் எனத்தேர்ந்து, நம் சுவாமிகளை அழைத்து, தஞ்சாவூர் ஸ்ரீ பாலையஞான தேசிக சுவாமிகள் மடாலயத்திற்குத் தலைமை வகிக்கும்படி கட்டளை இட்டு, அனுப்பி வைத்தனர்.

நம் குருதேவர், தம் குருதேவரின் அருளாணையின் படி, தஞ்சை, ஸ்ரீபாலைய ஞான தேசிக சுவாமிகளின் மடாலயத்திற்கு (சித்ரபானு ஆண்டு ஆவணி 31) 16.09.1942 ஆம் நாள் தலைமை ஏற்றார். நம் குருநாதர், அம் மடாலயத்தின், பூஜை முதலியவை களையும், விழாக்களையும் சிறப்புற கவனித்து வந்தார். அம் மடாலய நில வருவாயையும் சீர்செய்து, மிகும்படிச் செய்தார்.

கரந்தையில் உள்ள அம் மடாலயத்தின் முன், தமிழ்க்கல்லூரி உள்ளது. அக்கல்லூரிப் பேராசிரியர்கள் சிலர் நம் சுவாமிகளின் திறமையறிந்து சீடராயினர் இவ்வாறு வேதாந்த ஞானநூல்களைப் படித்துச் சிறந்தனர். சுவாமிகள் தஞ்சை சென்றதும் நிர்வாகமும், ஞானசாஸ்திர போதனைகளும் சிறந்தன. துறவியர் கூட்டத்தில் சுவாமிகளுக்கு பெருமையும், மதிப்பும் உயர்ந்தன.

ஸ்ரீ சிவசுப்பிரமணிய சிவானந்த யதீந்திர சுவாமிகள் மடாலயம்.

கோயிலூர் மடாலயத் தலைவர் ஸ்ரீ மகாதேவ ஞான தேசிக சுவாமிகளுடன் உடன் இருந்து ,திருக்களர் ஆண்டவராகிய ஸ்ரீவீரசேகர ஞான தேசிக சுவாமிகளிடம் ஞானேபதேசம் பெற்றவர், காசிவாசி, ஸ்ரீ சிவானந்த யதீந்திர சுவாமிகள். அவர் வேதமொழிபெயர்ப்பாசிரியர். சிறந்த ஞானவான்.

அவர் ஆந்திரமாநிலம், சித்தூர் மாவட்டம், ஏகாம்பரக்குப்பம் குமார வெங்கிடப் பெருமாள் ராஜாப் பேட்டை என்கிற ஊரில், ஒரு சிறந்த மடாலயம் நிறுவினார். அதற்குத் தம் உபாசனாமூர்த்தியாகிய சிவசுப்பிரமணியர் பெயரால், ஸ்ரீ சிவ சுப்பிரமணிய மடம் என்று பெயரிட்டார். அங்குத் தமது சீடர்கட்கு ஞானோபதேசம் புரிந்து வந்தார். பின்பு சமாதி ஆனார். அதன்பின்னார் அம்மடம், ஸ்ரீ சிவசுப்பிரமணிய சிவானந்த யதீந்திர சுவாமிகள் மடம் என வழங்கலாயிற்று.

ஸ்ரீமகா தேவ ஞான தேசிக சுவாமிகளை முதல் குருவாக அடைந்து, அங்கு நடைபெற்ற பாட முறையான பதினாறு நூல்களையும் உபதேசப் பாடமாகக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்த பின்னர், ஸ்ரீசிவானந்த யதீந்திர சுவாமிகள் திருக்களர் ஸ்ரீ ஆண்டவர் ஆலயம் வந்திருந்தபோது, அவர்களை இரண்டாம் குருவாக அடைந்து சமஸ்கிருத "ஜீவன் முக்தி விவேகம்" என்னும் சிறந்த வேதாந்த ஞான அநுபூதி நூலை உபதேசப் பாடமாகக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்தனர்.

இவ்வாறு ஸ்ரீ மகாதேவ ஞான தேசிக சுவாமிகளாகிய முதல் குருவுக்கும், ஸ்ரீசிவானந்த யதீந்திர சுவாமிகளாகிய இரண்டாம் குருவுக்கும் சீடரான, ஸ்ரீமகாகோவிந்த சுவாமிகள் சர்வதாரி வருஷம் புரட்டாசி மாதம் 2 ஆம் தேதி (17.09.1948) வெள்ளிக்கிழமை முதல் ஸ்ரீசிவசுப்ரமணிய மடாலயத்திற்கு மூன்றாம் மடாதிபதியாகப் பொறுப்பு ஏற்றார்.

ஸ்ரீவீர. சிவானந்த யதீந்திர சுவாமிகள் சரித்திரம் நமது சுவாமிகளால் 1986 ஆம் ஆண்டு ஏகாம்பரக் குப்பம் மடத்தால் வெளி வந்துள்ளது.

அம் மடத்திற்குச் சரியான தலைமை இன்மையின் நம் சுவாமிகள் அங்கு சென்று மடாதிபதியாகத் திகழவேண்டிய தாயிற்று, தஞ்சை மடத்திற்கு ஸ்ரீ மகா வாசுதேவ சுவாமிகளைத் தலைவராக நியமித்துவிட்டு நம்சுவாமிகள் அங்குச் சென்றார்.

ஏகாம்பரக்குப்பம் பேட்டையில், நம் சுவாமிகள், பூஜைகள், விழாக்கள் ஆகியவற்றைக் கவனித்துக் கொண்டு, வேதாந்த பாடங்களும், நடத்திக் கொண்டு, ஆத்மத்தியானத்தில் மூழ்கி, அமைதியாக இருந்தார்கள்.

ஏகாம்பரக்குப்பம் பேட்டை என்பது, நகரி–சித்தூர் சாலையில் நகரியை ஒட்டி உள்ள சிறிய கிராமம். அவ்வூரில் "முதலியார்" இன மக்கள் அதிகம். அவர்கள் தொழில் "நெசவுத் தொழில்' ஆரம்பக் கல்வி கூடப் படிக்காதவர்கள் அதிகம்.

இத்தகைய ஊரில் உள்ளது. ஸ்ரீ சிவசுப்பிரமணிய சிவானந்த யதீந்திர சுவாமிகள் திருமடம். இம்மடத்தின் தலைவர் நம் சுவாமிகள்.

இவ்வூரில் பு.சா.வெங்கடேச முதலியார் குடும்பம் ஒன்று. அவரது அண்ணார் குடுமபமும், அவர் குடும்பமும் நம் மடத்திற்கு வேண்டிய குடும்பங்கள் பு.சா.வெங்கடேச முதலியார் மடத்தின் நிர்வாகி. அவர் நம் சுவாமிகளின் சீடர். நல்ல பக்தர். தேவார திருவாசகங்களை நன்கு பண்ணுடன் பாடக் கூடியவர் . அவரது உழைப்பாலும், நம் சுவாமிகளின் வழிகாட்டுதலாலும் மடம் மிகவும் பொலிவு பெற்றது. "மகேஸ்வரபூஜை மண்டபம்" இவர்களது பணியின் அடையாளம்.

சுவாமிகளிடம், வேதாந்தபாடம் கற்றவர் அதிகம், பக்கத்து கிராமங்களிலிருந்தும் பலர் வந்து கற்றனர். இன்றும், கைவல்ய நவநீதப் பாக்களை மனப்பாடமாக சொல்லக்கூடிய சிலர் உள்ளனர்.

மடத்தில் தேவார வகுப்புகள் நடக்கும். தேவாரம் பாடக்கூடிய சிறார்கள் உள்ளனர், அவர்கள் ஆரம்பக்கல்விகூடப் படிக்காதவர்கள். ஆண்டு தோறும், ஸ்ரீ சிவானந்த யதீந்திர சுவாமிகள் குருபூஜை மிகச் சிறப்பாக நடைபெறும், அன்று ஊரே விழாக்கோலம் தான். இரவு முழுவதும் கச்சேரியும் வாணவேடிக்கைகளும் நடைபெறும். அவ்விழாவின் சிறப்பு மகேஸ்வர பூஜைதான். உண்மையாகப் பசித்த ஏழைகள் நூற்றுக் கணக்கானவர் உண்பர். அவர்களோடு நம்சுவாமிகளும் சாதுக்களும் உண்பது கண்கொள்ளாக்காட்சி.

நம் சுவாமிகள் மீது பக்தி கொண்ட மக்கள் அவர்கள். அவர்களை "குகபக்தர்கள்" என்று செல்லமாக அழைப்பார் நம் சுவாமிகள்.

இன்றும் அதே பொலிவுடன் விளங்குகிறது திருமடம். சில திங்கட்கு முன்னர், அதாவது கடந்த 06.02.2009 வெள்ளிக்கிழமை, மடாலயத்தின் ஜீர்ணோத்தாரண மகாகும்பாபிஷேகமும், சுவாமிகளின் நூற்றாண்டு விழாவும், சிவானந்தரின் குருபூஜை விழாவும், இன்றைய நிர்வாகி, உயர்திரு. பி.எஸ்.வெங்கடேச முதலியார் மகன் பி.வி. கங்காதர முதலியார் அவர்களால் சிறப்பாக நடந்தேறின. தந்தையைப் போலவே, திரு பி.வி. கங்காதர முதலியாரும் நம் சுவாமிகள் மீது பாசமும் , பற்றும் கொண்டவர் அவரது முயற்சியால் திருமடம் மேலும் மேலும் அழகு பெற்று விளங்குகிறது.

இத்திருமடத்திற்கு, நம் சுவாமிகள் சென்றதும், ஆந்திர மாநிலத் துறவிகளிடையே பெரும் புகழ் பெற்றார்கள். "அத்வைத பாநு" எனும் பட்டமும் பெற்றார்கள்.

**மீண்டும் பாலைய சுவாமிகள் திருமடம்.**

தஞ்சாவூர் ஸ்ரீ பாலைய ஞான தேசிக சுவாமிகள் மடாலயத் தலைவராக இருந்த ஸ்ரீ மகா வாசு தேவசுவாமிகள் 1956 டிசம்பரில் விதேகமுக்தி அடைந்தார்கள். இந்நிலையில், நம் சுவாமிகள் தஞ்சாவூர் வந்து, ஸ்ரீ பாலைய ஞானதேசிக சுவாமிகள் திருமடத்தின் பொறுப்பை ஏற்றார்கள்.

ஏகாம்பரக்குப்பம் பேட்டையில், பாமர மக்களுடனும், ஏழை மக்களுடனும், நாகரிகம் இல்லா மக்களுடனும் பழகிய நம் சுவாமிகள்; தஞ்சையில் பட்டதாரிகளுடனும், பழகினார் இரண்டு இடங்களிலும், சுாவமிகள் சுவாமிகளாகவே இருந்தது வியப்பான விஷயம். சுவாமிகள் சொல்லுவார், “உடல்தான், தான்என நினைப்பவன், மற்ற உடல்களோடு,பேசுவான் அப்பொழுது பேதங்கள் ஏற்படும். ஆத்மாதான் தான் என நினைப்பவன், ஆத்மாவோடு பேசுவான். அப்பொழுது பேதம் ஏற்படாது, ஆனந்தம் ஏற்படும் ” என்பார். இவர் தான் நம்குரு மகா கோவிந்தசாமிகள்.

அப்பொழுது , நம் சுவாமிகள் , தஞ்சாவூர் மடாலய ஆலயத்தில் சிலதிருப்பணிகள் செய்தார்.

**ஜகத்குரு ஆசி பெற்ற, நம்குரு**

1959 ஆம் ஆண்டு ஜீலை மாதத்தில்; சிருங்ககிரி, ஸ்ரீ சாரதா பீடம், ஜகத்குரு ஸ்ரீ அபிநவ வித்யாதீர்த்த சங்கராச்சாரிய சுவாமிகள் தஞ்சாவூர் வருகை தந்தார். நம் சுவாமிகள் அவரை வணங்கி, திருமடத்திற்கு எழுந்தருள வேண்டும் என வேண்டினார். அவரும் இசைந்தார். அதன் படி, 06.07,1959 திங்களன்று; ஜகத்குரு, பாலைய சுவாமிகள் திருமடத்திற்கு எழுந்தருள, நம் சுவாமிகள் பூர்ணகும்பம் காட்டி, மேளதாளம் முழுங்க, அன்புடன் அழைத்து, மலர் பீடத்தில் அமரச்செய்து, விதிப்படி பாத பூஜை செய்து வணங்கி ஆசி பெற்றோர். இவ்வாறு தவசிரேஷ்டர்களின் ஆசிகளை நம் சுவாமிகள் பெற்றார்.

**நன்னிலம் செல்ல விரும்புதல்**

இவ்வாறு ஆத்மாதியானத்தோடு அமைதியாக இருந்த நம் சுவாமிகளின் ,மனதில் நீண்ட நாட்களாக இருந்த எண்ணம் வலுப் பெற்றது. ஆம்! “கைவல்ய நவநீதம்” என்கிற வேதாந்த நூலாசிரியர் ஸ்ரீ தாண்டவேசுவர சுவாமிகளின் சமாதி ஆலயத்தைப் புதுப்பித்தல் என்கிற எண்ணம் தான் அது.

வேதாந்த ஞான சாத்திரங்களின் சாரமான விஷயங்களைச் சாதனம் முதல் சாத்தியம் வரை முறையாகக்கூறும் நூல் அது. ஆத்மப் பிரம்ம ஐக்கிய ஞானத்தை யடைந்த ஞானிகளால் "சிறந்த ஞானநூல் " எனப் பாராட்டப் பெற்ற நூல். சுமார் 500 ஆண்டு களுக்கு முன்னர் தமிழில் தோன்றிய வேதாந்த ஞான நூல். தமிழ்க்கவிகள் மிகச்சிறந்த நடையுடன் அமைந்த நூல். அத்தகைய ஞான நூலை இயற்றியவர் ஸ்ரீதாண்டவேசுவர சுவாமிகள், இவருடைய குரு, ஸ்ரீ நாராயண ஞான தேசிக சுவாமிகள். அந் நூலைச் செய்ய ஏவியவர், குரு ஆணையைத் தலைமேற் கொண்டு இயற்றியவர் சீடர், இவ்விருவர் சமாதிகளும் "பாண லிங்கம் அமைக்கப்பெற்று ஒரே ஆலயத்தில் உள்ளன. இவ்வாலயம் நன்னிலம் என்கிற தலத்தில் அமைந்துள்ளது.

கைவல்ய நவநீதம் என்கிற இந்த நூலின் மீது, மாறாத பற்றுதல் கொண்டவர் நம் சுவாமிகள். கைவல்ய நவநீதக் கவிகளைப் பாடும் போது அகத்தில் ஒரு ஆனந்தமும், புறத்தில் ஒரு புளகாங்கிதமும் உண்டாவதைக் காணலாம். உண்ணும் சோறும், பருகும் நீரும் அவருக்குக் கைவல்லிய நவநீதம் தான். அதைப் பாடம் நடத்துவதில் அவருக்கு இணை அவர்தான். அத்தகைய உணர்வுடைய நம் சுவாமிகள், அதன் ஆசிரியரின் சமாதி ஆலயம் சிதிலமடைந்திருப்பதைத் தாங்கிக் கொள்ள முடியாது தவித்தார். காலத்தை எதிர் நோக்கிக் காத்திருந்தார். காலம் கனிந்ததாக எண்ணினார். நன்னிலம் நோக்கிப் புறப்பட்டார். (ஆம்! நமக்கும் காலம் கனிந்து விட்டது அத்திருப்பணியால்தான், சுவாமிகள் நமக்குக் கிடைத்தார் நாமும் குருவைப் பெற்றோம். இப்பிறவியிலேயே உய்ந்தோம். அவர் பயணத்தைப்படியுங்கள். உண்மை தெரியும்)

நன்னிலம் செல்ல, தஞ்சைப் பாலைய சுவாமிகள் திருமடம், தடையாக இருப்பதை உணர்ந்தார். உடனே, சென்னை வியாசர்பாடி, ஸ்ரீ கர பாத்திரசிவப்பிரகாச ஞானதேசிக சுவாமிகள் மடாலயத்தின் தலைவராக விளங்கிய ஸ்ரீ முக்தானந்த ஞானதேசிக சுவாமிகலின்

சீடர் ஸ்ரீ.மு.கோ.கிருஷ்ண சுவாமிகள் அவர்கட்கும் 13.12.1959 ஆம் நாள் சகல நிர்வாகப் பொறுப்புக்களையும் எழுதி வைத்து, ஒப்படைத்து விட்டுப் புறப்பட்டார்கள்.

நன்னிலம் சென்ற சுவாமிகள் அங்கு இந்து சமய அறநிலையத் துறையினர், அவ்வாலயத்தைத் தங்கள் பொறுப்பில் எடுத்துக் கொண்டு, திருப்பணி செய்ய இருப்பதை அறிந்தார்கள். உடனே அந்தத் துறை ஆணையரிடம் சென்று பேசினார்கள். அவர்கள் சுவாமிகளின் ஆர்வத்தையும், அறிவுடைமையையும், பார்த்து திருப்பணிக்குழு தர்மகர்த்தாவாக நியமனம் செய்து, திருப்பணி மேற்பார்வை செய்யும் பொறுப்பையும் தந்தார்கள். மற்றும் வேறு பல ஆலயங்களின் உபரிநிதிகளில் சில பகுதிகளைத் திருப்பணிக்கு அனுப்பிவைத்தனர்.

நம் சுவாமிகள், திருவாரூர், மடப்புரம் ஸ்ரீ தட்சிணாமூர்த்தி சுவாமிகள் மடாலயத்தில் தங்கிக் கொண்டு, நாள்தோறும் நன்னிலம் சென்று, திருப்பணி வேலைகளைக் கவனித்து வந்தனர்.

ஆலயத் திருப்பணிமிகவும் சிறப்பாக நடந்தது, பெரும் பான்மை, கருங்கல்திருப்பணியாக நடந்தது, ஆலயம் மட்டும் அமைக்காமல், கைவல்ய நவநீதபாட மண்டபமும் அமைத்தார்கள்.

திருப்பணி செய்து, கும்பாபிஷேகம் செய்யவும், ஆலயத்தில் பூஜைகள் நடைபெறவும், நிதி உதவிகளை அன்பர்களிடம் பெற்றார்கள். அது மட்டுமல்லாமல் , காஞ்சி மடத்தின் சார்பிலும் சிலரிடம் நிதி உதவிப் பெற்றார்கள்.

திருச்சி மாவட்டம், கொப்பம்பட்டியில் உள்ள பெரிய பண்ணை திரு. நடராஜ ரெட்டியாரிடம் நிதி உதவி கேட்க, நம் சுவாமிகள் வந்தார்கள்.

கொப்பம்பட்டி, பெரியபண்ணை திரு நடராஜ ரெட்டியார், திருமதி ருக்மணி அம்மையார் குடும்பம் ஆன்மீகக் குடும்பம். கல்விக்கும், தெய்வீகப் பணிக்கும் நிறைய நிதி உதவி அளிக்கும்

குடும்பம். உள்ளூர், ஸ்ரீகுங்குமாம்பிகை உடனுடைற ஸ்ரீசப்தரிஷீஸ்வரர் ஆலய தர்ம கர்த்தாவாகப் பல ஆண்டுகள் இருந்து கும்பாபிஷேகம் செய்தவர்கள்.

பெரிய பண்ணை ரெட்டியாரும், அம்மையாரும் ஞான வேட்கை நிரம்பியவர்கள். இதிகாச, புராண அறிவுடன் , வேதாந்த ஞானமும் உள்ளவர்கள்.

நம் சுவாமிகளைக் கண்டவுடன்; ஞானக் தெளிவை அவரது முகதேஜஸ் மூலமும், தெய்வப்பிறவியை அவரது அங்க லட்சணங்களாலும் , அவரது அருள் உள்ளத்தைச் சொற்களாலும், அ்வரது வைராக்கிய துறவு வாழ்க்கையை அவரது கம்பீரத்தாலும் உணர்ந்தார்கள். அவருக்கு ஆட்பட்டார்கள்.

சுவாமிகள் எதிர்பார்த்த நிதி உதவியைச் செய்து; சுவாமிகளிடம், இங்குத்தங்கித் தங்கட்கு ஞானோபதேசம் செய்யவேண்டும் என்றும், வேதாந்த ஞான நூல் களைக் கற்பிக்க வேண்டுமென்றும் பணிவுடன் வேண்டினர்.

இதைக் கேட்ட சுவாமிகள், அவர்களது, சொல்லையும் ,செயலையும் கண்டு மன நிறைவு கொண்டு ,"துறவிக்கு ஞானதானமே பிரதானம் " என்பதை நினைத்து, அவர்களது வேண்டுகோளை ஏற்றார்.

நன்னிலம் ஆலய கும்பாபிஷேகம் நிறைவுற்ற பின்னர், அவர்களது வேண்டு கோளை நிறைவு செய்வதாக உறுதி கூறி, நன்னிலம் புறப்பட்டார்கள்.

நன்னிலத்தில் ஆலயத்திருப் பணியும், கைவல்ய நவநீத மண்டபத்திருப்பணியும் சிறப்பாக முடித்தது. 04.09.1968 ஆம் நாள் கும்பாபிஷேகம் மிகச் சிறப்பாக நடைபெற்றது.

அதன் பின்னர், ஆலய நித்திய பூஜைகளும், விழாக்களும் சிறப்பாக நடக்க ஏற்பாடு செய்தார்கள். நம் சுவாமிகளின் சீடரும்,

ஆலயத் திருப்பணிக்குப் பொருளுதவி செய்தவருமான, திரு. பத்மநாப முதலியார் அவர்களைத் தர்மகார்த்தாவாக நியமனம் செய்ய ஏற்பாடுகள் செய்து, தம் பொறுப்புகளை அவரிடம் ஒப்படைந்தார் நம் சுவாமிகள்.

**கொப்பமாபுரி வருதல்**

இவ்வளவு பணிகளையும் கர்மயோகியாகச் செய்துவிட்டு **08.06.1970** திங்கட்கிழமை கொப்பமாபுரி வந்தார்கள். கொப்பமாபுரியில் திரு. நடராஜ ரெட்டியாரும் திருமதி. ருக்மணி அம்மையாரும், இவர்களது மகன், திரு. இராமதுரை ரெட்டியாரும் மருமகள் திருமதி யசோதை அம்மையாரும் வாழ்ந்து வந்தனர்.

திரு. நடராஜ ரெட்டியாரும்,திருமதி ருக்மணி அம்மையாரும், நம் சுவாமிகளிடம், வேதாந்த பக்தி ஞான சாஸ்திர உபதேச பாட போதனைகள் கேட்க, ஆனந்த பரவச நிலையில் இருந்தனர்.



நம் சுவாமிகளும் ஏகாந்த வாசமாய் ஆத்மானு சந்தான தியானம் செய்து சச்சிதானந்த சொரூபியாய் இருந்து வந்தார்கள். இந்நிலையில், "இராம ஆசிரமம்" எனும் ஆசிரமத்தை, சுவாமிகள் மேற்பார்வையில் கட்டி முடித்தார்கள். இயற்கைச்சூழலில், எழில் மிக்க ஆசிரமம் அது.

சீடர்களும் சுவாமிகளும்

இராம ஆசிரமத்தில் சுவாமிகள் இருப்பதை அறிந்த சிலர், சுவாமிகளைத் தரிசனம் செய்து, ஆசி பெற்றுச் சென்றனர்.

இந்நிலையில் திருமதி. இராம ருக்மணி அம்மையார் விதேக முக்தி அடைந்தார்கள். அவர்கள் திருமேனி, இராம ஆசிரமத்தில் சமாதி செய்து, விஷ்ணு சாளாக்கிராமம் வைத்து வழிபாடு செய்யப்பட்டு வருகிறது.

1974 ஆம் ஆண்டு கொப்பமாபுரியின் மேல்திசையில் உள்ள வைரிசெட்டிப் பாளையத்திலிருந்து அன்பர்கள் பலர் வந்து சுவாமிகளிடம் பாடம் கேட்டனர். அவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள், முத்தமிழ்ப்பண்ணை திரு. பா. அரங்கராசன், திரு. பொ. பங்காரு சாமி, திரு. சு. நடராசன், திரு.சு. சப்தரிஷ், திரு.ஆ.வே. இராமசாமி, தலைமையாசிரியர் திரு.நா.அரங்கராசன், கோட்டைப்பாளையம் திரு.கிருஷ்ணமூர்த்தி, திரு.தொல்காப்பியன், கொப்பமாபுரி இலி.மாணிக்கம், ஆகியோர் இவர்களில் சிலர் நாள்தோறும் வந்து பாடம் கேட்டனர். சிலர் வாரத்திற்கு ஒரு முறை வந்து பாடங்கேட்டனர்.

ஏகாதசி,திருவாதிரை போன்ற பண்டிகை நாட்களில் நடுஇரவு வரை பாடம் நடத்துவார். அன்று சத்சங்கம் போல வகுப்பு அமையும். சீடர்களைப் பார்த்தவுடன் அவர் முகம் மலரும். இதைக் காணும் போழ்து; சசிவன்னபோதத்தில் கூறப்பட்டுள்ள,

"புணர்ந்த பாவமெலாம்பரி பூரணம்
உணர்ந்த ஞானி விழிபட ஓடுமே"

என்கிற அடிகள் நினைவிற்கு வரும்.

இதில் இன்னொரு சிறப்பு யாதெனில்,இவர்கள் அனைவரும் வந்து பாடம் கேட்பதை , ஆசிரம உரிமையாளர் பெரிய பண்ணை திரு. நடராஜ ரெட்டியாரும், அவர்குடும்பத்தினரும் மகிழ்ந்து வரவேற்பார்கள்.

**குரு என்னும் குணமலையின் சில சிகரங்கள்**

ஆசிரமத்திற்கு வரும் தொழிலாளர்களுக்குச் சம்பளம் கொடுப்பதில் மிகவும் அக்கறையுடன் செயல்படுவார்.அப் பகுதியில், செவ்வாய்க்கிழமை, வெள்ளிக்கிழமை ஆகிய நாட்களில், எக்காரணத்தைக் கொண்டும் பணம் தரமாட்டார்கள் மறுநாள்களில் தான் தருவார்கள்.

நம் சுவாமிகள் இதை ஏற்க மாட்டார்கள். வேலை முடிந்ததும் கூலி தரவேண்டும் என்பார். அது மட்டுமல்லாமல், ஒரு தொழிலாளி அதிகமாக ஒரு மணி நேரம் வேலை செய்தாலும், அதைக் கணக்கிட்டுத் தருவார். இப்படி தொழிலையும், தொழிலாளர்களையும் மதிக்கும் பண்பு உடையவர் நம் சுவாமிகள்.

சுவாமிகள் தலைவராக இருந்த ஒரு மடாலயத் தொடர்பாக ,ஆதரவாளர் ஒரு பிரிவாகவும், ஆதரிக்காதவர்கள் ஒரு பிரிவாகவும் இருந்தனர். இருவரிடையே பனிப்போர் நடந்து கொண்டிருந்தது. அதனால் ஒவ்வொரு நாளும் பிரச்சனைகள் மிகுந்து கொண்டிருந்தன.சுவாமிகள் மட்டும் நடுவு நிலைமை தவறாமல், இரு சாராரையும் மதித்துப் பழகி, அன்பாக பேசுவார்கள். அதனால் பகை உணர்வு மாறியது. இரு சாராரும் சுவாமிகளை மதிப்பார்கள் இப்படி நடுவு நிலைமை தவறாதவர் நம் சுவாமிகள்.

நம் சுவாமிகளுக்கு,வீடுகளுக்குச் சென்று உணவு உண்ணுதல் பிடிக்காது. ஆனால் சீடர்கள் விரும்பி அழைத்தால் மறுக்காது இசைவார். அது மட்டும் அல்லாமல், அவர்கள் இடும் உணவை அன்போடு உண்பார். சீடர்களின் மனநிறைவே, தன் விருப்பமாக வாழ்ந்தவர் நம் சுவாமிகள்.

நம் சுவாமிகள், தம் சீடர்களுக்குப் பணி செய்ய மிகவும் விரும்புவார். ஒரு முறை நானும், நண்பர் முத்தமிழ்ப் பண்ணையும், மற்றும் இருவரும், நம் சுவாமிகளுடன் ஏகாம்பரக் குப்பம் பேட்டை குரு பூஜைக்குச் சென்றோம். காலையில் சேலம் சந்திப்பில்

புகைவண்டி ஏற வேண்டும் காலைச்சிற்றுண்டி கையில் இருக்கிறது. புகைவண்டி தாமதமாக வரும் என அறிவித்தனர். நம் சுவாமிகள் சேலம் சந்திப்பிலேயே சாப்பிடலாம் என்றார்கள்.

நாங்கள் எவ்வளவு சொல்லியும் கேட்காமல், பிடிவாத மாகத்தானே பரிமாறுவேன் எனக்கூறி , எங்களை உட்கார வைத்துச் சுவாமிகளே கடைசி வரை பரிமாறினார்கள்.

"அன்பர் பணி செய்ய என்னை ஆளாக்கி விட்டு விட்டால்
இன்ப நிலை தானேவந் தெய்தும் பராபரமே" என்கிற தாயுமானவர் அடிகளைச் சொல்லிச் சொல்லி மகிழ்ந்தார்கள் நம் சுவாமிகள்.

மதுரை ஆதீனம் அவர்கள் கொப்பம்பட்டி வருகை தந்த பொழுது , ஆரசிமத்திற்கு அவரை அழைத்து பாத பூஜை செய்து, விருந்தளித்து மகிழ்ந்தார்கள். இப்படித் தவசிரேஷ்டர்களை அழைத்துப் பாதபூஜை செய்து, தன்னைப் பக்குவப் படுத்திக் கொள்வார்கள்.

நம் சுவாமிகள் தெய்வீக அருள் பெற்றவர் என்பதைக் காணலாம்.

சில ஆண்டுகட்கு முன்னர் வரை, ஏகாம்பரக்குப்பம் பேட்டை, ஸ்ரீ சிவானந்த யதீந்திர சுவாமிகள் குருபூஜை,ஒவ்வொரு ஆண்டும் ஐப்பசித் திங்களில் நடைபெறும் , நல்ல மழைபெய்யும் காலம், மழையினால் குரு பூஜை நிகழ்வுகள், பாதிக்கப்பட்டு வந்தன.

சுவாமிகள் ஓர் ஆண்டு, குருபூஜை நாள், காலையில் மடாலயத்தில், கோயிலுக்கு முன்னால் இறைவனை வேண்டி வழிபாடு செய்து தேங்காய் உடைத்தார்கள். அன்று முழுவதும் மழை இல்லை. குரு பூஜை சிறப்பாக நடந்தது. மறுநாள் தொடங்கி நல்ல மழை பெய்தது. அதன் பின்னர் இதே வழக்கமாகப் பல ஆண்டுகள் இவ்வழிபாட்டைத் தொடர்ந்தார்கள்.

ஓர் ஆண்டு, ஏகாம்பரக்குப்பம் பேட்டை குருபூஜைக்குச் செல்வதாகச் சுவாமிகள் திட்டமிட்டனர். கொப்பமாபுரியுலிருந்து ஏகாம்பரக் குப்பம் பேட்டை செல்ல ஒரு நாள் பயணம் செல்லவேண்டும்.

சுவாமிகள் என்னையும், முத்தமிழ்ப் பண்ணையையும் அழைத்தார்கள். நாங்களும் ஒப்புதல் கொடுத்தோம் பேருந்தில் செல்வோம் என்றார்கள். சரி என்றோம் இத்திட்டம், திரு. நடராஜ ரெட்டியார் அவர்களுக்குத் தெரிந்தது. திரு. ரெட்டியார் எங்களை அழைத்து "பேருந்துப்பயணம் வேண்டாம். கூட்டமாக இருக்கும். சுவாமிகள் ஏற, இறங்க மிகவும் துன்பமாக இருக்கும். காரில் சென்று வாருங்கள் என்றார்கள்.

இத்திட்டத்தைச் சுவாமிகளிடம் கூறினோம். சுவாமிகள் ஏற்கவில்லை. பேருந்துப் பயணமே நல்லது. காரில் சென்றால் அது பழுதானால் பிரச்சனை எனவே வேண்டாம் என்றார்கள். திரு. ரெட்டியார், காரிலேயே செல்லுங்கள், எப்படியாவது சுவாமிகளை ஏற்கச் செய்யுங்கள் என்றார்.

எங்களின் வற்புறுத்தலினால், சுவாமிகள் ஏற்றார்கள். ஆனால் ஒரு நிபந்தனை இட்டார்கள். "இறைவன் இதை ஏற்றுச் சம்மதித்தால் நாம் காரில் போகலாம்." என்றார்கள் "இறைவன் சம்மத்தை எவ்வாறு அறிவது? " என்றேன் " காரில் உட்காரும் வரை பார்போம்" என்றார்கள் எனக்கு என்ன நடக்குமோ? என்ற ஐயம்.

அந்த நாள் வந்தது. விடியல் 3.30 மணிக்குப் புறப்படத் தயாரானோம் ஆசிரமத்திற்கு முன்னால் அம்பாஸிடர் கார்வந்து நின்றது. காரின் பின் இருக்கையில் சுவாமிகளும் அடியேனும் அமர, முன் இருக்கையில் முத்தமிழ்ப்பண்ணை அமர்ந்தார். ஓட்டுநர் முன் விளக்குகளைப் போட்டார். அப்பொழுது, இரண்டு பெண்கள் ஒவ்வொருவரும் இரட்டைக்குடம் தண்ணீர் எடுத்துக் கொண்டு, காரின் பின்னாலிருந்து இரண்டு பக்கங்களிலும், முன்னோக்கிச் சென்றனர்.

ஒளி வெள்ளத்தில் நன்றாகத் தெரிந்தது. உடனே சுவாமிகள் "வள்ளி, தெய்வயானை நிறைக்குடத்துடன் வாழ்த்தி வழிகாட்டு

கிறார்கள்" என்றார்கள். "அங்கும் யாராவது வரவேற்பார்கள்" என்றும் சொன்னார்கள்.

அந்த விடியிலில் எங்கும் தண்ணீர்க்குழாய் அமைத்திருக்கும் இந்தக் காலத்தில், இரண்டு பெண்கள் இரட்டைக்குடங்களுடன் வந்தது மிகவும் வியப்பாக இருந்தது.

சுவாமிகளின் விளக்கம் வியப்பாக இருந்தது. அதுவும் ஏகாம்பரக்குப்பம் பேட்டையில் யாராவது வரவேற்பார்கள் என்றது, மேலும் வியப்பைத் தூண்டியது. எந்தத் தெய்வம் வரவேற்கும் என அறிய ஆவலாக இருந்தேன்.

அன்று மாலை சுமார் 5.00 மணியளவில் ஏகாம்பரக்குப்பம் பேட்டை மடாலயத்தின் நுழைவு வாயில் முன், கார் நின்றது வாயில் கதவு மூடியிருந்தது. பலர் விழாத்தொடர்பான பணிகளைச் செய்துகொண்டிருந்தனர். முத்தமிழ்ப்பண்ணை அவர்கள், வாயில் கதவைத் திறக்க வண்டியிலிருந்து இறங்கிச் சென்றார்கள்.

அப்பொழுது, சாலையோரம் இருந்த, அதாவது காரின் பக்கமிருந்த பெரிய மரத்தின் மீதிருந்து இரண்டு கருடன்கள் விளையாடிக் கொண்டு, காரின் முன் உள்ள , எஞ்சின் மீது மூடியுள்ள கதவின் (பேனட்) மேல் உள்ள கம்பியில் , ஒரு கருடன் உட்கார்ந்து எங்களைப் பார்த்து சிறகுகளை விரித்து அடித்து, நின்றது, இதைக்கண்டதும் சுவாமிகள், " இதோ பார், திருமால் நம்மை வரவேற்கிறார்" என்றார்.

இக் காட்சியைக் கண்ட அடியேன் உள்ளம் வியப்பின் ஆழ்ந்தது. சுவாமிகளின் சொல் சத்தியமாயிற்று, தெய்வீகச் சக்தி பெற்ற சுவாமிகளின் ஆற்றலைக் கண்டு வியந்தேன்.

இந்த மண்ணுலகிற்கு ஞானிகள் செய்த கொடை மிக அதிகம். இல்லற வாழ்க்கைக்கு ஞானிகள் செய்த கொடை மிக அதிகம்.

இல்லாறவாழ்வை வகுத்த, உலகே போற்றும் இலக்கியம் படைத்தத் திருவள்ளுவர் ஒருஞானி. யோக வாழ்வை விளக்க யோக சாஸ்திரத்தைப் படைத்த பதஞ்சலி ஒருஞானி. காமசாஸ்திரத்தைப் படைத்துக் கொடுத்த வாத்ஸயாயனர் ஒரு ஞானி. வாழ்வியல்

நெறியை, உலகே போற்றி வணங்கக் கீதை வழங்கிய கீதாச்சார்யன் ஒரு தெய்வீக ஞானி.

எத்தனையோ உபநிஷத்துக்கள். அத்தனையும் மனித வாழ்வை விளக்கச் செய்யும் ஞான தீபங்கள் அத்தனையும் தந்தவர்கள் ஞானிகள், இவர்கள் மட்டுமல்லர், இன்னும் எத்தனையோ ஞானிகளின் ஆன்மசக்தி, மின்சக்திபோல், இப்பிரபஞ்சத்தில் கலந்து உயிர்களை வாழச் செய்கின்றது. அதனை நம் குறள்ஞானி "பண்புடையார்ப் பட்டுண்டு உலகம்" என்கிறார் அந்த ஞானிகள் கூட்டத்தில் நம், மகா. கோவிந்த சுவாமிகள் ஒருவர், அவரின் ஆத்மசக்தி, இப்பகுதியையே புனித மாக்குகிறது.

உ

# மகா கோவிந்தம்

**தவத்திரு. மகா.கோவிந்த சுவாமிகளின்**
**80 ஆம் ஆண்டு நிறைவு விழா மலர்**



**தவத்திரு. சற்குரு மகா.கோவிந்த சுவாமிகள்.**
**(சிஷ்யர்கள்)**
**(நிற்பவர்கள் – இடமிருந்து வலமாக)**

1. முத்தமிழ்ப்பண்ணை. பா.அரங்கராசன்
2. ஆசிரியர். பொ.பங்காருசாமி
3. புலவர். சு.சப்தரிஷி, எம்.ஏ., பி.எட்.,
4. புலவர். ஆ.வே.இராமசாமி, பி.லிட்.,

வைரிசெட்டிப்பாளையம், துறையூர் வட்டம், திருச்சி மாவட்டம்.

அப்பூதி அடிகளார் என்னும் ஓர் அடியார் " திருநாவுக்கரசர் எனும் நாமத்தை மந்திரமாகப் பயின்று, பிறவிப் பிணியைநீக்கி, உயந்தார். அதுபோல, நம் சுவாமிகளின் சீடர்கள், கோவிந்தம் எனும் மந்திரத்தைப் பயின்று பிறவிப் பிணியை நீக்கி உய்யலாம். சுவாமிகளின் 80 ஆண்டு நிறைவு விழா 26.10.1988 அன்று ஏகாம்பரக் குப்பம் ஸ்ரீசிவசுப்ர மணிய சிவானந்த யதீந்திர சுவாமிகள் 44 ஆம் ஆண்டு குருபூஜையை கொண்டாடிய அவரின் சீடர்கள் "மகாகோவிந்தம்" எனும் மந்திர நூலை வெளியிட்டு மகிழ்ந்தார்கள்.

நம் சுவாமிகள் எதைக் கண்டும் அஞ்சாது வாழ்ந்தவர், எந்த ஐயமும் இன்றி வாழ்ந்தவர். இறந்த காலம் பற்றிய சிந்தனையும் , எதிர்காலம் பற்றிய சிந்தனையும் இன்றி, நிகழ்காலத்தில் வாழ்ந்தார்கள்.

"வேதாந்த, உபநிஷத, இதிகாச, புராண கருத்துக்கள் எதாக இருப்பினும், அதை அனுபூதி ஆக்குங்கள். அதற்கு ஒரே சாதனம் தியானம் தான்" என்று சொல்லும் சுவாமிகள், எப்போதும் தியான நிலையில் இருப்பார்கள். நமக்கு அமைதியாக இருப்பதுபோல் தோன்றும்.

பட்டங்களும், விருதுகளும் நமக்கு என்ன பயனைத் தருகின்றன? ஒன்று மில்லை. அதனை விரும்புபவன் தன்னைத்தானே எமாற்றிக் கொள்பவன். என்று சுவாமிகள் சொல்வார்கள்.

இவ்வாறு ஜீவன் முக்தராக வாழ்ந்த சுவாமிகள் வாழ்வில் எத்தனையோ நிகழ்வுகள் அத்தனையும் எங்கட்குப் பாடங்கள். எப்படிப் புத்தகத்தைப் படித்துக் குறிப்பெடுக்க வேண்டும் எனக் கற்றுக் கொடுத்தவர் அவர்.

அவரது துறவு வாழ்க்கையை ஒரு கலை வாழ்வாக நாங்கள் ரசித்தோம். அவரது எளிமை, பொறுமை, பழக்க வழக்கங்கள் ஆகியவைகளைக் கற்க விரும்பினோம்.

வெறும் இலக்கியங்களைப் படித்து, அதையே மேடைகளில் பேசி மகிழ்ந்த எங்களை, வாழ்க்கையைப் போதித்து, தவ வாழ்வு வாழ, வழிகாட்டியவர் நம் சுவாமிகள்.

சுவாமிகள் இருக்கும் இடத்தில்; மனம், மொழி , மெய்யால் யாரும் தவறுகள் செய்ய அனுமதிக்கமாட்டார். உடனே கண்டிப்புடன் அதைத்திருத்துவார்.

அவர் வாழ்வில்; எத்தனை நிகழ்வுகள், எத்தனை உரையாடல்கள், எத்தனை வழிபாடுகள், எத்தனைப் பயணங்கள், எத்தனை விழாக்கள், எத்தனை அன்புக் கட்டளைகள், எத்தனை விவாதங்கள் இத்தனையிலும் அழகும், அறிவும், ஆற்றலும் நமக்கு மிகும், எங்கும் கோபமோ, வேகமோ, சலிப்போ காணப்படாது. அவர் வாழ்வை எழுதிக் கொண்டே இருக்கலாம்.

இத்தனையிலும்; எங்கும், எப்பொழுதும், நம் சுவாமிகள் "தான்" என்பதை அணுவளவும் காட்டமாட்டார். தெய்வீகமே நிறைந்திருக்கும் எங்கும் எதிலும் தெய்வதரிசனமே பூரணம்.

அந்தப்பூரணன்; நம்குரு , நம்சுவாமிகள், நம் ஞானத்தந்தை, நம்வழிகாட்டி ; சில மாதங்கள் உடல் நலம் குன்றி இருந்து, திருச்சி தனியார் மருத்துவ மனையில் சிகிச்சை பெற்று வந்தார்கள்.

பிரஜோற்பத்தி வருஷம் ஆடி மாதம் 14 ஆம் தேதி (30.07.1991) கிருஷ்ண பக்ஷம் சதுர்த்தி திதி, பூரட்டாதி நக்ஷத்திரம் கூடிய சுபதினத்தில் இரவு 1 மணியளவில் விதேக கைவல்யம் அடைந்தார். அவரது திருமேனி கொப்பமாபுரி சங்கர ஆஸ்ரமத்தில் முறைப்படி சமாதி செய்யப்பட்டுள்ளது. அருவுருவ மூர்த்தியாகிய இலிங்கத்திருமேனி கொண்டு அருள் பாலிக்கிறார்.

சுவாமிகள் சமாதி ஆலயத்தை கொப்பமாபுரி திருமதி.யசோதை அம்மாள் நிர்வாகம் செய்து கொண்டு மாத குருபூஜையும் ஆண்டு குருபூஜையும் சிறப்பாக நடத்தி வருகின்றனர்.

அவருக்கு முன்னால் நந்தி எம்பெருமானாக, அவரது சீடர் திரு. நடராஜன் சுவாமிகள் (ரெட்டியார்) சமாதியாகி, சுவாமிகளை வணங்கிக் கொண்டிருக்கிறார்.

"தன் மையத்தில் பிரம்மத்தைக் கொண்டவன், இவ்வையத்தில் பூரணனாக வாழ்வான்" என்பது, ரிஷிகள் சொன்ன உண்மை அதற்குச் சான்றாவார் நம் சுவாமிகள்.

இராஜபாளையத்தில், கோவிந்தராஜா பிறந்தார்,. அழுது கொண்டே பிறந்தார். அப்பொழுது மக்கள் இனிப்பு வழங்கி மகிழ்ந்தனர். அழுகின்ற தன்னை மகிழ்வுடன் ஏற்கும் உலகை வென்றார். மகா.கோவிந்தசாமி ஆனார். பூரணனாக வாழ்ந்தார். ஆனந்தமாக விதேகமுக்திஅடைந்தார் இவ்வுலகம் அழுது, தொழுது கொண்டிருக்கிறது.

இது ஒரு ஜீவன் முக்தனின் ஆன்மீகப் பயணம்.

தன்னையும் தனக்கா தாரத் தலைவனை யுங்கண் டானேல்
பின்னையத் தலைவன் தானாய்ப் பிரமமாய்ப்பிறப்புத் தீர்வன்
உன்னை நீ அறிந்தாயாகில் உனக்கொரு கேடுமில்லை
என்னைநீ கேட்கையாலே ஈதுப தேசிக்தேனே

– கைவல்யநவநீதம்

ஓம் பூர்ணமதம் பூர்ணமிதம்
பூர்ணாத் பூர்ண முதச்சயதே
பூர்ணஸ்ய பூர்ண மாதாய
பூர்ணமேவ வஸிஷ்யதே
ஓம் சாந்தி சாந்தி சாந்திஹி

– உபநிஷத்

# திருக்களர் ஸ்ரீவீர சேகர ஞானதேசிக சுவாமிகள் தோத்திரம்

(1949)

## கோயிலூர் ஸ்ரீ மகாதேவ ஞானதேசிக சுவாமிகள் பதிகம்.

### திருக்களர் ஸ்ரீ நாராயண ஞானதேசிக சுவாமிகள் பதிகம்.

### சாத்துக் கவிகள்

**கோயிலூர் மரபு, சிதம்பரம்**
**சங்கத்து பண்டித சித. நாராயணசுவாமி அவர்கள்.**

கோயிலூர் ஞான குருபரனாய் வீடளிக்கும்
வாயி லளித்த மகாதேவ– தூயபரன்
நல்ல தமிழ்ப்பதிகம் நாவலவன் கோவிந்த
வல்லமுனி யாத்தான் மகிழ்ந்து.

திங்களணி வாரடியார் சேருந் திருக்களரில்
தங்குதிரு நாரணனார் தாள்களுக்கு – மங்களமாய்ச்
சாத்திரத்தி னுட்பநிலை தங்குபதி கம்புனைந்தான்
நாத்திருவன் கோவிந்த னன்கு.

**திருமழபாடி - புதுவை சுவாமி சிவானந்தா**

கோவி லூர்நன் மகாதேவக் கோபதப்
பூவி லூருளக் கோவிந்தன் பூத்தவொண்
பாவி லூருஞ்சொற் றேனுணின் பண்ணவர்
காவி லூறுநற் றேனுங் கசக்குமே.

தமக்கு வான்கதிர் நாரண சற்குரு
தமக்குக் கோவிந்த சாமிப திகச்சொல்
எமக்கு மட்டுமோ இப்புவி யைத்தலை
சுமக்குஞ் சேடர்க்குஞ் சோகந் துடைக்குமே.

# கோவிலூர்

# ஸ்ரீமகாதேவ ஞானதேசிக சுவாமிகள் பதிகம்.

## காப்பு

### நேரிசை வெண்பா.

பூமணக்குங் கோயிலூர்ப் புண்ணியம டாலயத்தான்
நாமணக்கும் வேதாந்த நல்லிசையான் – கோமணக்குந்
தேவா மகாதேவ தேசிகனை யான்புகழ
நீவா விநாயகனே நேர்.

### எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

பூ மலி யுயிர்கள் பரமதா மின்பம்
பொருந்தவார் கருணைமா நிதியாய்த்
தேமலி கரத்தின் ஞானமுத் திரையாற்
றேர்ந்திடிற் சீவனும் பரனுந்
தோமற வேக மெனத்தெரித் திதுநற்
சுருதியின் பொருளிதை யறிந்து
சேமமா ரெனவே யருண்மகா தேவ
தேசிகா சரணமே சரணம். 1.

கனவினி லவித்தை காரண மாகக்
காணுசீ வேசுர சகத்தை
நனியுநா னெனதென் றெணுமய லதுபோ
னனவினி லவித்தைகா ரணமாய்த்
துனியசீ வேச சகத்தைநா னெனதென்
றுயரகக் கிரந்தியார்ந் தனைதீர்
தினமுனை யறியென் றருண்மகா தேவ
தேசிகா சரணமே சரணம். 2.

தூலதே கந்தா னனமய கோசந்
தொடர்ந்திடு மிலிங்கமாந் தேகஞ்
சாலுபி ராண மயமனோ மயம்பின்
சாருவிஞ் ஞானமா மயமாய்க்
கோலுமுக் கோச மவித்தையா னந்த
கோசமா மறைப்பிவை யலனீ
சீலனே யறியென் றருண்மகா தேவ
தேசிகா சரணமே சரணம். 3.

நனவினிற் றோன்றுந் தூலமே தோன்றா
நலமிலாக் கனவுகா லத்தே
நினைகனாச் சான்ற தாகநீ தோன்றல்
நிதமதா முனதிருப் பதுவா
முனதிருப் புருவந்த தோன்றுகாற் றூல
மொழிந்துதோன் றாததா லலனீ
தினமுற வறியென் றருண்மகா தேவ
தேசிகா சரணமே சரணம். 4.

கனவினிற் றோன்று மிலிங்கமும் தோன்றாக்
கனமுறுஞ் சுழுத்திகா லத்தே
துனுமிருட் சான்ற தாகநீ தோன்றல்
தொலைவிலா வுனதிருப் பதுவா
மினியவுன் னுருவந் தோன்றுகா லிலிங்க
மிறந்துதோன் றாததா லலனீ
தினநனி யறியென் றருண்மகா தேவ
தேசிகா சரணமே சரணம். 5.

சுழுத்தியிற் றோன்று மவித்தையுந் தோன்றாச்
சுகநனாச் சுழுத்திகா லத்தே
முழுச்சிதா னந்த மாகநீ தோன்றல்
முடிவிலா வுனதிருப் பதுவாம்

வழுத்துன துருவந் தோன்றுகா லவித்தை
மாய்ந்துதோன் றாததா லலனீ
செழிப்புற வறியென் றருண்மகா தேவ
தேசிகா சரணமே சரணம். 6.

இவ்வித மோர்காற் காண்பதோர் கால
மில்லதா யறிபடு பொருளாய்
வெவ்வியப் பிரிய மாய்விடப் படலால்
வீவசச் சடத்துய ரதனாற்
கவ்விய மூன்று தேகமா யமைந்து
காணுமைங் கோசமு மலனீ
செவ்விதி னறியென் றருண்மகா தேவ
தேசிகா சரணமே சரணம். 7.

அறிவறி யாமைப் பொருளறக் கோச
மைந்தனின் பாவம பாவ
முறுவதாங் காலு மென்றுமோர் விதமே
யுறவிருந் தறிந்துயர் பிரேமை
யுறைவதாற் சச்சி தானந்த மதனா
லுரியசான் றறிவுநீ பிரிவில்
செறிவதா யறியென் றருண்மகா தேவ
தேசிகா சரணமே சரணம். 8.

வியட்டிதே காதி சான்றதா நீயிவ்
விதமுறுஞ் சமட்டிதே காதி
மயக்கசான் றான சச்சிதா னந்த
வடிவுறு மகண்டமாம் பிரமஞ்
சுயத்துறும் பிரம்ம நீகட வானஞ்
சூழ்மகா வானென வேகந்
தியக்கற வறியென் றருண்மகா தேவ
தேசிகா சரணமே சரணம். 9.

அகண்டபூ ரணமாய்ச் சச்சிதா னந்த
மாமுன திடமக மிதமாய்
நிகழ்மய லுலகத் தோற்றமார் சான்றி
னோர்கனாத் தோற்றநே ரிலையா
மிகழ்கனாத் தோற்றந் தேர்ந்திடிற் சான்றா
மெனச்சகந் தேரினீ யேயாந்
திகழ்ந்துடன் சுகியென் றருண்மகா தேவ
தேசிகா சரணமே சரணம். 10.

சிவமயம்

# திருக்களர்

# ஸ்ரீ நாராயண ஞானதேசிக சுவாமிகள் பதிகம்

### காப்பு

### நேரிசை வெண்பா

சீரார் திருக்களரிற் சேருஞ் சினகரத்தான்
நேரார் நியமத்தான் நிட்டையுளான் – பேராளன்
நாரா யணகுருவி னற்பதிகம் பாடுதற்குத்
தாராய் விநாயகநின் றாள்.

### எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

சீர் மிகுஞ் சீவ பரமெனு மிரண்டுந்
தேர்ந்திடி னேகமே யென்று
சேர்மிகுங் கரத்தின் ஞானமுத் திரையாற்
றெரித்தித னறிவுமாத் திரத்தாற்
பார்மிகும் பந்தத் துயரெலா மறவாம்
பரசுக மறையுரை யிதனைத்
தேர்மிக வெனுநா ராயண ஞான
தேசிகா சரணமே சரணம். 1.

அனவுட லசைவவ் வுடனிழ லசைவென்
றறிந்திடா தடக்கவன் னிழலோ
டினலமர் புரியின் மிகுதலே போல
விருளக மூலமா ரசைவே
மனமுறு மசைவென் றுனாதகத் தடக்கின்
மறிபடா தகமறிற் பரமாந்
தினமுமா ரெனுநா ராயண ஞான
தேசிகா சரணமே சரணம். 2.

தனையருள் குரவ னருள்வணந் தனையே
சாரவைங் கோசமுங் கடந்து
பினைமரு விடுபா ழறிபட லாலே
பேணுநா னன்றென நீக்கித்
தனதுரு சாட்சி யெனலறப் பிரமந்
தானென னழுவியா ரகண்டந்
தினமுமா ரெனுநா ராயண ஞான
தேசிகா சரணமே சரணம். 3.

அனவர தமுமா முயல்வினாற் றனைத்தேர்ந்
தகண்டமாம் விருத்தியார் வுறவே
இனமதா முலகத் திரிபுடி யிலதா
யிலா முயற் கொம்பிலே போல
வினைசக விருத்தி யுதிப்பறத் தனது
விருத்திசாந் தஞ்சமா தியதாந்
தினமுமா ரெனுநா ராயண ஞான
தேசிகா சரணமே சரணம். 4.

நனவினிற் சுழுத்தி யாகிய சமாதி
நாடொறுங் கேட்டுணர்ந் தியற்றக்
கனதிட மாகித் திடமதா ஞானக்
காட்சியா யகங்கரக் கிரந்தி

நினைவுறு மையங் கருமம தொழிந்தே
 நித்தவீட் டின்பமா யமைவாய்
தினமுமா ரெனுநா ராயண ஞான
 தேசிகா சரணமே சரணம். 5.

முனமியற் றறமாம் வினைப்பயன் பினையே
 மூளும வதிட்டநே ரன்றி
யனமயில் கணமே திருட்டமாய்ப் பசித்துன்
 பகன்றிடத் திருத்தியா மதுபோ
னனவினிற் சுழுத்தி யுறுகணந் திருட்ட
 நணுகுதுன் பறப்பர வின்பந்
தினமுமா ரெனுநா ராயண ஞான
 தேசிகா சரணமே சரணம். 6.

தனையுணர் சமாதிப் பிரமவா னந்தத்
 தகுபயன் றிருட்டமென் றறிந்து
மனமுற வுடனே முயன்றடையாது
 மடிதுயர்க் கோசமின் பெனவே
துனுமவன் கோச காரமாம் புழுப்போற்
 றுயரனாய் மரிப்பனாஞ் சமாதி
தினமுமா ரெனுநா ராயண ஞான
 தேசிகா சரணமே சரணம். 7.

சினமுறு மரச னாக்கினை மறுநாள்
 சிரமரி வெனத்தெரி சடனுங்
கனதுய ரடைந்தக் கணமதை நீக்குங்
 கதியுற லியன்மறு கணத்தே
தனதுட னிலைத்த லையமென் றறிந்தோன்
 றனையுறா னேற்றனைக் கொலியாந்
தினமுமா ரெனுநா ராயண ஞான
 தேசிகா சரணமே சரணம். 8.

துனுமொரு கணவா ணாள்கொளக் கோடி
சுவணமீ யினுமுறா தாகத்
தனதுவா ணாளை வீணிலே கழித்த
றருவிலங் கியனிரந் தரமுந்
தனியனாய்ச் சமாதி சார்ந்துமீ காமன்
றகவுனன் மனவியல் சமாதி
தினமுமா ரெனுநா ராயண ஞான
தேசிகா சரணமே சரணம். 9.

அனகமாஞ் சொருப நிட்டையி லோர்கா
லற்பமார் மறதியே கால
னுனையுறா தகற்றென் சனச்சுகா தீய
வுரைமுறை யெதிரதாக் காக்குந்
தனதறி வினர்க்கின் றதிரவாந் துன்பென்
றமிழ்மறை முறைசமா திசுகந்
தினமுமா ரெனுநா ராயண ஞான
தேசிகா சரணமே சரணம். 10.

## கொப்பமாபுரி ஸ்ரீ பஞ்ச மூர்த்திகள் துதி

சீர்மிகுந் திலங்கும் கொப்பமா புரியார்
திருத்தல நட விநா யகனைத்
தார்மிகுஞ் சண்மு கேசனைப் பதியாம்
சத்தரி ஷீசுர இறையைப்
பேர்மிகுங் குங்கு மாம்பிகை யனையைப்
பேணு சின் முத்திரை காட்டும்
தேர்மிகும் ஆதி பரமசற் குருவாம்
தெஷணா மூர்த்தியைப் பணிவாம்.

# திருக்களர்
# ஸ்ரீ வீரசேகர ஞான தேசிக ஸ்வாமிகள்
# திருஎம்பாவை - திருப்பள்ளி எழுச்சி

## முகவுரை

நமக்கு, நம் குருமூர்த்தியாகிய திருக்களர் ஆண்டவர் என்னும் ஸ்ரீ வீரசேகர ஞான தேசிக ஸ்வாமிகள் மீது, மாணிக்கவாசக சுவாமிகள் – ஆண்டாள் – தத்துவராய சுவாமிகள் போன்று, திருஎம்பாவை – திருப்பள்ளி எழுச்சி பாட வேண்டும் என்ற எண்ணம் உண்டாயிற்று. அங்ஙனமாயினும், பல பேரைக் கொண்டு பாடச் செய்வது நலம் எனத் தோன்றிற்று. அவ்வாறே, ஆற்றல் உடைய துறவியர் பலரைக் கேட்க, அவர்கள் சம்மதம் இன்றி ஆட்டுக் கடாக்கள் முட்டும் முறை போன்று பின் வாங்கினர். அவர்களிடத்துப பாடும் ஆற்றல் மறைந்து அடங்கிக் கிடந்ததனை வெளிப்படுத்தியவுடன், நமது வாக்கை மறுக்காமல், முதல் எண்ணிக்கையில் செய்தவர்கள், சிதம்பரம் கோ.சித.மடம். சிதம்பர ஞான தேசிகரவர்கள் மாணாக்கர், இலக்கண இலக்கிய வேதாந்தம் முறையாகத் துறைபோக அறிந்த நிலகண்ட சுவாமிகள் ஆவார்கள். இவர்கள், நம்மிடத்தும் தர்க்க சங்கிரகம் அன்னம் பட்டீயம் முதன் முறையாகப் பாடம் கேட்டவர்கள்.

இரண்டாவதாகச் செய்தவர்கள், சிதம்பரம், கோ.சித.மடம், சிதம்பர ஞானதேசிகர் அவர்கள் மாணாக்கர், சித.நாராயண சாமிகள் மதுரைத் தமிழ்ச் சங்கத்துப் பண்டித பரிக்ஷையில் தேறி, சம்ஸ்க்ருதத்தில் வியாகரண தர்க்க வேதாந்த முறையாகத் துறைபோகக் கற்றவர்கள்.

மூன்றாவது செய்தவர்கள், கோவிலூர் மடம் மகாதேவ ஞான தேசிகர் மாணாக்கர், கோவிந்த சுவாமிகள், செய்யுளியலோடு வேதாந்தம் முறையாகக் கற்றவர்கள்.

நான்காவது செய்தவர்கள், கோவிலூர் மடம், மகாதேவ ஞானதேசிகர் மாணாக்கர் – அத்வைதாநந்த சுவாமிகள். சங்கீத பண்போடு வேதாந்தம் முறையாகக் கற்றவர்கள்.

ஐந்தாவது, சென்னை குளப்பாக்கம் நாராயண தேசிகர் மடம் மணவாள சுவாமிகள். மாணாக்கர், தேசியக் காங்கிரஸ்வாதி, இலக்கண இலக்கியம் முறையாக வேதாந்தம் கற்றுச் செய்யுளியற்றும் ஆற்றல் வாய்ந்த, அருணகிரி நாதர் போன்ற அருணகிரி நாத சுவாமிகள் ஆவார்கள்.

ஆறாவதாகச் செய்தவர்கள், சிதம்பரம், கோ.சித.மடம், நீலகண்ட சுவாமிகள் மாணாக்கர், இலக்கண இலக்கியம் தர்க்கம் வேதாந்தம் முறையாகத் துறைபோகக் கற்று, வேதாந்தத் தமிழ் வாசக சாலையில் ஆசிரியராக இருந்து, பிரசங்க வல்லமை உடைய ஷண்முகாநந்த சுவாமிகள் ஆவார்கள்.

ஏழாவதாகச் செய்தவர்கள், சிதம்பரம் கோ.சித. மடம், சுப்பராய ஞான தேசிகரவர்கள் மாணாக்கர், இலக்கணம் இலக்கியம் புராணம் வேதாந்தம், சம்ஸ்கிருத மொழி, தென்மொழி முறையாகத் துறைபோகக் கற்று, திருவண்ணாமலை ஈசாந்ய மடாதிபதியாயிருந்த, விரக்த சீலராகிய சாந்தி ஆசிரமத்தில் வசிக்கும் நடேச சுவாமிகள் ஆவார்கள்.

எட்டாவதாகச் செய்தவர்கள், நாம் மிக வேண்டியதற்காகச் சிரமப்பட்டு, குறளைப் பிரமாணமாக வைத்து முறையாகச் சுவையுறச் செய்து இன்புறுமாறு, வேதாந்தம் தர்க்கம் – சிதம்பரம் நாவலர் பள்ளிக்கூடத்தில் இலக்கண இலக்கிய முறையாகத் துறைபோகக் கற்ற, சிதம்பரம், மௌந சுவாமிகள் மடம், செல்லப்ப சுவாமிகள் மாணாக்கர், சபாபதிச் சுவாமிகளாவார்கள். அவர்கள் என்றும் நமது அன்புக்கும் நினைவிற்கும் உரியவர்கள்.

முதலாவது நாம் தான் செய்தோம். நாம் கோவிலூர் மடம் வீரசேகர ஞான தேசிகர் மாணாக்கர், மதுரைத் தமிழ்ச்சங்கம்,

திருநாராயண ஐயங்காரவர்கள் இடம் இலக்கணம் தர்க்கம் முறையாகக் கற்றோம். வாரணாசியில் சம்ஸ்கிருத மொழியில் வியாகரணம் தர்க்கம் சாங்கியம் யோகம் வேதாந்தம் முதலிய நூற்களைக் கற்றோம். காரை மாநகரில் வேதாந்திகள் ஜயக்கொடி நாட்டினோம். ஐம்பது வருஷமாகப் பிரசங்க மாரி பொழிகின்றோம். அநேக நூல் மொழிபெயர்த்தும், அநேக நூலுக்கு உரையெழுதியும், அநேகஞ் செய்யுள் செய்தும், நூறு நூல் கர்த்தாபர சமய பஞ்சாநகர், மண்டலேசுவரர், திரிபாஷா பண்டிதமணி முதலிய விருதுகளையும் பெற்றிருக்கின்றோம், எழுபத்திரண்டு வயதினையும் அடைந்திருக் கின்றோம்.

ஆதலின், இவ்அருமை வாய்ந்த ஒன்பதின்மர் செய்த நூலை, திருப்பூவண மடத்தில் இருந்து, பொருட் செலவு செய்து அச்சிட்டும், ஒன்பதின்மர் உருவப் படங்கள் தயார் செய்தும், செகத்குரு, ஸ்ரீசங்கர பகவத் பாதாச்சாரிய சுவாமிகள் உருவப்படம், கோவிலூர் ஸ்ரீமுத்திராம லிங்க ஞானதேசிகர் உருவப்படம், திருக்களர் ஸ்ரீவீர சேகர ஞான தேசிகர் உருவப்படம் மூன்றையும சேர்த்து, பன்னிரண்டு படங்களும் அச்சிட்டுத் தயார் செய்திருக்கின்றோம்.

அரங்கேற்று விழாக் காலத்தில், ஒன்பதின்மருக்குப் பட்டாடையும், செப மாலையும், திருப்பூவண மடத்துச் செலவிலிருந்து செய்யப்படுகின்றன.

இவ்வாறு, குரு கைங்கரியம் எனக்கருதி, திருப்பூவணம் மடத்திலிருந்து புத்தகம் – படம் – பட்டாடை, ஜப மாலையாவும் சேர்ந்து ரூ.1000 ஆயிரத்துக்குமேல் செலவு செய்து, நல்ல முறையில் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கின்றது என்பதைப் பணிவோடு தெரிவிக்கின்றோம்.

பொங்கும் மங்களம் எங்கும் தங்குக.

இங்ஙனம்,

புத்தக உரிமையாளரும், முன்னின்று இயற்றியவருமான

1957 **காசிகாந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள், திருப்பூவணம்.**

# திருக்களர்
# ஸ்ரீ வீரசேகர ஞான தேசிக ஸ்வாமிகள்
# திருஎம்பாவை

**விநாயகர் காப்பு - நேரிசை வெண்பா**

திருவாரும் தெய்வத் திருக்களர்வீ ரேச
குருவாரும் எம்பாவை கூற – உருவாரும்
தந்திக் கணபதியின் சந்ததா நந்தபதம்
புந்தியுற வைத்தேன் புகழ்ந்து.

**வெண்டளையால் வந்த இயல்தரவு இணைக் கொச்சகக் கலிப்பா**

சீராரும் விண்ணோர் சிறப்பாரும் பூசனைகொள்
பேராரும் மார்கழியில் பேணுதயம் வந்ததுகாண்
நீராரும் வாவி நிறைந்த திருக்களராம்
ஊராரும் வீரேசன் ஓங்குதிருக் கோயிலுறும்
பாராரும் நல்லடியார் பாடுமொலி கேட்டிலையோ
ஏராரும் பண்புடையாய் இன்னும் துயிலுதியோ
நேராரும் போதமருள் நீதியனாம் வீரேசன்
தாராரும் பாதமலர் தாள்பணிவோம் எம்பாவாய். 1.

காலை உறக்குருகுங் கண்விழித்துக் கூவினகாண்
ஏலவுறு சங்கமெலாம் ஈண்டு முழங்கினகாண்
சால ஒளிப்படலம் சார முயன்றதுகாண்
தூல இருட்படலம் தூரத் தகன்றதுகாண்
சீலமுறும் பாங்குடையாய் சீதப் புனல்மூழ்கிக்
கோலத் திருக்களரார் கோமானாம் வீரேசன்
மூலவிருள் ஓடவரும் முத்தியருள் பாதமலர்
ஞாலமுறப் பாடிநிதம் நாம்பணிவோம் எம்பாவாய். 2.

வேதம் பரவுமிகு வித்தகனாம் வீரேசன்
சீதம் தரும் சோலை சேரும் புதுவயலாம்
நீதம் பெறுமூரில் நேரருளால் தோன்றினோன்
போதம் திநம்திநமும் போற்றுமடி யார்க்கருளிப்
பேதம் துரத்துமிகு பேரார்ந்த கோயிலூர்
ஓதும் குருமரபிங் கோங்கிடவார் பீடத்தான்
நாதன் திருக்களரார் நல்லதிருக் கோயிலுளான்
பாதம் பணிந்துநிதம் பாடேலோர் எம்பாவாய். 3.

போற்றும் சமிவநத்துப் பூம்பொழிலார் கோயிலூர்
சாற்றுகரு ணாநிதியாய்ச் சார்ந்தகுரு நாதனாம்
தேற்று சிதம்பரமா தேசிகனைச் சேர்ந்துநிதம்
தோற்றும் பரஞாநம் தோய்ந்து குருபீடம்
ஏற்று மடாலயமும் ஏத்துகொற்ற வாளீசர்
ஆற்றும் திருநெல்லை ஆலயமும் போற்றவமைத்
தூற்றம் உறவருளும் ஓங்குகுரு வீரேசன்
மாற்றமறும் பாதமலர் வாழ்த்தேலோர் எம்பாவாய். 4.

கோயிலூர் என்னும் குருச்சேத் திரமதனில்.
ஆயகுரு பீடத் தமர்ந்தடியார் உள்ள முறும்
தூயசமம் ஆதியாய்ச் சொல்குணங்கள் ஆதரித்து
மாயை அகம் ஆதிகுணம் மாயவுப தேசத்தால்
நேயபர மார்த்தநிலை நேர்வித்தோர் அத்துவித
ஞேயபிர போதமெனும் நீங்கா அரசோடு
தோயுமின்ப வீடுமருள் தொன்மையனாம் வீரேசன்
மேயபதம் பாடிமிகு வீடுறவோம் என்பாவாய். 5.

ஆன தவத்தாற்றல் ஆர்ந்தமுநி தூர்வாசன்
பாந மிகுதீர்த்தம் பாரிசா தத்தருவின்
காநம் இயற்றியதில் காணுமா காரணனாம்
தாந மிகும்பாரி சாதேசன் மாதேவி
ஞாநத் தமிர்தவல்லி நாடுதிருக் கோயிலமைத்

தூநமறும் மாதவமார்ந் துற்றவிறை தாண்டவமும்
தீநமறப் பார்க்கும் திருக்களரார் வீரேசன்
வாநவரும் ஏத்துபதம் வாழ்த்தேலோர் எம்பாவாய். 6.

நாடுதிரு நாவரசர் நல்லதலத் தாண்டகமும்
தேடுமருட் சம்பந்தர் தேவாரப் பண்ணதுவும்
பாடுமிகு மாட்சிமையார் பாரிசா தேச்சுரனார்
கூடுந் திருக்களரார் கோயில் திருத்தீர்த்தம்
நீடுபூங் காமுதலாம் நேர்வனயா வும்புதுக்கி
ஈடகன்ற ஈசனருள் ஈண்டடைந்த வீரேசன்
ஏடவிழ்ந்த பூம்பாதம் ஏத்தித் திநந்தொழுது
வாடுமுளம் போக்கிநிதம் வாழ்த்தேலோர் எம்பாவாய். 7.

வண்டலைக்கும் பூக்கள் வகைவகையாக் கொண்டதிருத்
தண்டலைகள் சூழ்ந்திலகும் தண்ணார் திருக்களரில்
பண்டமைந்த பண்பாளன் பாரிசா தேச்சுரன்றன்
தொண்டமைந்த கோயில் தொகையிரதம் ஐந்தியற்றிக்
கொண்டுகும்ப நீராட்டிக் கோலமிகும் உத்சவமும்
கண்டியற்றும் காலோட்டம் காணுமிறை தேரின்முன்
விண்டுமகா தேவஎன வீடடைந்த வீரேசன்
மண்டுமிரு பாதமலர் வாழ்த்தேலோர் எம்பாவாய். 8.

திங்கள் எனக்குளிரும் தெய்வத் திருநுதலான்
பங்கவினை பாசமடும் பார்வையுறும் நேத்திரத்தான்
சங்கையெலாம் போமாறு சாற்றும் திருவாயான்
துங்கமுறும் சீவபரர் தோய்ந்தென்றும் ஏகமெனும்
பொங்குமிடர் போக்கவரும் பூசனையார் பாதமுளான்
இங்குநமை ஆட்கொண்ட இன்புருவாம் வீரேசன்
மங்கலமும் பாடிநிதம் வாழ்த்தேலோர் எம்பாவாய். 9.

துன்னுமஞ் ஞாநமெனும் தோடவிருள் ஓடவரும்
உன்னுமெய்ஞ் ஞாநமெனும் உத்தமமாம் சூரியனாம்
பன்னுமுப தேசமழை பற்றறுமெய் யன்பருறும்

இன்னல் அறப்பொழியும் ஏர்ஆர்ந்த மாமுகிலாம்
தன்னை அறியவரும் சந்மார்க்க சாதகர்க்குப்
பின்னம் அறப்போந்த பேரின்ப சாகரமாம்
முன்னும் திருக்களரார் மோநகுரு வீரேசன்
மன்னும் திருப்பாதம் வாழ்த்தேலோர் எம்பாவாய். 10

செம்மை விராகமொடு செய்யும் விவேகமார்ந்
திம்மைமுதல் ஆனவெலாம் இப்பியிலே வெள்ளியெனப்
பொய்ம்மையா ரோபமதால் பூணுபந் தத்துயராம்
வெம்மை தரும் வெள்ளியன்று மேவிப்பி என்னலென
மெய்ம்மையப வாதமதால் வீடெனுமா வின்பெனவே
தம்மையுடன் கேட்டல்உனல் சார்ந்தநுப வத்தார்ந்து
திம்மைவிடல் செய்விதியாம் தேரென்ற வீரேசன்
நம்மையருள் பாதமலர் நாம்பணிவோம் எம்பாவாய். 11

முஞ்சி எனும்புல்லில் மூடுமட்டை நீக்கியதில்
மிஞ்சு நடுவாணி மேவல் எனமறைக்கும்
பஞ்சகோ சங்களையும் பற்றறவே நீக்கியபின்
அஞ்சவுறும் சூநியமும் ஆந்மாவன் றென்றகற்றி
எஞ்சறிவாம் சான்றுநான் என்றறிந்த பின்னரது
கொஞ்சம் எனவிட்டுக் கூடும் அகம்பிரம
நெஞ்சும் நழுவியுனை நேரென்ற வீரேசன்
கஞ்ச மலர்ப்பாதம் கண்ணுறுவோம் எம்பாவாய். 12.

பற்றும் இடத்தில் படுகுகங்கள் ஆனவெலாம்
உற்றமிகு துன்ப உருவாயும் அஞ்ஞாநம்
பெற்றுறுமா ரேபாத்தால் பேரின்பாய்த் தோன்றுமிவை
அற்றழவே செய்வதுவாம் ஆங்காரம் ஆதியறச்
செற்றபவா தித்தவிடம் சேருனதா நந்தபதம்
குற்றமணு காப்பதமாம் கூடும் நனாச்சுழுத்தி
கற்றதனை நித்தியமும் காணென்ற வீரேசன்
நற்றவமார் நற்பாதம் நாம்பணிவோம் எம்பாவாய். 13.

தூண்டுமவா மூலமாம் தொன்மை அகக்கிரந்தி
வேண்டுமெனக் கொண்டாசை வேண்டாமென் றாலறுமோ
பூண்ட புலன்களையும் போக்கறுத்தும் உள்ளிருந்து
மீண்டுமறு காலமவா வேண்டித் துயராற்றும்
ஆண்டுபல கோடியெலாம் ஆசாபோ கந்துய்த்தும்
மாண்டொழியா தாசைமிக மன்னித் துயராற்றும்
நீண்ட அகங் காரமறின் நீங்கும் என்ற வீரேசன்
ஆண்டபதம் பாடிநிதம் ஆடேலோா எம்பாவாய். 14.

ஆங்காரம் ஆர்கிரந்தி ஆன அவா மூலமதை
நீங்காவுன் ஞாநமாம் நிச்சயத்தால் நீக்கிவிடின்
தீங்கான ஆசைஅறும் தெய்வீக முத்தியுறும்
சாங்காலம் சார்தல் அறும் சர்வகா மாப்தியுறும்
பாங்காகும் கேட்டல் உனல் பார்த்துத் தெளிதலினைத்
தேங்காத விக்கிநமாய்ச் சேர்மடமை யந்திரிபு
போங்காலம் ஆம்அளவும் போற்றென்ற வீரேசன்
ஓங்காரம் ஆம்பாதம் உற்றிடுவோம் எம்பாவாய். 15.

சித்தமெனும் மத்தகயம் சீவன்நீ ஏவுமிகு
சத்துவசந் மார்க்கமதில் சாரா திராசதமாம்
குத்திரபுன் மார்க்கமதில் கூடிமிக ஓடுதலால்
சத்துருவாம் ஆங்காரம் சார்காமம் ஆதியெலாம்
மொய்த்து மயக்கிடவே மோதுமிகு சோகமெலாம்
நித்தமுற நேர்ந்திடலை நீக்கிடவுன் மெய்யுணர்வாம்
தத்துவஞா நாங்குசத்தைச் சார்என்ற வீரேசன்
வித்தகமாம் பாதமலர் வேண்டிடுவோம் எம்பாவாய். 16.

தின்றுறங்கி ஈன்றுபரம் சேராது செத்திடலாம்
குன்றுமிவை ஐந்தொழிலும் கோமிருகம் ஆதியுறும்
புன்றொழிலாம் மானிடனாய்ப் பூண்டபிறப் பிற்குமிகை
ஒன்றுமிலை ஆதலினால் உன்னை அறிந்துபரம்
ஒன்றி மரணமிலா தோங்குசுக வீடுறலே

துன்று கடமையெனச் சொல்லி அறிவளித்த
வென்றி உறுகுருவன் வீரேசன் சந்நிதியில்
சென்று பணிந்துபதம் சேர்ந்திடுவோம் எம்பாவாய். 17.

சுத்தசி தாந்மாவாம் சூரியனெக் காலத்தும்
சத்தாய் விளங்குவதாய்த் தானுதயம் ஆவதுவும்
அத்தமநன் ஆவதுவும் அற்றதனால் சந்திமுதல்
இத்தரையோர் நாளும் இயற்றும் கருமமெலாம்
மெத்தவுநாம் செய்ய விதிக்க நீலைத்திருந்த
கர்த்தவியம் தீர்ந்து கதியார்ந்தெக் காலத்தும்
நித்தியமாய் வாழும் நிலையருளும் வீரேசன்
வத்துவதாம் பாதமலர் வாழ்ந்தேலோர் எம்பாவாய். 18.

சுருதியுறு சம்பந்தத் தூயவறி வோர்க்கு
மருவலிலா விண்பூநேர் வாய்ப்பிலதாம் துச்சம்
வருயுத்தி சம்பந்தம் மன்னும் அறிவோக்குத்
தரும்இப்பி வெள்ளிஎனச் சாற்றலரும் மித்தை
மரியுலக சம்பந்த மத்தஅறி வோர்க்கு
இரிவறும் ஆந் மாஎனவே என்றும் அறாச் சத்தாம்
மருள்மாயைத் தோற்றமெனும் மாண்பருள்வீ ரேச
குருவரன்தன் பாதமலர் கூறேலோர் எம்பாவாய். 19.

சகம்புரக்கும் வீரேசன் சார்வடிவம் போற்றி
உகந்துயிர்மெய்ஞ் ஞாநமுற உன்னுமுளம் போற்றி
திகழ்ந்துமகிழ் வெய்தவுறும் தெய்வமுகம் போற்றி
பகிர்ந்துவினை பாசமடும் பார்வையுரம் போற்றி
மகிழ்ந்துமா வாக்கருளும் வாய்வரமும் போற்றி
சுகந்தருசிந் முத்திரையார் தூயகரம் போற்றி
புகழ்ந்துநிதம் போற்றியெனப் பூம்பதமும் போற்றி
அகம் தெளிந்து மார்கழிநீர் ஆடேலோர் என்பாவாய். 20.

திரு எம் பாவை முற்றுப் பெற்றது.

# திருக்களர்
# ஸ்ரீ வீரசேகர ஞான தேசிக ஸ்வாமிகள்
# திருப்பள்ளி எழுச்சி

### விநாயகர் காப்பு- நேரிசை வெண்பா.

சீரார் கணபதியைச் சிந்தை யுறப்போற்றி
ஏரார் திருக்களர்வீ ரேசனுறும் – பேராரும்
பள்ளி எழுச்சிதனைப் பாடினேன் அன்புடனே
விள்ளும் உலகுறவே வீடு.

### எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

திருமிகு மார்கழித் திநகரன் உதயம்
செறியொளி புகுந்தது சென்றதிங் கிருளே,
குருகுகள் மிகமிகக் கூவின எங்கும்
கூடினர் அடியவர் குலவுசந் நிதியில்
வரமிகு புதுவயல் வந்தவான் பொருளே
வானுறும் கோயிலூர் மன்னுமா குருவே,
திரமுறு நெறியருள் திருக்களர் வீர
தேசிக னேபள்ளி எழுந்தருளாயே. 1.

குரங்கினை ஆடடுதல் குவலயர் இயல்பாம்
கூடும்என் மநம்எனும் குரங்கெனை ஆட்டல்,
வரம்பறும் முறையென மதித்துறும் ஆதனை
மாற்றிடத் திருவருள் வழங்குமா முதலே.
பரம்பர வேதநம் பகர்ந்தருள் இறையே
பற்றிடும் பவமறப் பார்த்திடும் குருவே,
சிரம்பெறும் அறிவருள் திருக்களர் வீர
தேசிக னேபள்ளி எழுந்தரு ளாயே. 2.

அகம்எனும் பேய்எனை ஆர்ந்ததன் வசம்செய்
　　தாசையிற் சுழன்றிட ஆட்டுதல் கண்டே,
சுகமிகும் பரஉருத் தோன்றிடக் காட்டிச்
　　சூழ்அகம் அறும்நெறி சொல்லியாண் டவனே,
சகம்உயிர் இறைஎனும் சருவமும் தானாய்ச்
　　சார்ந்திடும் பூரண சான்றதாம் பொருளே,
திகழ்பர பதம்அருள் திருக்களர் வீர
　　தேசிக னேபள்ளி எழுந்தரு ளாயே. 3.

கண்ணினைத் திறந்திடக் காண்பொருள் உளவாம்
　　கண்டகண் மூடிடக் காரிருள் உளதாம்.
பண்ணவர் பகர்பரம் பார்த்திடல் ஆமோ
　　பண்புற எனவுளம் பிரிந்தவெந் தமக்குப்,
புண்ணிய பரநிலை புகன்றதைப் பார்க்கும்
　　போதமாம் விழியருள் புநிதமாம் குருவே,
திண்ணிய தெருள் அருள் திருக்களர் வீர
　　தேசிக னேபள்ளி எழுந்தரு ளாயே. 4.

சத்தென்றும் சநிப்பறச் சார்ந்துள தசத்துச்
　　சநிப்பற என்றுமே சார்ந்தில தென்றாய்,
செத்ததென் றுலகினர் சேர்ந்தழல் எதற்கோ
　　சித்தருள் குருவரா செப்பெனில் கனாப்போல்,
புத்தியஞ் ஞாநத்தால் பொருந்துமா ரோபம்
　　பூண்டழல் அன்றியப் பொருள்களுக் குளவோ,
சித்தம் தேர் என அருள் திருக்களர் வீர
　　தேசிக னேபள்ளி எழுந்தரு ளாயே. 5.

கழுத்தணி மறந்துபின் காணுதல் எனவே
　　கதிமிகும் உனதுருக் கண்டிடல் அன்றி,
வழுத்தயல் ஊர் உறு வகையுறல் அன்றாம்
　　மன்னுமம் முறைஉனைமாசற அறிந்தால்,

அழுத்திய துயர் அறல் அக்கணம் காண்பாய்
அநம்உணப் பசி அறல் அற்றெனும் குருவே
செழித்திடும் வரம் அருள் திருக்களர் வீர
தேசிக னேபள்ளி எழுந்தரு ளாயே. 6.

பேதமும் தோன்றிடப் பீதியும் தோன்றும்
பிரிவறும் பரம்உறப் பீதியும் தோன்றா,
ஓதிய பரம்எனும் உன்னைநீ அறிந்தால்
உள்ளகக் கிரந்தியோ டோங்கையம் வினைபோம்,
தீதுறு மரணமும் தீர்ந்தமிர் தாவாய்
தேர்ந்திடென் றுரைசெயும் தெய்வமா மணியே,
சேதநம் உற அருள் திருக்களர் வீர
தேசிக னேபள்ளி எழுந்தரு ளாயே. 7.

மெய்ப்பொரு ளாமுனை மேவலில் மறப்புன்
வீவதாம் நினைந்துறல் வேண்டுமுன் வாழ்வாம்,
அப்பொருள் மறத்தலால் ஆர்ந்திடும் மேகம்
ஆமதால் சநித்திடும் அகந்தையாம் அதனால்,
பொய்ப் பொருள் பந்தமாம் புகுமதால் துன்பாம்
புகன்றதால் மிருத்தியு புன்மறப் பெனவே,
செப்பிமெய் அருளிய திருக்களர் வீர
தேசிக னேபள்ளி எழுந்தரு ளாயே. 8.

ஒருகண வாழ்வுநாள் உற்றிடக் கோடி
உறுநிதி கொடுப்பினும் உற்றிடா தெங்கும்,
வருகணம் இருப்பதோ மரிப்பதோ அறியாய்
மானுடப் பிறப்பிது மன்னுதல் எளிதோ,
விரிகணம் பலப்பல வீணுறக் கழித்தல்
விலங்கினத் தியல்பதாம் மேவுனை என்றே,
தெரிகுணம் அருளிய திருக்களர் வீர
தேசிக னேபள்ளி எழுந்தரு ளாயே. 9.

விரிவுறு சகமெலாம் மேவுசத் ததுவாய்
விளங்குசித் துருவமாய் வேண்டுயர் சுகமாய்,
மருவிய பிரம்மாய் மன்னுமா முதலே
மாமறை முடிவெலாம் மதித்தவான் பொருளே,
உரம்உறும் கோயிலூர் ஓங்குமா குருவே
உலகெலாம் அடிதொழும் உத்தம இறையே,
திருஉளம் உவந்தருள் திருக்ளர் வீர
தேசிக னேபள்ளி எழுந்தருளாயே. 10.

திருப்பள்ளி எழுச்சி முற்றுப் பெற்றது.

## பஞ்சமூர்த்திகள் துதி

சீர்மிகும் சித்தி விநாயகர் அடியைத்
திரு சிவ சுப்பிரமணியர்
நேர்மிகும் அடியைப் பரசிவன் அடியை
நீடருள் அம்பிகை அடியைப்
பேர்மிகும் நலயே காம்பரக் குப்பம்
பேட்டையா லயமிகுந் தருளும்
தேர்மிகும் குருவாய் திருசிவா னந்தத்
தேசிகர் அடியினைப் பணிவாம்

# ஸ்ரீ பகவத்கீதை கூறும்

# காரண அகங்காரக் கிரந்தி நீக்கத்தால் காரிய காம மரண நீக்கம்

## முகவுரை

அகிலவுலகத்திலும் சகலரும் விரும்புவது துக்க நிவிர்த்தியும் சுகப்பிராப்தியுமேயாகும். இத்தகைய நிலையையே மோக்ஷம் அதாவது வீடு என்று அறிவிற்சிறந்த ஆன்றோர்கள் கூறியுருக்கின்றனர். ஸ்ரீ சாந்தலிங்க சுவாமிகள் அவிரோதவுந்தியார் என்னும் நூலில்,

"அறம் பொருள் இன்பம் வீடாயவோர் நான்கிற்
சிறந்த பயன்வீடென் றுந்தீ பற
தேரின்வீ டேயெலாம் உந்தீ பற"

(இதன் பொருள்) தருமம் அருத்தம் காமம் மோக்ஷம் என்று அறிவுடையோர் அடையும் பயன்களாக எல்லா நூல்களாலும் சொல்லப்படுவனவாகிய நான்கனுள்ளும் வீடுமரணாதி துன்பங்களின்றிய நித்திய நிரதிசய சுகரூப மாதலால் சிறந்த பயனாகவுள்ளது அஃதன்றியும் தருமாதிகளுக்கு உள்ள இலக்கணங்களும் வீட்டிற்கே உளவாகலின் மாசறத் தேருங்காலை அந்நால்வகைப்பயன்களும் அவ்வீடேயாகும். என்று கூறியிருக்கின்றனர். ஆகவே அத்தகைய சர்வ புருடார்த்த வடிவ வீட்டையடைவதற்கு முயற்சிப்பவர்களின் மனத்தைத் திகைக்க (மயங்க)ச் செய்து அவ்வீட்டுநெறியிற் செல்ல விடாமல் தடுத்து பலாத்கரமாகத் துன்ப விஷயங்களை இன்ப விஷயங்களென அத்தியாசிக்கச் செய்து செலுத்தி மரணாதி சர்வதுக்கங்களையும் தருவது காமமே (ஆசையே) யாம். இத்தகைய தடையாயுள்ள ஸ்ரீ

காமத்தை நாசஞ்செய்தாலன்றி மரணாதி சர்வதுக்க நீக்கமும் பரமசுகத்தின் அடைவுமாகியவீட்டை எவரும் அடைய முடியாதென்பது திண்ணமாம்.

ஆகவே அத்தகைய காமமானது அதன் காரணமாகிய அகங்காரக்கிரந்தி நீங்கினாலன்றி வேறு எவ்வுபாயத்தாலும் முழுதும் நீங்குவதில்லை, ஆதலால் அத்தகைய காமத்தின் காரணத்தை யறிந்து நீக்குதல் வாயிலாகக் காமத்தை நீக்குவதற்கேதுவாக அறிய வேண்டிய காமத்தின் காரணம் அதாவது ஏது, சொரூபம், காரியம், பலம், அவதி அதாவது நீக்கம் என்பவற்றின் விபரங்களை ஸ்ரீ பகவத்கீதையில் பகவான் கூறியுள்ளவற்றைத் தொகுத்து ஒரே கவியாக இயற்றி முமுட்சுக்கட்கு உபயோகமாகுமாறு வெளியிடுகின்றேன். முமுட்சுக்கள் அனைவருமறிந்து காமநீக்கஞ் செய்து மரணாதி சர்வதுக்கங்களுமற்ற பேரின்ப வடிவாகிய வீட்டையடையவார்களாக.

இங்ஙனம்.
**மகா. கோவிந்த சுவாமி**
தலைவர்
ஸ்ரீ நாராயண தாண்டவராய சுவாமிகள் மடம்
நன்னிலம்
தஞ்சை மாவட்டம்.

ஜனவரி – 1962.

பகவத்கீதை கூறும்

# காரண அகங்காரக் கிரந்தி நீக்கத்தால் காரிய காம மரண நீக்கம்

(காமத்தின் ஏது, சொரூபம் , காரியம் , பயன் கூறுதலுடன் பரமான்ம ஞான வடிவ தண்டோபாயத்தால் அஞ்ஞான அகங்காரக் கிரந்தி வடிவ ஏது நீங்குவதால் காமத்தின் அவதியும், அப்பொழுது சர்வ புருடார்த்த வடிவ மரணாதி சர்வதுக்க நிவிர்த்தி பரமானந்தப் பிராப்தியாகிய மோக்ஷம் உறுதலும் கூறுதல்.)

**பதினான்குசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.**

மன்னுமால் கீதை மயல்செயும் வஞ்ச
வலிப்பகைக் காமத்தின் ஏது
மருவகங் காரக் கிரந்தியா ரவித்தை
வருமுரு வேண்டிடும் எண்ணம்
துன்னுமா செயல்தீ வினைவிருப் பறினும்
சுயமதி மயக்கிமாத் திறலால்
தூண்டிமா பாவஞ் செயச்செயல் மிகவும்
துய்ப்பினும் அறாதுமிக் குறலாம்
உன்னுமா பயன்சா வாதிதுன் பனைத்தும்
ஒய்வுசா தனங்களாற் பகைதீர்
உபாயநான் கினிற்றன் ஞானமாந் தண்டம்
ஓங்கவே தற்றுடன் அறலாம்
பன்னுமா றெப்போ துளத்துள காமப்
பகையெலாம் நீங்குமப் போது
பயமர ணாதிக் துயரெலாம் நீங்கும்
பரசுக வீடுறும் எனுமே.

**(இதன் பொருள்)**

மன்னும் மால் கீதை= நிலைபேறுடைய ஸ்ரீ திருமால் கூறிய பகவத் கீதையானது; மயல் செயும் வஞ்ச வலிப்பகை = முதலில் மயக்கத்தைச்செய்து பின்பு துன்பவிடயங்களை இன்ப விடயங்களாகக் காட்டுவதாகிய வஞ்சனையைச் செய்யும் வலிமையான சத்துருவாகிய; காமத்தின் ஏது = ஆசையின் காரணம் யாதெனின்; மருவு அகங்காரக் கிரந்தி ஆர் அவித்தை = சாக்ஷாத்தாகப் (நேராக) பொருந்திய அகங்காரக்கிரந்தியும், பரம்பரையாகப் பொருந்திய அஞ்ஞானமும் ஆம்; வரும் உரு ; உண்டாகின்ற உருவம் யாதெனின்; வேண்டிடும் எண்ணம் = எனக்கு இது வேண்டும் என்னும் விருப்பமாகிய எண்ணமாம்; துன்னும் மாசெயல் = (வைராக்கியம் அப்பியாசம் என்னும் இரண்டு சாதனங்களால் கிரம நிக்கிரகம் செய்யாமல் அடநிக்கிரகம் செய்யும் அஞ்ஞானியின் அடக்கு முறைக்கு அடங்காமல்) மிகுந்து செய்யும் காரியம் யாதெனின்; தீவினை விருப்பு அறினும் = (பாப காரியங்களால் துக்கரூபமான பலப்பிராப்தியையறிந்து) பாபகாரியங்களைச் செய்ய இச்சியாத வனாயினும்; சுயமதி மயக்கி = அவனது சுய புத்தியை மயங்கச் செய்து; மா திறலால் = மிகுந்த பலாத்காரத்தினால்; தூண்டி மாபாவம் செயச் செயல் = ஏவி எவ்வகைப்பட்ட மகா பாவ காரியங்களையும் செய்யும்படி செய்தலும்; மிகவும் துய்ப்பினும் அறாது மிக்குறல் ஆம் = மிகுகாலம் மிகுபோகங்களை அனுபவித்தாலும் குறையாமல் (அக்கினியைப் போல) மிகுதியாதலும் ஆம்; உன்னும் மாபயன் = வெறுப்பாகக் கருதும் தன்மையதான மிகுந்த பிரயோஜனம் யாதெனின்; சாவு ஆதி துன்பு அனைத்தும் = மரணம் முதலிய சர்வ துன்பங்களுமாம்; ஒய்வு = நீங்குவதாகிய அவதி யாதெனின்; சாதனங்களால் = வைராக்கியம் அப்பியாசம் என்னும் இரண்டு சாதனங்களால்; பகைதீர் உபயாம் நான்கினில் = சத்துருவை வசஞ்செய்யத்தக்க சாமம் (சமாதானம் ) தானம் (வேண்டியவற்றைக் கொடுத்தல்) பேதம் (வரும் துன்பங்களையுணர்த்துதல் ) தண்டம் (துன்புறுத்தல்) என்னும் உபாயங்கள் நான்கனுள் முன்னவை

மூன்றினாலும் வசமாகாதாதலால்); தன் ஞானமாம் தண்டம் ஓங்க= தனது பரமான்ம ஞானமாகிய தண்டோபாயம் உண்டாகித்திட அபரோக்ஷமாக மிகுந்திடின்; ஏது அற்று உடன் அறல் ஆம் = ஏதுவாகிய காரணம் நாசமாக உடனே நாசமாவதாம்; பன்னும் ஆறு= சொல்லிய விதமாக; எப்போது = எந்தக் காலத்தில்; உளத்து உள காமப்பகை எலாம் நீங்கும் = மனத்தில் உள்ள காமமாகிய சத்துரு முற்றிலும் நாசமாகுமோ; அப்போது = அந்தக் காலத்தில், பயமரண ஆதி துயர் எலாம் நீங்கும் = பயமுறத்தக்க மரணம் முதலிய சகல துன்பங்களும் நீங்கும்; பர சுக வீடு உறும் = பரமானந்தப் பிராப்தி வடிவ மோக்ஷம் (சர்வ புருடார்த்தவடிவ வீடு) அடையப்படும்; எனும் — என்று கூறுகின்றது; ஏ— அசை.

நிலைபேறுடைய ஸ்ரீ திருமால் கூறிய பகவத் கீதையானது, முதலில் மயக்கத்தைச் செய்து பின்பு துன்பவிடயங்களை இன்ப விடயங்களாகக் காட்டுவதாகி வஞ்சனையைச் செய்யும் வலிமையான சத்துருவாகிய ஆசையின் காரணம் யாதெனின் , சாக்ஷாத்தாக (நேராக)ப் பொருந்திய அகங்காரக் கிரந்தியும், பரம்பரையாகப் பொருந்திய அஞ்ஞானமும் ஆம், உண்டாகின்ற உருவம் யாதெனின் , எனக்கு இது வேண்டும் என்னும் விருப்பமாகிய எண்ணமாம், (வைராக்கியம் அப்பியாசம் என்னும் இரண்டு சாதனங்களால் கிரம நிக்கிரகம் செய்யாமல் அடநிக்கிரகம் செய்யும் அஞ்ஞானியின் அடக்கு முறைக்கு அடங்காமல்) மிகுந்து செய்யும் காரியம் யாதெனின், (பாபகாரியங்களால் துக்கரூபமான பலப்பிராப்தியையறிந்து) பாபகாரியங்களைச் செய்ய இச்சியா தவனாயினும் அவனது சுய புத்தியை மயங்கச் செய்து, மிகுந்த பலாத்காரத்தினால் ஏவி எவ்வகைப்பட்ட மகாபாவ காரியங்களையும் செய்யும்படி செய்தலும் மிகுகாலம் மிகுபோகங்களை அனுபவித்தாலும் குறையாமல் (அக்கினியைப்போல) மிகுதியாலும் ஆம், வெறுப்பாகக் கருதும் தன்மையதான மிகுந்த பிரயோஜனம் யாதெனின் மரணம் முதலிய சர்வ துன்பங்களுமாம். நீங்குவதாகிய அவதி யாதெனில், வைராக்கியம் அப்பியாசம் என்னும் இரண்டு சாதனங்களால்

சத்துருவை வசஞ்செய்யத்தக்க சாமம் (சமாதானம்), தானம் (வேண்டியவற்றைக்கொடுத்தல்), பேதம் (வரும் துன்பங்களை யுணர்த்துதல்), தண்டம் (துன்புறுத்தல்) என்னும் உபாயங்கள் நான்கனுள் (முன்னவை மூன்றினாலும் வசமாகாதாதலால்) தனது பரமான்ம ஞானமாகிய தண்டோபாயம் உண்டாகித் திட அபரோக்ஷமாக மிகுந்திடின் ஏதுவாகிய காரணம் நாசமாக உடனே நாசமாவதாம், சொல்லிய விதமாக எந்தக் காலத்தில் மனத்தில் உள்ள காமமாகிய சத்துரு முற்றிலும் நாசமாகுமோ அந்தக் காலத்தில் பயமுறத்தக்க மரணம் முதலிய சகல துன்பங்களும் நீங்கும் பரமானந்தப்பிராப்தி வடிவ மோக்ஷம் (சர்வ புருடார்த்த வடிவ வீடு) அடையப்படும். என்று கூறுகின்றது.

இதற்கு உதாரணம் ஷ பகவத் கீதை. 3 – ஆம் அத்தியாயம்.

**அருச்சுனன் கூறியது.**

சுலோகம் 36.

அதகேன ப்ரயுக்தோ(அ)யம் பாபம் சரதிபூருஷ :
அனிச்சன்னபி வார்ஷ்ணேய பலாதிவ நியோஜித :

(இதன் பொருள்) விருஷ்ணி வம்சத்தில் உதித்த கிருஷ்ணா! இப்புருடன் பாவஞ் செய்வதற்கு இச்சியாவிடினும் பலாத்காரமாய்ப் பிரவிர்த்திப்பிக்கப்பட்ட புருடனைப்போல எதனால் பிரவிர்த்திப்பிக்கப் பட்டவனாய் பாவ கருமத்தைச் செய்கின்றனன். (என்றவாறு)

**ஸ்ரீ பகவான் கூறியது.**

சுலோகம் 37.

காம ஏஷ க்ரோத ஏஷ ரஜோகுண ஸமுத்பவ :
மகா சனோ மகாபாப்மா வித்தயேந மிஹவைரிணம் :

(இதன் பொருள்) அர்ச்சுனா! அவ்வனர்த்த மார்க்கத்தில் ஏவுவது இக்காமமேயாம், இஃதே குரோதமாம், இரஜோகுணத் துண்டாயதாம், மகா ஆகாரத்தையுடையதாம் (அக்கினியைப்போல

எவ்வகைப்பட்ட மகாபோகங்களைப் புசித்தாலும் திருப்தியடைந்து குறையாமல் மிகுந்து மீண்டும் போகங்களை வேண்டி நிற்பதாம்) மிகவும் உக்கிரமாம் (பாப காரியங்களால் துக்கரூபமான பலப்பிராப்தியை யறிந்து பாபகாரியங்களைச் செய்ய இச்சியாத வனாயினும் பலாத்காரமாய் எவ்வகைப்பட் மகாபாவ காரியங் களையும் செய்யும்படி ஏவி நிற்பதாகிய கடுமையுடைய தாம்)ஆதலால் இச்சம்சாரத்தில் இக்காமத்தையே நீ சத்துரு என அறிவாயாக; இக்காமத்தினால் இவ்வுயிர்கட்கு மரணாதி சர்வ துக்கங்களும் உண்டாகின்றன. ஆகையால் முமுட்சுவினால் இக்காம சத்துரு அவசியம் ஜெயிக்கப்படவேண்டும்.

**சங்கை :-** பகவானே! இவ்வுலகில் சத்துருவை வெற்றி கொள்ளும் பொருட்டுச் சாமம், தானம், பேதம், தண்டம் என்னும் நான்கு உபாயங்கள் உள்ளனவாம். அவற்றுள் முதல் மூன்று உபாயங்களால் வசமாகாத சத்துருவை வெற்றி கொள்ளத் தண்டோபாயம் செய்தல் உசிதமாம். ஆனால் அம்மூவுபாயங்களைச் செய்யாமலே முதலிலே அத்தண்டோபாயஞ் செய்தல் உசிதமன்றாம்.

**சமாதானம் :-** (ஸ்ரீ பகவான் அக்காமரூப சத்துருவை வெற்றிகொள்ளுவதில் சாம, தான, பேதம் என்னும் முதன் மூவுபாயங்கட்கு அசம்பவம் கூறியருளும் பொருட்டு அக் காம சத்துருவிற்கு இரண்டு விசேஷணங் கொடுத்தருளுகின்றார்).

அர்ச்சனா! "மஹாசந : மஹா பாப்மா" மகா ஆகாரங்களாலும் திருப்தியடையாமை எதற்கோ அது மகாசனம் எனப்படும்;

அத்தகையது காமமாம். ஆதலால் தான ரூப உபாயத்தால் இக்காம சத்துரு வசமாகாது. கருத்திதுவாம்:- அநேக வகையான மகாபோகங்களையடைந்தும் இக்காமம் திருப்தியை ஒருகாலும் அடைவதின்றாம். இவ்வார்த்தை ஸ்மிருதியின் கண்ணும் கூறப்பட்டுள்ளது. அதாவது இக்காமம் பதார்த்த போகத்தால் ஒருகாலும் சாந்தியையடைவதில்லை. மற்றே அக்கினியானது நெய் காஷ்டம் முதலியவற்றைப் பெய்தலால் விருத்தியடைவதேபோல

இக்காமமும் மிகு பதார்த்த போகத்தால் நாடோறும் விருத்தியை யடையும். இப்பிருதிவியின் கண்ணே நெல் கோதுமை முதலிய அன்னங்களும் , பொன் முதலிய தனங்களும் , கோ, அசுவாதி பசுக்களும், சுந்தர ஸ்திரீகளும், மற்றும் பிறவும் இச்சையையுடைய ஒரு புருஷனுக்குக் கிடைப்பினும் அவை யாவும் காமத்தைத் திருப்திசெய்வதில் சமர்த்துடைய தாகாவாயின் அற்ப போகங்களால் இக்காம சாந்தி யெவ்வாறாகும்? மற்றோ, ஆகாதாம்; இவ்வாறு ஆராய்ந்து விடய விருப்பத்தின் சாந்தியடையக் கடவன். ஆகையால் தானரூப உபாயத்தால் இக்காம சத்துரு வசமாகாது; என்னை? இக்காம சத்துரு 'மஹாபாப்மா' அதாவது அத்தியந்தம்(மிகவும்) உக்கிரமா (கடுமையா) தலினாலாம். இக்காரணத்தால் இக்காமத்தாலே ஏவப்பட்டவன் பாவ கருமத்தால் துக்க ரூபமான பயன் அடையா நிற்பதை யறிந்தும் மீண்டும் அப்பாவ கருமங்களையே செய்கின்றான். இத்தகைய அத்தியந்தம் உக்கிரமான இக்காமரூப சத்துரு சாமம், பேதம் என்னும் இரண்டுபாயங்களாலும் வசமாகாது. என்னை? உலகத்தில் நேரான இயற்கையையுடைய சத்துருவே சாம, பேதோயங்களால் வசமாவன் என்க, என்பதாம். ஆகவே இக்காமரூப சத்துரு சாம, தான, பேத உபாயங்களால் வசமாகாமல் இனிக்கூறுகிறபடி ஆன்ம ஞான ரூப தண்டோபாயத்தாலேயே வசமாகும் என்பதறிவாயாக.

(பூர்வ சுலோகத்தில் அத்தியந்தம் உக்கிரரூபமாய் அக்காமத்தே கூறியருளிய சத்துருத் தன்மையை இப்போது மூன்று திருஷ்டாந்தங்களால் வெளிப்படுத்தியருளுகின்றார்.)

**சுலோகம் 38**

தூமே னாவரியதே வஹ்னிர் யதாதர்சோ மலேன ச
யதோல்பே னாவ்ருதோ கர்ப்பஸ்தோ தேனேத மாவ்ருதம்

**(இதன் பொருள்)**

அர்ச்சுனா! எங்ஙனம் புகையானது அக்கினியை மறைக்குமோ,

அழுக்கானது கண்ணாடியை மறைக்குமோ, கருப்பையானது கருவை மறைக்குமோ , அங்ஙனம் காமமானது ஞானத்தை மறைக்கும். எ—று

(பூர்வம் சங்கிரகமாய்க் கூறிய பொருளை இப்போது விஸ்தாரமாய்க் கூறுகின்றார்)

**சுலோகம் 39**

ஆவ்ருதம் ஜ்ஞானமேதேன ஜ்ஞானினோ நித்யவைரிணா
காமரூபேண கௌந்தேய துஷ்பூரே ணானலேன ச

**(இதன் பொருள்)**

அர்ச்சுனா! இக்காமமே ஞானத்தை மறைப்பதாம். இக்காமம் ஞானிகட்கு நித்தியமும் வைரியாம். இவ்விஷயம் நமக்கு எப்போது அடையப்படுமென்னும் இச்சையே காமத்தின் உருவமாம். அக்கினியைப் போலப் பூர்த்தி செய்விக்க இயலாததாம் எ.று.

(அர்ச்சுனன் சங்கை:– பகவானே! இவ்வுலகத்தில் இடமறியப் பெற்ற சத்துருவே ஜயிக்கப்பெறுவன்; இடமறிந்தாலன்றி ஜயிக்கப்பெறானாதலின் இக்காம சத்துருவை ஜயிக்கும் பொருட்டு முதலில் இதன் அதிஷ்டானத்தை யறிதல் வேண்டும்; எவ்வதிஷ்டானத்தை(ஆதார இடத்தை) ப் பற்றி நின்று இக்காமம் உலகர்க்கு அநர்த்தத்தையீயிமோ அவ்வதிஷ்டானம் யாதாம்? என அர்ச்சுனனுக்கு ஆசங்கை நிகழ ஸ்ரீ பகவான் அக்காம அதிஷ்டானத்தைக் கூறியருளுகின்றார்.)

**சுலோகம் 40**

இந்திரியாணி மனோபுத்தி ரஸ்யாதிஷ்டான முச்யதே
ஏதைர் விமோஹ யத்யேஷ ஜ்ஞான மாவ்ருத்ய தேஹினம்

**(இதன் பொருள்)**

அர்ச்சுனா! இந்திரியம், மனம், புத்தி என்னும் இம்மூன்றும் இக்காமாதிஷ்டானமெனக் கூறப்படும். இம்மூன்றாலும் இக்காமம்

ஞானத்தை மறைத்துத் தேகாபிமானிகட்கு மோகத்தைக் கொடுக்கும். எ—று.

(அவ்விந்திரியாதிகளைப் பற்றியே இக்காமம் தேகாபிமானியை அநேகவகையான மோகமடையுமாறு செய்யுமாதலின் நீ முதலில் அவ்விந்திரியாதிகளையே வெற்றி கொள்வாய். அவை வெற்றி கொள்ளப்படவே அக்காமமும் எளிதாகவே வெற்றி கொள்ளப்படும் என்னும் பொருளை ஸ்ரீபகவான் அர்ச்சுனனை நோக்கிக் கூறுகின்றார்.)

**சுலோகம் 41**

தஸ்மாத்த்வ மிந்த்ரியாண் யாதௌ நியம்ய பரதர்ஷப
பாப்மானம் ப்ரஜஹி ஹ்யேனம் ஜ்ஞான விஜ்ஞான நாசனம்

**(இதன் பொருள்)**

அர்ச்சுனா! (இக்காமத்திற்கு அவ்விந்திரியாதிகள் அதிஷ்டானம்) ஆதலின் நீ (இக்காமத்தினாற்பண்ணப்பட்ட மோகத்திற்கு) முன்னரே அவ்விந்திரியங்களை வசஞ்செய்து (அதனனந்தரம் மனம், புத்திகளையும் வசஞ்செய்து) சர்வ பாவங்கட்கும் மூலரூபமும், குரு சாஸ்திர உபதேசத்தாலுண்டாகிய ஆன்ம பரோக்ஷ ஞானம், அதன் பலமாகிய அபரோக்ஷ விஞ்ஞானம் என்னும் மோக்ஷசாதனமிரண்டையும் நாசஞ்செய்வதும் ஆகிய இக்காமத்தை நாசஞ்செய்வாய். எ—று.

(அர்ச்சுனன் சங்கை:— பகவானே! இக்காமநாசம் செய்யும் பொருட்டுப் பூர்வம் தாங்கள் இந்திரிய வசம் செய்யக் கூறினீர்கள்; அஃதொருவாறு பாகிய சுரோத்திராதிகளை வசஞ்செய்தல் கூடுமாயினும் உள் ஆசையைத் தியாகஞ் செய்தல் மிகவும் கூடாததாம்.)

ஸ்ரீ பகவான் சமாதானம் :— அர்ச்சுனா! முன்னர்

**சுலோகம் 59**

இரண்டாவது அத்தியாயம் 59—ஆம் சுலோகம்)

விஷயா விநிவர்த்தந்தே நிராஹாரஸ்ய தேஹின:
ரஸவர்ஜம் ரஸோ(அ)ப்யஸ்ய பரம் த்ருஷ்ட்வா நிவர்த்ததே

**(இதன் பொருள்)**

(தவம் அல்லது ரோகம் முதலிய நிமித்தங்களால் அந்நமின்மைவடிவ அல்லது இந்திரியங்களால் விஷயங்களைக் கிரகியாமை வடிவ) ஆகாரமின்றிய தேகிக்கு விஷயங்கள் நீக்குகின்றன. ஆனால் அவ்வியஷயங்களில் ஆசை நீங்குவதில்லை (விஷய அநுபவம் நிவிர்த்தியானாலும் விஷய ஆசை நிவிர்த்தியாவதில்லை என்பது கருத்து.) இந்த ஸ்திதப்பிரக்ஞ (திடஞான) புருஷனுக்கோ பரப்பிரஹ்மத்தைக் காண்பதால் அந்தஆசையும் நீங்கிவிடுகின்றது. என்றதில்) "ரஸோ(அ)ப் யஸ்ய பரம் த்ருஷ்ட்வா நிவர்த்ததே " என்னும் வசனத்தே யாம் பரவஸ்துவின் தரிசனமே இரசரூப திருஷ்ணை அதாவது ஆசையின் நிவிருத்தியின் கண்ணே காரணமெனக் கூறினேம்.

அருச்சுனன் சங்கை – பகவானே! எப்பரவஸ்துவின் தரிசனத்தால் அத்திருஷ்ணை அதாவது ஆசையின் நீக்காமோ அப்பரவஸ்து யாதாம்? என அருச்சுனனது ஆசங்கை நிகழ ஸ்ரீ பகவான் அப்பரசப்தத்தின் அர்த்த ரூப தூய ஆன்மாவை தேகாதிகளினின்றும் வேறுபடுத்தி நிரூபித்தருளுகின்றார்.)

**சுலோகம் 42**

இந்த்ரியாணி பராண்ஹுரிந்த்ரியேப்ய: பரம் மன:
மனஸஸ்து பராபுத்திர்யோ புத்தே: பரதஸ்து ஸ:

**(இதன் பொருள்)**

அர்ச்சுனா! சுருதிகள், தூலமும், ஜடமும், பரிச்சின்னமும், பாகியமும் ஆகிய இத்தூல தேகத்தினும் சுரோத்தி ராதிகள் சூட்சமமும் பிரகாசமும், வியாபகமும், ஆந்தரமும் ஆமாதலின் பரங்கள் அதாவது மேலானவைகள் எனக்கூறும். (இவ்வாறே மேலும்

அறிக) சுரோத்திராதிகளினும் அவைகளை விஷயங்களில் பிரேரிப்பிக்கும் சங்கற்ப விகற்பான்மகமான மனம் பரமாம். மனத்தினும் அதனைக்காக்கத்தக்க நிச்சயரூபமான புத்தி பரமாம். புத்தியினும் திருசியமான தேகேந்திரியமனோ புத்திகளைச் சாட்சியா யிருந்தறியும் எவ்வான்மாபரமாமோ அந்த ஆன்மாவே பரசப்தத்தின் பொருளாகிய பரமான்மாவாம். எ—று

(இப்போது பூர்வ வசனங்களாற் சித்தித்த பலிதார்த் தத்தை ஸ்ரீ பகவான் கூறியருளுகின்றார்.)

**சுலோகம் 43**

ஏவம் புத்தே: பரம் புத்த்வா ஸம்ஸ்தப்யாத்மான மாத்மனா
ஜஹி சத்ரும் மஹாபாஹோ காமரூபம் துராஸதம்

(இதன் பொருள்) மகாபாஹுவையுடைய அர்ச்சுனா! இவ்வாறு ("ரஸோ(அ)ப்யஸ்ய பரம் த்ருஷ்ட்வா நிவர்த்ததே".

என்னும் சுலோகத்தே பரசப்தத்தால் கூறப்பெற்ற பரிபூரண) ஆன்மாவை புத்தியினும் பரமென அறிந்து (இச்சாக்ஷியாகிய ஆன்மா புத்தியினும் பரம் என்னும்) நிச்சயஞானமய புத்தியால் (நா நா விதமாகங்களையுடையதாய்க் கலங்கா நிற்கும் ) மனத்தை ஸ்திரம் செய்து துக்கத்தால் வயமாம் (சர்வானர்த்தப் பிராப்தியாக்கும் ) இக்காமரூபமான சத்துருவை நீ நாசஞ்செய்வாயாக. எ—று

**6-ஆம் அத்தியாயம்.**

(அர்ச்சுனன் இப்போது அம்மனத்தின் சஞ்சல சுபாவத்தைச் சர்வவுலக சாத்திரப் பிரசித்தமென்று கூறுகின்றான்)

**சுலோகம் 34**

சஞ்சலம் ஹி மன: க்ருஷ்ண ப்ரமாதி பலவத் த்ருடம்
தஸ்யாஹம் நிக்ரஹம் மன்யே வாயோரிவ ஸுதுஷ்கரம்

(இதன் பொருள்) கிருஷ்ணா! பிரசித்தமான சஞ்சலமும்

பிரமாதியும் பலவானும் திடமுமுடைய இம்மனத்தின் நிக்கிரகத்தை நான் வாயுவின் நிக்கிரகம் போல மிகவும் கடினமென்று எண்ணுகின்றேன். எ–று

சஞ்சலம் = சலனசுபாவம். பிரமாதி = தேகேந்திரியங்களைக் கலக்கமடையச் செய்யும் சுபாவம்; கலக்கமடையச் செய்வது என்பது பரவசமாகப் பண்ணுவதாம். பலவான் = அபிப்பிராயப்பட்ட விஷயத்தினின்றும் இம்மனம் திருப்பமுடியாத பலமுடையதாம். திடம் = அனேக ஜனனங்களின் அ னேகமாயிரம் விஷய வாசனைகளோடு கூடியிருத்தலால் நாகபாசம் போலும் பேதிக்கக்கூடாத திடமுடையதாம். இப்படியே வாசிட்டத்திலும் "கடுமனவன் பேய்கனலிற் கொடிதாகும் மலைகளினுங் கடத்தற் கொண்ணா, நெடுவயிரத்தினும் வலிது கடல்பருகி மேருவினை நேரே பேர்த்துச் சுடுகனலை விழுங்குகினும் நிறுத்தரிது புலன் முழுதுந் தோன்றும் மூலம், கெடுமுலகீ துண்டெனிலுண் டிலதாகில் இலதிதனைக் கெடுத்தல் வேண்டும்" என்று ஸ்ரீ ரகுநந்தனரால் அருளிச் செய்யப்பட்டிருப்பது காண்க.

(இப்போது அவ்வர்ச்சுனன் சங்கையை ஸ்ரீ பகவான் நிவிர்த்தித்தருளுகின்றார்)

**சுலோகம்35**

அஸம்ஸயம் மஹாபாஹோ மனோ துர்நிக்ரஹம் சலம்
அப்ப்யாஸேனது கௌந்தேய வைராக்யேணச க்ருஹ்யதே

(இதன் பொருள்) மஹாபாஹுவையுடைய அர்ச்சுனா! இம்மனம் அடக்குதற்கு அரிதென்பதும், சஞ்சலம் என்பதும் உண்மையாயினும் குந்தியின் மகனே! அப்பியாச, வைராக்கியங்களால் நிக்கிரகம் பண்ணுதல் கூடும் என்று அறிவாயகாக. (எ–று).

(26–ஆம் சுலோகார்த்தித்தில் கூறப்பட்ட வைராக்கியம். அப்பியாசம் என்னும் உபாயங்களின் விபரம் வருமாறு.)

வைராக்கியவுபாயமாவது; – அதவித்தையினாற் பண்ணப் பட்ட சர்வதொய்தப் பிரபஞ்சமும் பரிச்சின்னமாகலின் துக்கரூபமே யென்றிவ்வாறு நிரந்தரம் சிந்திப்பதாம். அப்பியாசவுபாயமாவது;– சர்வஜகத்தும் ஜனனரகிதமான பிரம்மமே: பிரம்மத்தினும் வேறே வஸ்துவாக அற்பமும் இல்லை என்றிவ்வாறு குரு சாஸ்திரங்களின் உபதேசத்தின் அனந்தரம் விசாரித்து அத்துவிதீயப் பிரம்மத்தினும் விபரீதமான இத்தொய்தத்தைக் காணமையாம்.

ஈண்டுச் சுலோகத்தின் முதற்பாதியால் சித்தத்தின் அடநிக்கிரகங் கூடாதென்பதைக் கூறியருளினர். இரண்டாவது பாதியால் சித்தத்தின் கிரம நிக்கிரங் கூடுமென்றருளினர். ஈண்டு ஸ்ரீ பகவானுக்கு இது கருத்தாம் = மனநிரோதம் இருவகைத்தாம்; அவை அட நிக்கிரகம், கிரம நிக்கிரகம் என்பனவாம். ஆண்டு ஞானேந்திரியங்களும், கருமேந்திரியங்களும் கோளகமாத்திர நிரோதத்தால் அடமாய் நிக்கிரகப்படுவன போல மனதையும் அடமாய் நிக்கிரகம் பண்ணுவேன் என்னும் பிராந்தி மூடனுக்குண்டாம்; ஆனால் இந்திரியங்களைப் போல அடநிக்கிரகம் கூடாது. என்னை? மனம் இருத்தற்கிடம் இருதயமாம் அதை நிரோதித்தற்குக் கூடாமையின் கிரமமாயடக்குதலே உசிதமாம் என்பதாம்.

இவ்விஷயம் ஸ்ரீ வசிட்டபகவானாலும் கூறப்பட்டுள்ளது. அது வருமாறு. வாசிட்டம்.

“ஊக நன்மையா லல்லது வெலப்படா துள்ளம்
வேக மத்தமா அங்குசத் தலால்வெலப் படுமோ
ஏக போதத்தை யறிதநல் லவருடன் எய்தல்
சோக வாதனை விடலுயிர் தேன்றூறா தொடுக்கல்.”

“உரைசெய்நால் வகையு நெஞ்சை யொடுக்குமூ கங்க ளாகும்
புரையிலா விவற்றுக் குள்ளம் ஒடுங்குதல் புயன்ம ழைக்குத்
தரையுறு தூளி போலாஞ் சாற்றுமூ கங்க ளன்றி
விரைவினெஞ் சடர்ப்பார்த் தீபம் விட்டிருள் இருளாற் றீர்ப்பார்.

(இதன் பொருள்) உத்தமமான யுக்திகளின்றி மனமானது ஜயிக்கப்படமாட்டாது. துஷ்ட ஆக்கிரமுடைய மதயானை அங்குசம் என்னும் ஆயுதத்தாலன்றி வெல்லப்படுமோ? ஏகமாகிய சித்சொரூபத்தையறிதல் , நல்லவர்களுடன் சேர்தல், துயர்மயமான வாசனையே விடுதல், பிராணனை யாசையாது நிறுத்துல் கூறிய நான்கு விதங்களும் மனத்தை அடக்கும் யுக்திகளாம். குற்றமற்ற இந்த உபாயங்களுக்கு மனமடங்குதல் மேகமானது பெய்கின்ற நீர்த்தாரைக்குப் பூமியிலுள்ள தூளிகள் அடங்குதல் போலவாம். கூறிய யுக்திகளாகிய சாதனங்களில்லாமல் அடமாக மனத்தை நிக்கிரம் பண்ணுவோர் தீபத்தை யொழித்து இருளை இருளினால் நீக்குபவர்க்குச் சமானமாவர். (என்றவாறு)

இப்பொருளை விளக்கிக் கூறுவாம். ஆண்டுகிரமமாய் மனோநிக்கிரகம் பண்ணுவதில் அத்தியான்மவித்தை யொன்றே யுபாயமாம். என்னை அவ்வத்தியான்ம வித்தையானது காணப்படும் உலகம் மித்தையெனவும் , திருஷ்டாவும் சாக்ஷியுமாகிய ஆன்மா பரமார்த்த சத்தியமாயும் பரமானந்த சுவப்பிரகாசமாயும் உள்ளதெனவும் உணர்த்துகின்றது. அத்தன்மைய உணர்வு உண்டானதன்பின்னர், இம்மனம் தனது விஷயவடிவ திருசியப் பொருள்களில் மித்தை யென்னும் ஏதுவால் பிரயோசனமின்மையை நிச்சயித்து, பிரயோசனமுடையது பரமார்த்த சத்திய பரமானந்த வடிவ திருஷ்டாவெனச் சுவப்பிரகாசமாகிய ஏதுவால் நிச்சியித்து விறகின்றிய தீப்போலத் தானே சாந்தியாகின்றது. அதலின் , அவ்வத்தியான்ம வித்தியாப் பிராப்தி மனநிக்கிரக உபாயமாம் உணர்த்திய தத்துவத்தை நன்கு உணராதோனும், உணர்த்திய தத்துவத்தை மறப்பவனும் ஆகிய இவர்கட்கு மன நிக்கிகரத்தில் நல்ல சாது சங்கமே உபாயமாம்; என்னை அந்த மகாத்துமாக்கள் இவ்வதிகாரிக்கு அடிக்கடி தத்துவவுணர்வையும் ஸ்மரணத்தையும் உண்டாக்குவார்கள். வித்தியாமதம் முதலிய மலின வாசனையால் பீடிக்கப்பட்டவனாய் சாது சங்கத்தை யடையாதவனுக்கு முற்கூறிய விவேகத்தால் அவ்வாசனையின் பரித்தியாகமே உபாயமாம். அதை

நீக்க முடியாதவனுக்குப் பிராணஸ்பந்தன நிரோதமே உபாயமாம். என்னை, பிராண சலனம், வாசனை இவ்விரண்டுமே சித்தத்தைச் செலுத்துவனவாம். இவ்விரண்டின் நிரோதத்தால் சித்த சாந்தி அவசியம் உண்டாம். இவ்வாறு ஸ்ரீ வசிட்டபகவானால் கூறப்பட்ட அத்தியான்ம வித்தை, சாதுசங்கம், வாசனாக்ஷயம், பிராணசலன நிரோதம் என்னும் நான்கு உபாயங்களும் ஸ்ரீ பகவானால் அருளிச் செய்யப்பட்ட அப்பியாசம், வைராக்கியம் என்னும் இரண்டு பாயங்களுள்ளே அந்தர்ப்பாவமாம்.

வைராக்கியம் அப்பியாசம் என்னும் இரண்டுபாயங்களால் வசமாகும் சித்த நிரோதமானது கேவல (தனியான) வைராக்கி யத்தாலும், கேவல (தனியான) அப்பியாசத்தாலும் ஆவதில்லை.

இனி வைராக்கிய சொரூபத்தைக் கூறுவாம். அபர வைராக்கியம் பரவைராக்கியம் என வைராக்கியம் இருவகைத்து. அவற்றுள் அபரவைராக்கியமாவது ; – யதமானம், வியதிரேகம், ஏகேந்திரியம், வசீகாரம் என நான்கு வகையினதாம்; இவற்றுள் யதமான வைராக்கியம் , இந்தச் சகத்தில் எது சாரம் எது அசாரம் எனக் குரு சாஸ்திரங்களால் நிச்சயிப்பேன் என்னும் உத்தியோகமாம் அதாவது முயற்சியாம். வியதிரேக வைராக்கியம், தனது சித்தத்தின் கண் பூர்வமுள்ள தோஷங்களுள்ளே அப்பியாசித்த விவேகத்தால் இவ்வளவு தோஷம் நீங்கிற்று, இவ்வளவு தோஷம் மீதமிருக்கிறது என்று பகுத்தறிவதாம். ஏகேந்திரிய வைராக்கியம், சித்தத்தில் தூலமான ஆசையிருந்தும் துக்கமென்று நிச்சியித்து விஷயங்களில் பிரவிர்த்தியாதிருத்தலாம். வசீகார வைராக்கியம் , ஆசை தூலமாக எழாமல் அந்தக் கரணத்தில் சம்ஸ்கார மாத்திரமாக இருப்பதாம். சம்ஸ்கார மாத்திரமான ஆசையும் ஆன்ம சாட்சாத்காரத்தின் பின்னர் நீங்கி விடுவதே பரவைராக்கியமாம்; அதாவது சர்வத்தினும் மேலாகிய பலவடிவ வைராக்கியமாம். வசீகார வைராக்கியம் ஸம்ப்ரஞாத சமாதிக்கு அந்தரங்க சாதனம்; அஸம்ப்ரக்ஞாத சமாதிக்கு பகிரங்க சாதனமாம் அவ்வஸம் ப்ரக்ஞாத சமாதிக்கு

அவ்வஸம் பரவைராக்யமே அந்தரங்க சாதனமாம் என்றறிக. இச்சர்வார்த்தங்களையும் வைத்துக் கொண்டு ஸ்ரீ பகவான் " அப்பயாஸேனது கௌந்தேய வைராக்யேனச கிருஹ்யதே" எனத் திருவாய் மலர்ந்தருளினரென்க.

(பஞ்சதசி, சித்திரதீபம் 259– ஆம் சுலோகத்திற் கூறிய தத்துவஞானத்தின் திருஷ்ட பலத்தைப் பிரதிபாதிக்கின்ற கடவல்லி சுருதி).

**சுலோகம்**

யதா ஸர்வவே ப்ரமுச்யந்தே காமா யே(அ)ஸ்ய ஹ்ருதி ஸ்ரிதா:
அத மர்த்யோ(அ)ம்ருதோ பவத்யத்ர ப்ரஹ்ம சமஸ்நுதே

(இதன் பொருள்) எப்போது இந்த முமுட்சுவின் இருதயத்தில் ஆசிரயித்துள்ள காமங்கள் (அதாவது அகங்காரத்தையும் சிதாத்மாவையும், அஞ்ஞானத்தால் ஒன்றுபடுத்திய அந்நியயோந்நிய அத்தியாசமாகிய காரணத்தால் ஆகின்ற, எனக்கு இது உண்டாகுக, எனக்கு இது உண்டாகுக என்னும் ஆசைகள்) யாவும் நீங்குகின்றனவோ, (அதாவது ஆன்மஞானத்தால் அஞ்ஞான நிவிர்த்தி பூர்வகம் அந்நியோந்நிய அத்தியாசரூப அகங்காரக் கிரந்தியாகிய காரணம் நிவிர்த்தி ஆவதால் நிவிர்த்தியாகின்றனவோ) அப்போது ஞானத்திற்கு முன்தேகத்தோடு அந்நியோந்நிய அத்தியாசத்தால் மரணசுபாவமுடைய புருஷன் அமிருதம் ஆகின்றனன். (அதாவது அந்நியோந்நிய அத்தியாசம் இல்லாமையால் மரணம் இல்லாதவன் ஆகின்றனன்) (அந்த மரண மில்லாதவன் ஆவதில் ஏதுவைக் கூறுகின்றார்.) இந்தத் தேகத்திலேயே பிரஹ்மத்தைச் செவ்வையாக அடைகின்றனன்; என்பது இத்தத்துவ ஞானத்தின் திருஷ்ட பல மாகிய காம மரண நீக்கத்தைப் பிரதிப் பாதிக்கும் சுருதியின் பொருள்.

அகங்காரக் கிரந்தியாகிய அந்நியோந்நிய அத்தியாசத்தின் விபரம் வருமாறு.

ஆத்மாவிற்குச் சத்து சித்து ஆனந்தம் அத்வைதம் என நான்கு விசேஷணங்களும், அகங்காராதிகளுக்கு அசத்து சடம் துக்கம் துவைதம் என நான்கு விசேஷணங்களும் இருக்கின்றன. அவற்றுள் ஆத்மாவின் சத்தும் சித்தும் அகங்காராதிகளின் அசத்தையும் ஜடத்தையும் மறைந்திருக்கின்றன. அதனால் அநாத்மாவாகிய அகங்காராதிகள் சத்தைப்போலவும் சேதனத்தைப் போலவும் தோற்றுகின்றன. அகங்காராதிகளின் துக்கமும் துவைதமும் ஆத்மாவின் ஆனந்தத்தையும் அத்வைதத்தையும் மறைந்திருக் கின்றன. அதனால் ஆத்மாதுக்கமுடையதும் துவைதத்தோடு கூடியதுமாகத் தோற்றுகின்றது. இவ்விரண்டு விசேஷணங்களின் ஆவரணத்தால் மற்றப்பூரணத்தன்மை நித்திய முக்தத் தன்மை முதலிய விசேஷணங்களின் ஆவரணமும் சித்திக்கின்றது. இந்தக்கோச ரூப அந்நியோந்நிய அத்தியாசமானது, அகங்காரக்கிரந்தி யென்றும், இருதயக்கிரந்தியென்றும், பந்தமென்றும், விபரீத பாவனை யென்றும் கூறப்படும்.

**பஞ்சதசி. திருப்தி தீபம்.**

(பிருகதாரணியாக வுபநிஷதத்தின் கண்ணுள்ள சுருதியினை முதலிற் கூறுகின்றார்.)

**சுலோகம் 1**

ஆத்மா நஞ் சேத்விஜா நீயாதயமஸ்மீதி புருஷ:
கிமிச்சந்கஸ்ய காமாய சரீரமநுஸஞ் ஜ்வரேத்

(இதற்குத் தமிழ்க்கவி– இந்தப்புருடன் றானெனவே தன்னை யுணர்ந்தால், எந்தப் பொருள் இச்சித்தெவன் இன்புக்குடல் வேவாம்.)

(இதன் பொருள்) புருஷனாகிய ஜீவன் " ஆத்மாவை இது யானாயிருக்கிறேன்" என்று அறிவானாயின் , அப்போது எந்தப் போக்கிய விஷயத்தை இச்சித்து எந்தப் போக்தாவின் போகத்தின்

பொருட்டுச் சரீரத்தைப் பின்பற்றித் தாபப்படுவன். (என்பதாகிய சுருதியின் அபிப்பிராயம் செவ்வையாய் விசாரிப்பதனால் ஜீவன் முக்தனுடைய திருப்தி எதுவே அதுவிளக்கமாகின்றது.)

(இப்படிப் பெறப்பட்ட "ஆத்மாவை அறியின் " என்னும் முதற் சுலோகமாகிய வேதமந்திரத்தின் முற்பாதியின் பொருளாகிய அபரோக்ஷ ஞானமெதுவோ அதனை அநுவதிக் கின்றவராய்ச் சோக நிவிருத்தியாகிய பயனைக்காட்டுமியல்புடைய பிற்பாதியை வெளிப்படுத்துகின்றார்.)

**சுலோகம்135**

சாக்ஷாத்க்ருதாத்மதீ: ஸம்யக் விபர்யயபாதித:
கிமிச்சந்கஸ்ய காமாய ஸரீரமநுஸம் ஜ்வரேத்

(இதற்குத் தமிழ்க்கவி – ஒது போதமதை நன்கு நேர்பட உணர்ந்து ளான்றிரிபின் அலமரான், யாது பேணியெவன் இன்பம் வேவலுற யாக்கை தாபமுற வேண்டுமே.)

(இதன் பொருள்) செவ்வையான ஆத்மசாக்ஷாத்காரத்தோடு கூடிய (ஆத்மாவை நான் என்று அபரோக்ஷமாக அறிந்த) புத்தியுடையவனும், தேகம் முதலியவற்றில் நான் என்னும் புத்தியாகிய விபரீதத்தினால் பாதிக்கப்படாதவனும் ஆகிய புருஷன் (இந்த இரண்டும் ஞானிக்கு, ஆதலால் என்னும் ஏதுவைத் தன்னகத்தே கொண்டுள்ளதாகிய ஏதுகர்ப்ப விசேஷணங்களாம்) எந்தப் போக்கியத்தை இச்சித்தவனாய் எந்தப் போக்தாவினது காமத்தின் பொருட்டுச் சரீரத்தைத் தொடர்ந்து தாபத்தையடைவான்.

(சுலோகம் 135 –ல் கூறிய இவ்வேத மந்திரத்தினது பிற்பாதியின் தாற்பரியத்தைக் கூறுகின்றார்.)

ஜகந்மித்யாத்வதீபாவா தாக்ஷிப்தௌ காம்யகாமுகௌ
தயோரபாவே ஸம்தாப: சாம்யேந்தி: ஸ்நேஹதீபவத்

(இதற்குத் தமிழ்க்கவி– ஞாலம் மித்தையெனும் ஞானம் உண்மையின் நயப்ப தோடிலை நயப்பவன், சால மாயினவை தாபம் என்பது சமிக்கும் எண்ணெயறு தீப நேர்.)

(இதன் பொருள்) ஜகத்தினது மித்தியாத் தன்மையின் புத்தியிருத்தலால் காமிய விஷயமாகிய அதாவது விரும்பப்படும் விஷயமாகிய போக்கியமும். காமுகனாகிய அதாவது விரும்பு வோனாகிய போக்தாவடிவதானும் ஆன இரண்டும் நீக்கப்பட்டன; அதாவது இல்லாதனவாகின்றன. (போக்கியத்தினையும் போக்தா வினையும் நிஷேதிப்பதாகிய அதனால் என்ன பயனுண்டாகின்ற தெனக்கூறுகின்றார்.) அக் காமியமும் (விரும்பப்படுவதும்) காமுகனும் (விரும்பு கிறவனாகியதானும்) ஆகிய இரண்டும் இல்லாமற் போகவே, (இல்லாத இந்திரஜால வஸ்துவிற்போலக் காமுறுதல் அதாவது விரும்புதல் இல்லாமற் போதலால்) காமுறுதல் வடிவ நிமித்த (காரண) த்தினாலாகிய சந்தாபம் (துக்கம்) எதுவோ அது காரண (விரும்புதல் வடிவ நிமித்த) மின்மையால் எண்ணெயின்றிய தீபத்தினைப் போல நீங்குகின்றது.

(போக்தாவாகிய சிதாபாஸனது மித்தியாத் தன்மையைச் சாதிக்கின்றார்)

**சுலோகம் 217**

மாயிகோ(அ)யம் சிதாபாஸ: ச்ருதேர நுபவாதபி:
இந்த்ரஜாலம் ஜகத்ப்ரோக்தம் ததந்த: பாத்யயம் யத:

(இதற்குத் தமிழ்க்கவி– நந்துறா இந்த நிழல் மித்தையா மேயநுபவத்தினால் நல்ல மறையால், இந்த்ரசாலஞ் சகமெனச் சொல்வாம் ஈதினுளி ருத்தலான் மற்றை யவனே.)

(இதன் பொருள்) இச்சிதாபாசன் சுருதியினாலும் அனுபவத் தினாலும் மாயிகனாம் அதாவது மித்தியாவடிவானாம். ஏனெனின் "ஜீவேசாவாபாஸேந கரோதி = ஜீவேசுவரர்களை ஆபாசமாக மாயை செய்கின்றது." என்னும் சுருதியினாலும், திருஷ்டாதரிசனம் திருசியம்

என்னும் திரிபுடியின் இடையி லிருப்பதாகுதலால் அனுபவிக்கப் படுகின்றதாயிருத்தலினாலும் சிதாபாசன் மித்தை யாம் (அச்சிதாபாசன் மித்தை யென்பதனையே உபபாதனஞ் செய்கின்றார்) இந்திரஜாலத்தைப் போல மித்தியாவடிவமாக ஜகத்து சொல்லப்பட்டிருக்கின்றது. அத்தகைய ஜகத்தில் அடங்கியதா யிருத்தலால் இச்சிதாபாசனது மித்தியாத் தன்மையும் அச்சகத்தினைப் போல வித்துவான்களால் அனுபவிக்கப்படுவதாம்.

(ஜகத்தைப் போல விநாசமுடைமையின் அனுபவத்தினாலும் இச்சிதாபாசனுக்கு மித்தியாத் தன்மையும் யுண்டென்று கூறுகின்றார்.)

**சுலோகம் 218**

விலயோ(அ)ப்யஸ்ய ஸுப்த்யாதெள ஸாக்ஷிணா ஹ்யநுபூயதே
ஏதாத்ருஸம் ஸ்வஸ்வபாவம் விவிநக்தி புந: புந:

(இதற்குத் தமிழ்க்கவி – இவனுடைக் கேடுதுயில் முதலவற் றேகரியி னினிதனுப விக்கலாமே, அவமுறும் போது தன தியல்பிதென் றேயுடனு டன்பகுத் தறிகு வானால்.)

(இதன் பொருள்) எதனால் இச்சிதாபாசனது விநாசமும் சுழுத்தி முதலியவற்றில் சாக்ஷியினால் அனுபவிக்கப்படுகின்றதோ அதனாலும் மித்தையாம். இங்கு முதலியவென்னுஞ் சொல்லிற்கு மூர்ச்சை முதலியன பொருளாம். (சிதாபாசனுக்கு மித்தியாத் தன்மையிருக்குக, அதனாலும் என்ன பயன் எனக்கூறுகின்றார்) எப்போது கூடஸ்தனினின்றும் விவேசனஞ் செய்யப்பட்ட சிதாபாசன் மாயிகன் என்று அறிந்தானோ அப்போது தனது சுபாவமாகிய சொரூபத்தினை இப்படி மித்தியா வடிவமாக அடிக்கடி விவேசனஞ் செய்கின்றான். அதாவது நிஜவடிவ கூடஸ்தனினின்றும் வேறுபடுத்தி அறிகின்றான்.

(அக்கூடஸ்தனினின்றும் தன்னை விவேகித்தலினாலும் என்ன பயனுண்டாகின்ற தெனக் கூறுகின்றார்.)

**சுலோகம் 219**

விவிச்ய நாசம் நிச்சித்ய புநர்போகம் ந வாஞ்சதி
முமூர்ஷு: சாயிதோ பூமௌ விவாஹம் கோ(அ) பிவாஞ்ச்சதி

(இதற்கு தமிழ்க்கவி— எவமறக் கூறதுசெய் தமிவினைத் தேறியபின் எவளவும் போகம் நயவான், புவனியின் மூர்ச்சையது புகிகிடப் பானொருநற் புதுமணம் நயப்பன் எவனே.)

(இதன் பொருள்) விவேசனத்தால் தனது நாசத்தை நிச்சயித்து (அதாவது தானில்லாமற் போகிறவனாகக் கண்டு) மறுபடியும் போகத்தை இச்சிக்கிறதில்லை (தனது நாசத்தின் நிச்சயமாயின் போகத்தில் இச்சை இல்லை என்பதில் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்) மரண இச்சையுடையவனாய்ப் பூமியில் படுக்கையை யடைந்த எந்தப் புருஷன் விவாகத்தை இச்சிப்பான்? ஒருவனும் இச்சியான்.

(முற்கூறிய அர்த்தத்தினைப் பிரகிருத (ஆரம்பிக்கப்பட்ட சுருதியினால் ஆரூடஞ்செய்கின்றார்.)

**சுலோகம் 222**

இத்யபிப்ரோத்ய போக்தாரமாக்ஷிபத்யவிசம்கயா
கஸ்ய காமாயேதி தத: சரீரா நுஜ்வரோ ந ஹி

(இதற்குத் தமிழ்க்கவி – யாவனின்புற வென்பதிவ்வகை யெண்ணியே சமுசயமற, ஆவலித்துணு வானை நீக்கிய தாதலாலுடல் வெம்மைபோம்.)

(இதன் பொருள்) "எவனுடைய காமத்தின் பொருட்டு" என்னுஞ்சுருதி கூடஸ்தனது அல்லது சிதாபாசனது பாரமார்த்திக போக்குதிருத்தன்மையின் அபாவத்தினை அபிப்பிராயத்திற்கு விஷயமாக்கிச் சங்கையின்றிய தன்மையினால் போக்தாவினை நிஷேத உபதேசத்தால் (அதத்வியா விருத்தியாகிய நிஷேத உபதேசத்தால்) நான் என்னும் சொற்பொருள் முழுவதையும்

நிஷேதஞ்செய்கின்றது. (இவ்வாறு போக்தாவின் நிஷேதம் உண்டாகுக, அதனால் என்ன பயன் உண்டாகின்ற தென்க் கூறுகின்றார்.) அதனால் ஞானிக்கு மூன்று சரீரத்தைப்பின் பற்றிய தாபம் (துக்கம்) இல்லாததாகின்றது; அதாவது சோகநிவிர்த்தி யுண்டாகின்றது (நிரங்குச திருப்தியுண்டாகின்றது).

**அத்துவித ரசமஞ்சரி.**

(சகல சகத்தும் காலத்திரயத்திலும் மாயாமாத்திரமே யென்று திருஷ்டாந்த பூர்வகமாக உறுதிப்படுத்தல்.)

சொல்லுநினை வுறுபோதும் மற்றதெழும் முன்னுமது தொலைந்தபோதும், இல்லதுதான் என்றாலும் இவ்வுலகம் இலங்குகின்ற திறம்பூ, தாமே, அல்லததி சயமென்னை போலும் கேந்திரசால மான திங்குப் , புல்லுறுமா யாவியினாற் கற்பிதமென் றாலுமிகப் பொலியும் அன்றே.

(இதன் பொருள்) நாமரூப வடிவமான சகலப் பிரபஞ்சமும் உற்பத்திக்கு முன்னும் தோற்றுகின்ற காலத்திலும் நாசத்திற்குப் பின்னும் இல்லவே இல்லை. ஆயினும் அ நிர்வசனீயமாய் பேத பின்னமாய்க் காணப்படுகின்றது ஆச்சரியமே; அல்லது ஆச்சரியந்தான் என்ன இருக்கின்றது? மகேந்திரஜாலப்பிரபஞ்ச மானது இவ்வுலகில் யதார்த்தில் இல்லாததாய் மகேந்திர ஜாலிகனது மாயாவிசித்திரத்தினால் கற்பிதமாயினும் நன்றாய்க் காணப் படுகின்றது போலவாம்.

(கருத்துரை) சகல சகத்தும் யதார்த்தில் இல்லாததாய் மாயையினால் கற்பிதமாயினும் காணப்படுகின்றது; என்பதாம்.

**முண்டக சுருதி.**

பித்யதே ஹ்ருதயக்ரந் திஸ் சித்யந்தே ஸர்வஸம்ஸயா:
க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி தஸ்மிந் த்ருஷ்டே பராவரே

(இதன் பொருள்) அப்பராவரத்தைப் பார்க்கவே இருதயக்கிரந்தி (அந்நியயோந்நிய அத்தியாசமாகிய அகங்காரக் கிரந்தி) பிரிகின்றது. சகல சம்சயங்களும் சிதைகின்றன, இவனது கர்மங்களும் நசிக்கின்றன. பரம்– பிரம்மலோகாதி பதங்கள், அவரம் =எதனிற்றாழ்ந்தனவாயிருக்கின்றனவோ, அப்படிப்பட்ட பிரத்யக பின்ன பரப்பிஹ்மம் பராவரம் எனப்படும்.

**ஈசாவாஸ்ய சுருதி.**

யஸ்மிந் ஸர்வாணி பூதாந் யாத்மைவாபூத் விஜாநத:
தத்ர கோ மோஹ: க: ஸோக ஏகத்வமநு பஸ்யத:

(இதன் பொருள்) எந்த ஆத்மாவின் கண் பரமார்த்தமா யறிபவனுக்கு எல்லாப் பூதங்களும் ஆத்மாவே யாகின்றனவோ அதாவது அகங்காராதி சர்வப்பிரபஞ்சமும் இல்லாதனவாய் ஆத்மாவே மிஞ்சுகின்றதோ, அவ்வாத்மாவின் கண் ஐக்கியத்தைக் காண்பவனுக்கு மோகமேது? சோகமேது? என்பதாம்.

**விவேக சூடாமணி.**

விரிபவத் தருவி னுக்கு வீங்கிய தமசே வித்தாம்
மருவுதே காந்ம புத்தி மற்றதன் முளையாம் காமம்
தருவதன் தளிராம் கர்மம் தாக்கிய சலமாம் தேகம்
உரவடிக் கட்டை யாகும் உயிர்களே பணைகள் ஆகும்.

பொறிநிரை நுனிகள் ஆகும் புலன்களே மலர்கள் ஆகும்
செறிபல வான கன்மஞ் செய்ததுன் பங்கள் யாவும்
உறுபலம் அப்ப லத்தை உண்பது சீவன் என்னும்
பறவையே இவித மாகப் பவத்தரு பரவல் ஆகும்.

மருவிய முஞ்சிப் புல்லின் மத்தியு ளாணி யைப்போல்
திருசியத் திரளில் நின்றும் திகழ்ந்திடும் தன்னான் மாவை
அருமையாம் புத்தி யாலே அசங்கமாய் அசலம் ஆக
மருவிய தென்று கண்டு மாசற வகுக்க வேண்டும்.

இவ்விதம் வகுத்த பின்னர் இங்குள திருசி யங்கள்
அவ்வித ஆன்மா என்றே அநிசமும் பிரவிலா பித்துத்
தவ்வற ஆன்மா ஆகத் தரணியில் இருப்பவன் தான்
செவ்விய முத்திப் பேற்றைச் சேர்ந்தவன் அநக மைந்தா.

ஆதலால் அகங்கா ராதி அறிந்திடுத் கரியே ஆன்மா
பேதமில் துயிலின் கண்ணும் பேதியா திருப்ப தாலே
சோதியாம் ஆன்மா நித்தன் சுருதியும் ஆங்கே சொல்லும்
சாதுவே யதனால் ஆன்மா சத்தசத்திற்கு வேறே.

தொந்தமாம் பவத்தைச் செய்யும் துட்டமாம் பிரதி பந்தம்
மைந்தனே அநேக மேனும் மருவிய அவற்றிற் கெல்லாம்
முந்திய விகாரம் ஆக முளைத்திடும் அகங்கா ரந்தான்
சந்ததம் மூலம் அத்தைச் சருவதா ஒழிக்க வேண்டும்.

நிருமலப் பிரமா நந்த நிதிமகா வலியைப் பெற்ற
திரிகுணச் சிரங்க ளுற்ற தீயகங் காரப் பாம்பால்
இருதயப் பூமிக் குள்ளே யிருளுறச் சூழப் பட்டிங்
கொருவரும் பெறாத வண்ணம் ஒளித்திடப் பட்ட தாகும்.

தீரனாம் ஒருவன் ஞானத் திறமையாந் திகழ்வா ளாலே
கோரமாஞ் சிரங்கள் மூன்றுங் கொய் தகங் காரம் ஆன
சாரமில் சர்ப்பந் தன்னைச் சற்றுமில் லாத றுத்துப்
பூரணச் சுகஞ்செய் விக்கும் புகழ்நிதி புசிக்க வல்லோன்.

வெப்பமாம் விடதோ டந்தான் வீங்குதே கத்தி லெம்மட்
டற்பமு மிருக்கு மம்மட் டரோகமில் லாது கண்டோம்
அப்படி யோகி யர்க்கும் அகங்காரம் எம்மட் டம்மட்
டொப்பிலா முத்தி சித்தி உள்ளவா றுதிப்ப தில்லை.

பகையகங் காரம் யாதும் பற்றற நசித்த தாலும்
அதுநின்ற செய்வி கற்பம் அறவுமே அடங்க லாலும்
சுககநப் பிரத்திய கான்ம சொரூபநல் விவேகத் தாலும்
அகம் அது ஆனேன் என்றே அடையலாம் தத்து வத்தை.

சொரூபநற் சத்தை யாலே சுயமுமே சத்துப் போலாய்
வெருளுறுங் கர்த்தா வாகி விகாரியாய்ச் சொரூபந் தன்னின்
பிரதிபிம் பத்தை மேவிப் பிறங்கிய அகங்கா ரத்தின்
மருவிய ஆன்ம புந்தி மாற்றுவாய் விரைவில் மைந்தா.

சுகசுநச் சொரூப மாகிச் சுத்தசிந் மூர்த்தி யாகுந்
தகவுள பிரத்திய காந்ம தத்துவ மாமு னக்கிவ்
அகமுடன் அத்தியாசம் அடைந்ததாற் சநந மாதிச்
சகலமாந் துயர்மி குந்த சம்சாரம் உற்ற தன்றோ.

புகழ்சதா நந்த சித்தாய்ப் பூரண ஏக ரூபத்
தகவுள நிருவி காரத் தத்துவம் ஆம் உ னக்கிவ்
அகமுடன் அத்தியாசம் அன்றியிற் சுபாவ மாக
இகழுமிச் சம்சாரந்தான் ஏதுமே எங்கும் இல்லை.

ஆதலால் துய்ப்போன் கண்டத் தடைத்தகண் டகமே போல
வாதகம் உனக்குச் செய்து வந்தஇவ் அகங்கா ரத்தைக்
கோதிலா ஞாந வாளால் கொய்துநன் றுன்சொ ரூப
பூதசாம் பிராச்ய இன்பம் புசித்திடு நினைத்த வாறே.

பிந்தியும் பரமார்த் தத்தைப் பெற்றதாற் காதல்நீக்கி
நிந்தைசேர் அகங்கா ராதி நின்றவிர்த் தியினை மீட்டிங்
கந்தவுன் சொரூபா நந்தம் அநுபவித் தகண்டம் ஆகிப்
பந்தமில் நிருவி கற்ப பதத்தினில் வெறிதி ருப்பாய்.

பெருகிய அகந்தைத் மெத்தப் பெயர்த்திடப் பட்ட போது
ஒருகண மேனும் மற்றும் உளத்தினால் நினைக்கப் பட்டால்
[illegible] உண்டாய் விட்சேபம் வெகுவாய்ச் செய்யும்
மருவுகாற் றால லைந்த மழைக்கால மேக மேபோல்.

பலபுலச் சிந்தை யாலிப் பகையகங் காரத் திற்கிங்
கலைவுற அவகா சத்தை அற்பமும் அளிக்க வொண்ணா
துலரெலு மிச்சை யுய்ய ஊற்றிய நீரே போலிச்
சலவகங் காரம் உய்யச் சலசிந்தை ஏது அன்றோ.

தேகாதி சிந்தை யுற்றோன் திருசியப் பாசம் பெற்றோன்
தேகாதி சிந்தை யற்றோன் திருசியப் பாசம் விட்டோன்
ஆகாத சிந்தை தானே ஆதலால் பேதங் கொண்டிவ்
ஏகாத பவபந் தத்திற் கேதுவாய் இசையும் மைந்தா.

காரியம் வளரு மாகில் காரண மான வித்தும்
பாரினில் வளர்ந்த தாகப் பார்க்கலாம் அதுதான் நீங்கில்
காரண மான வித்தும் கடிதினில் நீங்க லாலே
தீரனே காரி யத்தைத் தீர்த்திட வேண்டும் முன்னம்.

காரிய மான சிந்தை கருத்தினில் வளரும் போது
காரண வாத னைக்கோன் கருத்தினில் வளரா நிற்கும்
காரண வாத னைக்கோள் கருத்தினில் வளரும் போது
காரிய சிந்தை யுந்தன் கருத்தினில் வளரும் மைந்தா.

வந்தவச் சிந்தை யாலே வாகியச் செய்கை யுண்டாம்
தொந்தமாம் சிந்தை செய்கைத் தொடர்பினால் முன்னு ரைத்த
அந்தவா தனைவ ளர்ந்திங் ககிலமாம் சீவ ருக்கும்
பந்தமாம் சம்சார த்தைப் பலவிதம் படைக்கும் அன்றே.

ஓதிய ஏது வாலே ஒழிவிலா துதித்த இந்தப்
பேதமாம் பவபந்தத்தைப் பெயர்த்திட வேண்டி முன்னர்
ஓதிய மூன்றை யுந்தான் ஒழித்திட வேண்டும் அத்தில்
ஏதுநல் உபாயம் என்னில் இதனை நீ இயம்பக் கேளாய்.

எவ்வவத் தையிலும் எந்த இடத்திலும் எக்கா லத்தும்
விவ்விதத் தோற்றம் பெற்று வேறெனக் காண்ப வெல்லாம்
செவ்விய பிரம மேயாம் சிறிதும்வே றில்லை யென்னும்
இவ்விதப் பார்வை தான் இங் கியம்பிய நல்லு பாயம்.

ஓதிய பார்வை யாகும் உண்மைவா தனையு ரத்தால்
கோதுறு செய்கை முன்னர்க் குவிந்திடும் பின்பு சிந்தை
யாதுமே யிறக்கும் பின்னர் ஏதுவா தனைய டங்கும்
வாதனை யடக்கந் தானே வழுவிலாச் சீவன் முத்தி.

சருவமும் பிரமம் என்னும் சத்துவா தனைவ ளர்ந்தால்
மருளகங் காரம் ஆதி மலினவா தனைய டங்கும்
கருமையாம் எவ்வி டத்தும் கலந்துள அந்த காரம்
அருணனின் காந்தி தோன்றும் அளவிலே அழியு மாபோல்.

இருளிருட் செய்கை யாக இசைந்துள அனர்த்தம் எல்லாம்
இரவிநின் றுதிக்கும் போதிங் கிறந்திடும் நீதி யேபோல்
அருவஅத் துவிதா னந்த அனுபவம் உதிக்கும் போது
பெருகிய பந்தம் அத்தால் பெற்றதுன் பமும்இ லாவாம்.

திருசியத் தோற்றந் தன்னைத் திருக்குமாத் திரமே யாகப்
பிரவிலா பித்து நின்னைப் பிரமமாத் திரமாய்ப் பார்த்திங்
கரியனே வெளியில் உள்ளில் ஆவது சமாதி பெற்றுக்
கருமபந் தம்வ ரைக்கும் காலம் நீ தள்ளு வாயே.

சொருபநிட் டையையோர் காலும் சொற்பமும் தவிர ஒண்ணா
தரணியில் அந்த நிட்டை தவிர்தலே காலன் என்று
பிரியனே பகவான் ஆன பிரமபுத் திரச்சு சாதன்
பரச நச் சுசாதீ யத்தில் பலவிதம் பகர்ந்தா னன்றோ.

ஆதலாற் சொரூப நிட்டை அன்றியும் தவிர்தல் ஞானிக்
கேதமாம் அநர்த்தம் ஆகும் ஏதெனில் தவிர்த லாலே
சாதமாம் மோகம் அத்தால் சனித்திடும் அகந்தை அத்தால்
கோததாம் பந்தம் உண்டாம் கூடிடும் அவற்றால் துன்பம்.

இடைவிடாத் தியானத் தாலே இருதயஞ் சத்தம் ஆகித்
திடமுறப் பிரமத் தின்கண் தியங்கிடா தடங்கும் எப்போ
தடர்மிகும் அகண்டா னந்த அநுபவ ஏதுவான
சடமிலா நிருவி கற்ப சமாதியப் பொழுதே யுண்டாம்.

ஆனவச் சமாதி யாலே அகிலவா சனைமு டிச்சும்
போனதாம் விவிதம் ஆகப் பொருந்திய கன்மம் பொன்றும்
ஏனையுள் வெளியில் எங்கும் என்றுமோர் முயற்சியின்றி
ஊனமில் சொரூபத் தோற்றம் ஒருமையாய் ஒளிரா நிற்கும்.

**சொரூப சாரம்**

சித்துருவம் ஆகிச் செகசாட்சி தாம் ஆன
முத்தரைக் காமாதி முனியாவே– சித்தத்தில்
இங்கற்ப வாசனைகள் எல்லாம் எடுத்தருந்திச்
சங்கற்பம் இல்லாத தால்.

**விஞ்ஞான சாரம்**

அடியும் முடியும் நடுவுமிலா அகண்ட ஒளியாம் ஒருதனையே
கடிய நினைவாம் மாயையினால் கலங்கி வேறாய் அனேகமாய்
படிக மலையிற் சுணங்கனைப்போல் பார்த்தல் எனவே அதிட்டான
முடிவில் தன்னைத் தான்கண்டே மோகம் இன்றிப் பார்த்திருப்பார்.

**சிவஞான வள்ளலார் சாத்திரம், நேயவுபதேசம்**

ஆறுகடல் கண்டுவர ஆதரித்த தும்மொருவன்
வீறுபுலி கண்டுவந்த வீறும்–கூறியிடில்
உப்புக் கடலாடி யோடிவந்த தும்மொக்கும்
செப்புசிவங் கண்டுதிரும் பல்.

என்பன முதலியவையாம்.

இவ்வாறு முமுட்சுக்கள் காரண அகங்காரக் கிரந்தி நீக்கத்தால் காரிய காம மரணாதி சர்வதுக்க நிவிர்த்தி பரமானந்தப் பிராப்தி வடிவ மோக்ஷம் (வீடு) உளதாம் என்பதை யறிந்து, ஆன்ம ஞானத்தால் அஞ்ஞான நீக்க பூர்வகம் அகங்காரக் கிரந்தி நீக்கஞ்செய்து, காமமரணாதி சர்வ துக்க நிவிர்த்தி பரமானந்தப் பிராப்தி வடிவ மோக்ஷம் அதாவது வீடுபேறு பெறுவாராக.

ஆன்ம ஞானத்தை யடைவதற்கேதுவான மகாவாக்கிய விசாரத்தின் விசேட விபரங்கள் , மடாலய வெளியீடு 2, " மகா வாக்கிய விசாரம் " என்னும் நூலிற் காண்க.

**காரண அகங்காரக் கிரந்தி நீக்கத்தால் காரிய காம மரண நீக்கம் முற்றிற்று.**

ஓம் தத் ஸத்

# மகாவாக்கிய விசாரம்

## முன்னுரை

சகல சீவர்களும் விரும்புவது துக்கத்தின் நீக்கமும் சுகத்தின் பிராப்தியுமேயாகும் என்பது யாவரும் உணர்ந்த விஷயமேயாம். இத்தகைய நிலையையே மோக்ஷம் அதாவது வீடு என்று அறிவிற் சிறந்த ஆன்றோர்கள் கூறியிருக்கின்றனர்.

ஸ்ரீ சாந்தலிங்க சுவாமிகள் அவிரோதவுந்தியார் என்னும் நூலில்

"அறம் பொருள் இன்பம் வீ(டு) ஆயவோர் நான்கில்
சிறந்த பயன் வீடுஎன் (று) உந்தீபற
தேரின்வீ டேஎலாம் உந்தீபற"

(இதன் பொருள்) தருமம் அருத்தம் காமம் மோக்ஷம் என்று அறிவுடையோர் அடையும் பயன்களாக எல்லா நூல்களாலும் சொல்லப்படுவனவாகிய நான்கனுள்ளும் வீடு (மோக்ஷம்) மரணாதிதுக்கங்களின்றிய நித்திய நிரதிசய சுகரூபமாதலால் சிறந்த பயனாக வுள்ளது. அஃதன்றியும் தருமாதிகளுக்கு உள்ள இலக்கணங்களும் வீட்டிற்கே உளவாகலின் மாசறத் தேருங்காலை அந்நால்வகைப் பயன்களும் அவ்வீடே யாகும் என்று கூறியிருக்கின்றனர்.

ஆகவே அத்தகைய சர்வ புருடார்த்த வடிவமான வீட்டையடையும் நெறியை யறிவிக்கும் வண்ணம் அருள் வள்ளலாம் இறைவனும் அவனருள் வழிப்பட்ட ஆன்றோரும் வேதம், பிரம்ம சூத்திரம், பகவத்கீதை முதலிய அனேக நூல்களை அருளிச் செய்துள்ளனர். அவற்றுள் வேதாதி சர்வ சாஸ்திர மயமான ஸ்ரீ பகவத் கீதையின் முதல் ஷட்கரூபமான கர்ம காண்டத்தில் துவம்பதார்த்த நிரூபணமும், இரண்டாம் ஷட்க ரூபமான உபாசனா

காண்டத்தில் தற்பதார்த்த நிரூபணமும், மூன்றாம் ஷட்க ரூபமான ஞான காண்டத்தில் அந்தச் சோதிததத்துவம் பதார்த்ததங்களின் அபேத ரூபமான மகாவாக்கியார்த்த நிரூபணமும் செய்தனர். ஆதலின் அருச்சுனனுக்கு ஸ்ரீ பகவான் உபதேசித்த பகவத் கீதையின் சாரவடிவம் வேதங்களின் சாரவடிவமான மகாவாக்கயார்த்த நிரூபணமாம்.

ஆகவே அத்தகைய மகாவாக்கியார்த்த விசாரத்தை விசேடமாகக் கற்றோரேயன்றி மற்றோரும் எளிதிலுணர்ந்து கொள்ளுமாறு எளிய நடையில் இயற்றித் தரவேண்டுமென்று ஸ்ரீ பகத் கீதையைச் சிரவணித்தமுட்சுக்கள் விரும்பியதற்கிணங்கி இந்த மகாவாக்கிய விசாரம் என்னும் நூலை ஸ்ரீ பகவானது திருவருளினால் இயற்றி வெளியிடுகின்றேன்.

மரணாதி துன்பங்களின்றிய பேரின்ப வீட்டின் விருப்பமுடையவர்களாகிய முமுட்சுக்கள் அனைவரும் அறிந்து மகாவாக்கியார்த்த விசாரஞ் செய்து அதனாலுண்டாம் ஞானவாயிலாலுறும் வீடாகிய மரணாதி சர்வ துக்கங்களுமற்ற பேரின்ப வடிவமாக நிலைப்பார்களாக.

இங்ஙனம்,
**மகா.கோவிந்தசாமி,**
தலைவர்
ஸ்ரீ நாராயண தாண்டவராய சுவாமிகள் மடம்
நன்னிலம் தஞ்சை மாவட்டம்.

ஜனவரி 1962



# முகவுரை

உலகத்தை நுண்புலங்கொண்டு நோக்கினால் உலகமானது, உணர்வுடைப் பொருள், உணர்வில்லாப் பொருளென இரு பிரிவினதாகக் காணப்படுமென்பதி லைய மில்லை.

அவற்றுள் உணர்வில்லாத பொருள்களை விட்டு உணர்வுடையப் பொருள்களை நோக்குவோமேயானால், அவைகள் பல்வேறு வகையினவாகவும் பல்வேறு தொழில்களை யுடையன வாகவும் காணப்படுவனவாயினும் அவை உடலமைப்பிற்கேற்ப ஓரறிவு முதல் ஆறறிவீறாக வுடையனவாதலால் ஆறு வகைப் படுமெனவும் துன்பகன்றின் புறல் கருதி முயலுந் தொழிலுடையன எனவும் அறுதியிடலாம்.

அவற்றுள் ஆறறிவுடையனவாதலாற றலைசிறந்தனவெனக் கருதப்படும் மக்கட் பொருளையன்றி மற்றைய ஓரறிவுமுதல் ஐயறிவுறுதியாகவுடைய ஐவகைப் பொருள்களும் சுவை,யொறி யூறு, ஓசை, நாற்மென்னு மைம்புலங்களையுமின்பந் தருவனவாகத் கருதி முயன்று துன்பிறுகின்றன. மக்களாகிய ஆறறிவையுமுடைய பொருளுங்கூட "பொறிவழி சென்று மீளு மவல மதிகொடு மறியவிழும்" (சசிவன்னபோதம்) என்ற படி ஐம்புல நுகர்ச்சியா லின்புறலா மென்றேமயங்கி முயன் றிருவினையாற்றிப்பிறந்திறந்து துன்பிகின்ற னவேன்றி இன்பப் பொருளிஃதெனத் துணிந்தெய்தி யின்புற்றபாடில்லை.

இவ்வாறிருத்தலை நோக்கி அருட்கடலாகிய இறைவனேயன்றி அவனருள் வழிப்பட்ட சான்றேர்களும் இன்புருவாகிய மெய்ப்பொருளை யுணர்த்தும் வேதாகம கீதை முதலிய எண்ணிறந்த மெய்ந் நூல்களை வெளிப்படுத்தலாயினர்.

அந்நூல்கள் யாவற்றினுள்ளும் சிறந்த அளவை நூல்ளாக எல்லாராலு மொப்பப்பெற்றவையும் இறைவனால் அருளிச் செய்யப் பெற்றவையுமாகிய நான்மறைகளே சிறந்தனவாகும்.

அவை மெய்ப்பொருளுணர்ச்சி கைவரற்குரிய சாதனங்களை யுணர்த்தும் வகையால் விரிந்து கிடப்பினும் மெய்ப்பொருளை யுணர்த்தும் மெய்வாக்கியங்களையே உயிராகக் கொண்டு திகழ்வனவாகும் என்பது அந்நான்மறை யுணர்ந்த நன்முனிவர் துணிபாகும்.

அம்மெய் வாக்கியங்கள் மகா வாக்கியங்களெனப்படும்.

அவ்வாக்கியங்கள் எவ்வாறு மெய்ப்பொருளைத் தெளியவுணர்த்துகின்றன என்று ஆய்ந்து முன்னூலாசிரியர்கள் முடிவு கட்டினரோ அவ்வாராய்ச்சியின் முடிபை எல்லாரும் விளக்கமாக வுணரும் பொருட்டு எளிய நடையில் ஸ்ரீ கோயிலூர் மகாதேவ ஞானதேசிக சுவாமிகளின் சீடர்களுளொருவரும் அத்வைத சித்தாந்தப் பிரகாசகரும் கைவல்லிய நவநீத நூலாசிரியரான நன்னிலம் ஸ்ரீ தாண்டவராய சுவாமிகள் நாராயண சுவாமிகளின் அதிட்டான நிலயத் தலைவருமாகிய ஸ்ரீ கோவிந்த சுவாமிகள், "மகா வாக்கிய விசாரம்" என்ற தலைப்பின் கீழ் ஓரமருந்த வுரைநடை நூலை யாத்திருக்கின்றார்கள்.

இவ்வுரைநடைநூல், அத்வைத சித்தாந்தத்தை உள்ளங்கையி னெல்லிக் கனிபோல விளக்குவதோடு வேதசித்தாந்த மிதுவே யாமெனவும் தெளிவுபடுத்தும் நன்னூலாகவு மிறிர்கின்ற தென்னத் தடையில்லை.

வீடுபெற நிற்பார் இதனைப் பெற்றுப் படித்து மெய்ப் பொருளிஃதெனத் தேறி யனர்த்த நிவிர்த்தி யானந்தப் பிராப்தி வடிவ வீடுபேறு பெறுவாராக.

இங்ஙனம்
கோயிலூர் மரபு, பண்டித,
**சித. நாராயணசாமி,**
அறுபத்துமூவர்
மடம்,திருவையாறு.

# மகாவாக்கிய விசாரம்

## முதலாவது சப்தார்த்தப் பிரகரணம்

### (நான்கு மகாவாக்கியங்கள் கூறப்படுகின்றன)

இருக்குவேதத்தின் ஐதரேய உபநிஷத்தில் "பிரஞ்ஞானம் பிரஹ்மம்" என்னும் மகாவாக்கியம் கூறப்பட்டிருக்கின்றது. இதன் பதவுரை, பிரஞ்ஞானம் பிரஹ்மம் = ஞான வடிவமாகிய ஆத்மா பிரஹ்மமாம் என்பதாம். இது மனன வாக்கியம்.

எசுர் வேதத்தின் பிருகதாரணியக உபநிஷத்தில் "அகம் பிரஹ்மாஸ்மி" என்னும் மகாவாக்கியம் கூறப்பட்டிருக்கின்றது. இதன் பதவுரை அகம்பிரஹ்மாஸ்மி = நான் பிரஹ்மமா யிருக்கின்றேன் என்பதாம். இது அனுபூதி வாக்கியம்.

சாம வேதத்தின் சாந்தோக்கிய உபநிஷத்தில் "தத்துவமஸி" என்னும் மகாவாக்கியம் கூறப்பட்டிருக்கின்றது. இதன் பதவுரை தத்துவமஸி = அது நீயாயிருக்கின்றாய் என்பதாம். இது உபதேச வாக்கியம்.

அதர்வண வேதத்தின் மாண்டூக்கிய உபநிஷத்தில் "அயமாத்மா பிரஹ்மம்" என்னும் மகாவாக்கியம் கூறப்பட்டிருக் கின்றது. இதன் பதவுரை, அயமாத்மா பிரஹ்மம் = இந்தஆத்மா பிரஹ்மமாம் என்பதாம், இது சம்மத வாக்கியம்.

இதற்கு உதாரணம் – ரிபு கீதை,

பெருமைமிகும் இருக்குமறை முடியி லுள்ள<br>
பிரஞ்ஞானம் பிரமமெனும் வாக்ய மொன்றாம்<br>
இருண்மருவா வெசுர்வேத முடியிலுள்ள<br>
இலகுமகம் பிரமாஸ்மி வாக்ய மொன்றாம்<br>
மருண்மருவாச் சாமமறை முடியி லுள்ள<br>
மகத்தான தத்வமசி வாக்ய மொன்றாம்<br>
அரியஅதர் வணவேத முடியி லுள்ள<br>
அயமான்மா பிரமமெனும் வாக்ய மொன்றாம்.

சுயமதுவாம் தத்வமசி யென்னும் வாக்யம்
சொல்லுமுப தேசமகா வாக்ய மாகும்
இயலுமகம் பிரமாஸ்மி யென்னும் வாக்யம்
இலகுமநு பூதிமகா வாக்ய மாகும்
மயன்மருவாப் பிரஞ்ஞானம் பிரம வாக்யம்
மனனத்ன் அப்பியாச வாக்ய மாகும்
அயமான்மா பிரமமென அறையும் வாக்யம்
அவைக்கெல்லாம் சம்மதமாம் வாக்ய மாமே.

ஆதலினால் தத்வமசி வாக்கி யத்தால்
அருளியவா றகண்டார்த்தம் அறிந்து கொண்டு
பேதமறப் பிரஞ்ஞானம் பிரம மென்று
பேசுமகா வாக்கதனான் மனனஞ்செய்து
வாதகமில் அயமான்மா பிரம மென்னும்
வாக்தனாற் சரியெனவே சம்ம தித்திங்
கோதுமகம் பிரமாஸ்மி வாக்கி யத்தால்
உரைத்தவகண் டார்த்தத்தை அனுபவிப்பாய்.

அனிசமகம் பிரமாஸ்மி வாக்கி யத்தால்
அகண்டபர பாவனையே யப்யா சித்து
நனிமருவும் பாவனையாம் நாம ரூப
நாட்டமெலாம் நன்றாக நாசஞ் செய்து
துனிமருவும் துவிதத்தின் தொடர்பே யின்றித்
துகளற்ற வகண்டார்த்தம் அனுப வித்தவ்
அனியமிலா வகண்டார்த்த வடிவே யாவாய்
அவ்வண்ணம் ஆகுவதே அகண்ட மோட்சம்.

**(சபதத்துடன் கூறல்)**

தற்பதலட்சியமான பிரம ரூபத்
துவம்பதலட் சியமான நீயே யாவாய்
அற்பமுமே யிதிலையம் அமைவ தில்லை
அகண்டசிவன் றன்னாணை யறைந்த துண்மை

சொற்பமிலா வகண்டபரி பூன்ற மான
சுத்தமதாம் பரப்பிரமம் நீயே யென்று
செப்பியிடும் குருபரனே குருவா கின்றோன்.
செப்பியவா றறிந்தவனே சீடனானோன்.

இந்த நான்கு மகா வாக்கியங்களின் விரிவுரைகள் பஞ்சதசி மகாவாக்கிய விவேகத்திலும், ரிபுகீதை நான்கு மகாவாக்கியார்த்த முரைக்கும் அத்தியாத்திலும் கூறப்பட்டிருக்கின்றன. அறிய விரும்புவோர் ஆண்டுக் காண்க. இந்நூலில் முமுக்ஷுக்கள் அனுபவித்தற்குரிய வாக்கியமாகிய அகம் பிரஹ்மாஸ்மி என்னும் மகாவாக்கியத்தின் பதவுரை விரிவுரைகளும், விசாரமும் கூறப்படுகின்றன.

(அகம் பிரம்மாஸ்மி என்னும் மகாவாக்கியார்த்தம் கூறப்படுகிறது)

அகம் பிரம்மாஸ்மி ; (பதவுரை) அகம் = நான்; பிரம்மம் = பிரம்மமாய்; அஸ்மி = இருக்கின்றேன். (என்றவாறு)

(விரிவுரை) அகம் சப்தார்த்தம் – வியஷ்டி தூலம், சூக்குமம், காரணம் என்னும் மூன்று சரீரங்களும், அந்தச் சரீரத்திரய அதிஷ்டான சாக்ஷி சேதனமும் சேர்ந்து அகம் பிரம்மாஸ்மி என்னும் மகாவாக்கியத்திலுள்ள அகம் சப்தத்தின் (1) வாச்சியார்த்தமாம். அதிஷ்டான சேதனம் மாத்திரம் இலக்ஷியார்த்தமாம்.

முற்கூறிய மூன்று சரீரங்களும் அன்னமயகோசம், பிராணமயகோசம், மனோமயகோசம், விஞ்ஞானமயகோசம், ஆனந்த மயகோசம் என்னும் ஐந்து கோசவடிவங்களாக இருக்கின்றன. மயம் = விகாரம் ; கோசம் = மறைப்பு. இவ்வைங் கோசங்கள் முன் முன் கோசங்கட்குப் பின்பின் கோசங்கள் உள்ளாய் இருக்கின்றன.

---

(1) வாச்சிய இலக்ஷியங்களின் விபரங்கள், கைவல்லிய நவநீதம், விசாரசாகரம், விருத்திப் பிரபாகரம் முதலிய நூல்களிற் காண்க.

அவற்றுள் தூல சரீரமானது அன்னசாரத்தால் உண்டாய், அன்னத்தால் வளர்வதாயிருத்தலால் அன்னமயம் எனப்படும். இந்த அன்னமயமானது நான் பிறந்தேன், நான் வளர்ந்தேன், நான் பருத்தேன் என்பதாதி அத்தியாச ரூப அபிமானத்தால் நான் என்னும் விருத்திக்கு யதார்த்தமாய் விஷயமாகவேண்டிய பிறத்தல் முதலிய விகாரங்களின்றிய ஆத்மாவை விஷயமாக வொட்டாமல் மறைத்தலால் கோசம் எனப்படும்.

சூட்சும சரீரமானது பிராணமய கோசம், மனோமய கோசம், விஞ்ஞானமய கோசம் என்னும் மூன்று கோசங்களாக இருக்கின்றது.

பிராணாதி வாயுக்களும், வாக்காதி கன்மேந்திரியங்களும் சேர்ந்து பிராண மயம் எனப்படும். இந்தப் பிராண மயமானது நான் உசுவசித்தேன், நான் நிசுவசித்தேன், நான் வசனித் தேன் என்பதாதி அத்தியாசரூப அபிமானத்தால் நான் என்னும் விருத்திக்கு யதார்த்தமாய் விஷயமாகவேண்டிய உசுவசித்தல் முதலிய விகாரங்களின்றிய ஆத்மாவை விஷயமாக வொட்டாமல் மறைத்தலால் கோசம் எனப்படும்.

கரணரூபமான மனமும் சுரோத்திராதி ஞானேந்திரியங்களும் சேர்ந்து மனோமயம் எனப்படும். இதில் உள்ளமும் சித்தமும் அடக்கம். இந்த மனோமயமானது நான் சங்கற்பித்தேன், நான் சிந்தித்தேன், நான் கேட்டேன் என்பதாதி அத்தியாசரூப அபிமானத்தால் நான் என்னும் விருத்திக்கு யதார்த்தமாய் விஷயமாகவேண்டிய சங்கற்பித்தலாதி விகாரங்களின்றிய ஆத்மாவை விஷயமாக வொட்டாமல் மறைத்தலால் கோசம் எனப்படும்.

கர்த்தாரூபமான புத்தியும், சுரோத்திராதி ஞானேந்திரியங்களும் சேர்ந்து விஞ்ஞானமயம் எனப்படும். இதில் அகங்காரமும் அடக்கம், இந்த விஞ்ஞானமயமானது நான் நிச்சயித்தேன் , நான் அபிமானித்தேன், நான் கேட்டேன் என்பதாதி அத்தியாசரூப அபிமானத்தால் நான் என்னும் விருத்திக்கு யதார்த்தமாய்

விஷயமாகவேண்டிய நிச்சயித்தலாதி விகாரங்களின்றிய ஆத்மாவை விஷயமாக வொட்டாமல் மறைத்தலால் கோசம் எனப்படும்.

காரண சரீரமாகிய அவித்தையிலுள்ள சத்துவ குணமும், இஷ்ட வஸ்துக்களின் தரிசன லாப போகங்களால் உண்டாகிய பிரியம், மோதம், பிரமோதம் என்னும் புத்தி விருத்திகளும் சேர்ந்து ஆனந்த மயம் எனப்படும். இந்த ஆனந்தமயமானது நான் பிரியன், நான் மோதன், நான் பிரமோதன் , நான் அறியேன் என்பதாதி அத்தியாசரூப அபிமானத்தால் நான் என்னும் விருத்திக்கு யதார்த்தமாய் விஷயமாகவேண்டிய பிரியமாதி விகாரங்களின்றிய ஆத்மாவை விஷயமாக வொட்டாமல் மறைத்தலால் கோசம் எனப்படும்.

இத்தகைய வியஷ்டி பஞ்சகோசங்களை வேறு பிரித்து இலக்ஷியார்த்தமான சாக்ஷியையறிவது சீவப்பிரம்ம ஐக்கியார்த்த ஞானத்திற்குச் சாதனமாவதால் அவசியமானதாம்.

கோசம் என்பதற்குப் பஞ்சதசி பிரத்யக்தத்துவ விவேகம் 33 – ஆம் சுலோக வியாக்யானத்தில் கூறப்பட்ட திருஷ்டாந்த தாஷ்டாந்தங்கள் வருமாறு – இவ்வன்னமயாதி கோசங்களால் மறைக்கப்பட்ட சொரூபமாகிய ஆத்மா (சீவாத்மா) தனது சொரூபத்தின் மறதியால் ஜன்மம் மரணம் முதலியவற்றின் அடைவாகிய சம்சாரத்தையடைகிறது. கோசம் அதாவது கோசகாரம் என்னும் புழுவினால் செய்யப்பட்ட அதன் கூடு அக்கூட்டைச் செய்த அந்தப் புழுவை மறைத்தலால் அப் புழுவின் கிலேசத்திற்கு ஏதுவாயிருப்பதுபோல சீவாத்மாவினால் அத்தியாசரூபமாய் நானென்று அபிமானஞ் செய்யப்பட்ட அன்னமயாதிகளும் அவ்வபிமானத்தைச் செய்த அந்தச் சீவாத்மாவின் ஆனந்தத் தன்மை அத்வைதத் தன்மை முதலிய ஆத்ம விசேஷணங்களை மறைப்பனவாயிருத்தலால் அந்தச் சீவாத்மாவின் கிலேசத்திற்கே ஏதுவாகின்றன ஆதலால் கோசம் எனப்படுகின்றன.

சங்கை – கோசகாரம், புழுவின் சத்தையினால் இருக்க வில்லை ; ஆதலால் புழுவை மறைத்தல் கூடும் ; பஞ்ச கோசங்கள்

ஆத்மாவின் சத்தையினால் இருக்கின்றன; ஆதலால் ஆத்மாவை மறைத்தல் எப்படிக்கூடும்.

உத்தரம் – கயிற்றில் அத்தியாசமாகத் தோன்றிய பாம்பு அக்கயிற்றின் சத்தையினால் இருந்து அக்கயிற்றையே மறைத்தல் போன்று ஆத்மாவி(பிரம்மத்தி)ல் தோன்றிய அஞ்ஞான வடிவ ஆனந்தமய கோசம் அதன்காரிய வடிவ ஏனைய கோசங்களும் அவ்வாத்மாவின் சத்தையினால் இருந்து அவ்வாத்மாவையே மறைக்கின்றன; அதாவது ஆத்மாவின் ஆன்ந்தத் தன்மை அத்வைதத் தன்மை முதலிய ஆத்மவிஷேணங்களை மறைக்கின்றன; என்று அறிக. முற்கூறிய கோசம் கோசகாரப் புழுவை மறைக்கும் திருஷ்டாந்தம் தன்னால் செய்யப்பட்டது தன்னையே மறைக்கின்றது என்பதற்கு மாத்திரம் கொள்ளத்தக்கது. முற்கூறிய ஐந்து கோசங்களின் ஐவகையான மறைப்பும் இங்குக் கூறிய அன்னமயாதிகளின் மறைப்பினுள் அடங்கும்.

இங்கு "ஆனந்தத்தன்மை, அத்வைதத்தன்மை முதலிய ஆத்மவிசேஷணங்களை மறைப்பனவா யிருத்தலால்" என்று கூறியதற்கு விளக்க வுரையாக ஆத்மாவுக்கும் பஞ்சகோசங்கட்கும் அந்நியோந்நியம் (ஒன்றற் கொன்று) அத்தியாசம் கூறுதல் வருமாறு.

ஆத்மாவிற்கு சத்து,சித்து, ஆன்ந்தம், அத்வைதம் என்னும் நான்கு விசேஷணங்களும், அன்னமாயதிகளுக்கு அசத்து, சடம், துக்கம்,துவைதம் என்னும் நான்கு விசேஷணங்களும் இருக்கின்றன. அவற்றுள் ஆத்மாவின் சத்தும், சித்தும் அன்னமயாதிகளின் அசத்திலும், சடத்திலும் சம்பந்த வாயிலாக அத்தியஸ்தமாய் அவற்றை மறைக்கின்றன. அதனால் அன்னமயாதிகள் அசத்துக்களாயும் சடங்களாயும் இருக்கின்றன என்னும் யதார்த்த ஞானமுண்டாகாமல் இருக்கின்றன விளங்குகின்றன என்னும் அயதார்த்த ஞானமுண்டாகிறது. அன்னமயாதிகளின் துக்கமும், துவைதமும் ஆத்மாவின் ஆனந்தத்திலும் அத்வைதத்திலும் சொரூபமாக அத்தியஸ்தமாய் அவற்றை மறைக்கின்றன. அதனால் நான்

ஆனந்தமாயும் அத்வைதமாயும் இருக்கின்றேன் என்னும் யதார்த்த ஞானமுண்டாகாமல் நான் துக்கி, நான் ஈசுவராதிகளினும் வேறானவன் என்னும் அயதார்த்த ஞானமுண்டாகிறது இவ்விரண்டு விசேஷணங்களின் ஆவரணத்தால் மற்றப் பூரணத் தன்மை நித்தியமுக்தத் தன்மை முதலிய விசேஷணங்களின் ஆவரணமும் சித்திக்கிறது. இவ்வாறு ஆத்மாவிற்கும் பஞ்ச கோசங்களும் + ❷ அந்நியோந்நியம் (ஒன்றற்கொன்று) அத்தியாசமிருத்தலால் முமுட்சுக்கள் ஆத்மாவையும் பஞ்சகோசங்களையும் விவேகித்தல் அவசியமானதாம்.

இங்கு ஆத்மாவின் அநிர்வசனீய சம்பந்தவாயிலாலான அத்தியஸ்த மறைப்பும் அஞ்ஞான காரியமேயாம் என்பதறியத் தக்கதாம். இந்த அந்நியோந்நிய அத்தியாசத்தின் நாசம் சத்து சித்து ஆனந்த அத்வைத வடிவம் ஆன்மாவென்றும் அசத்து சடதுக்க துவைத வடிவம் அனான்மாவான அகங்காராதிகள் என்றும் பிரித்தறிவதாலுண்டாவதாம்.

பிரஹ்ம சப்தார்த்தம் – சமஷ்டி விராட்டு, இரண்ணிய கர்ப்பம், அவ்வியாகிருதம் என்னும் சரீரத்திரயமும் அந்தச் சரீரத்திரய அதிஷ்டான பிரம்ம சேதனமும் சேர்ந்து பிரஹ்ம சம்பத்திற்கு வாச்சியார்த்தமாம். அதிஷ்டான பிரஹ்ம சேதனம் மாத்திரம் இலக்ஷியார்த்தமாம்.

விராட்டாதி மூன்று சரீரங்களும் ஈசுரு பஞ்சகோசங்களாம் இந்த விராட்டாதி சமஷ்டி பஞ்ச கோசங்களும்,வியஷ்டி பஞ்சகோசங்கள் சீவனது யதார்த்த சொரூபமான சாக்ஷி சேதனத்தை சீவனுக்கு தெரியவொட்டாமல் மறைப்பது போல, ஈசுரனது யதார்த்த சொரூபமான பிரம்ம சேதனத்தைச் சீவனுக்குத் தெரியவொட்டாமல் மறைப்பதால் அவை கோசங்கள் எனப்படுகின்றன.

❷ இந்த அந்நியோந்நிய அத்தியாசமானது அகங்காரக்கிரந்தி யென்றும், இருதயக் கிரந்தியென்றும் , பந்தம் என்றும், விபரீதபாவனை யென்றும் கூறப்படும்.

வியஷ்டி பஞ்ச கோசங்களை வேறு பிரித்து இலக்ஷியார்த்தமான சாக்ஷி சேதனத்தை யறிவது சீவப்பிரம்ம ஐக்கியார்த்த ஞானத்துக்குச் சாதனமாவதால் எப்படி அவசியமானதோ, அப்படிச் சமஷ்டி பஞ்சகோசங்களையும் வேறு பிரித்து இலக்ஷியார்த்தமான பிரம்ம சேதனத்தை யறிவது சீவப் பிரம்ம ஐக்கியார்த்த ஞானத்துக்குச் சாதனமாவதால் அவசியமானதாம்.

அஸ்மி சப்தார்த்தம் – அஸ்மி என்னும் சப்தத்திற்கு இருக்கின்றேன் (நான் பிரம்மாய் இருக்கின்றேன்) என்னும் ஐக்கியம் அர்த்தமாம்.

(இதுவரை அகம் பிரம்மாஸ்மி என்னும் மகாவாக்கியார்த்தம் கூறப்பட்டது . இனி ❸ அதத்வியாவிருத்தி இலக்கணத்தால் அதாவது பிரம்ம வடிவ ஆத்மா அல்லாதனவற்றை நிஷேதித்தல் இலக்கணத்தால், பிரம்ம வடிவ ஆத்மாவை யறிவிக்கும் “நேதி நேதி” என்னும் பிருகதாரணிய சுருதி வாக்கியத்தின் அர்த்தம் கூறப்படுகிறது.)

பிருகதாரணிய சுருதி – “நேதி நேதி”

நேதி என்பதன் பதவுரை– இதி = இது, அதாவது இஃது எனுந்தன்மையால் அறியப்படுகின்ற சடப்பொருள்; ந= அன்று , அதாவது அதையறியும் சித்தாகிய ஆன்மா அன்று; என்பதாம். இதன் விளக்கமான விரிவுரை, பஞ்சதசியில் கூறியிருப்பது வருமாறு– பஞ்சதசி, பஞ்சகோசவிவேகம் 32 – ஆம் சுலோகார்த்தம்.

(முற்கூறிய சாக்ஷியாகிய ஆன்மா பாதமின்றியதா யிருக்கின்றது. என்னும் அர்த்தத்தைச் சுருதியினால் திடப்படுத்து கின்றார்.)

---

❸ அதத்வியாவிருத்தி என்பதன் பதவுரை , தத் = அது அதாவது பிரம்ம வடிவ ஆத்மா; அ= அல்லாதனவற்றை; வியாவிருத்தி = நிஷேதித்தல்; என்பதாம்.

சாக்ஷி சைதன்னியம் பாதமில்லாததாயிருக்கின்றதால் " அந்த இவ்வாத்மா ❹ நேதி நேதி " (இஃது அன்று இஃது அன்று) என்பதாகச்சுருதியானது அதத் வியாவிருத்தி ரூபத்தால்(அநான்ம பதார்த்தங்களை நிஷேதிக்கும் வாயிலாக) பாதிக்கத்தக்க சகல அநான்ம பதார்த்தங்களின் சமூகத்தையும் பாதித்து பாதிக்கக் கூடாத இந்தப் பிரத்யாகாத்ம சொரூபத்தை மிஞ்சவைக்கின்றது.

33– ஆம் சுலோகார்த்தம் ("நேதி நேதி" என்னும் சுருதி பாதிக்கக்கூடியதைப் பாதித்து பாதிக்கக்கூடாததை மிஞ்ச வைக்கின்றது என்று தாம் கூறியதில் பாதிக்கக்கூடியது யாது? பாதிக்கக் கூடாதது யாது? என்னும் விருப்ப முண்டாக அவ்விரண்டனையும் பிரித்துக்காட்டுகின்றார்.

சாக்ஷிக்கு அன்னியமாயும் பாகியமாயும் இருக்குங் காரணத்தால் இஃது எனுந் தன்மையால் அறியப்படும் சொரூபமுடைய தேகாதிகள் எவ்வளவு இருக்கின்றனவோ அவை முழுவதும் பாதிக்கக்கூடியனவாம். நிஷேதஞ்செய்பவனுடைய சொரூபமாயும் எல்லாவற்றினுள்ளாயும் இருக்குங் காரணத்தால்

---

❹ "நேதி நேதி " என்று சுருதியானது இரண்டுதரங் கூறியதற்குத் தாத்பர்யம்– பஞ்சதசி, பஞ்சகோச விவேகம் 30–ம் சுலோக வாக்கியத்தின் விளக்கவுரையில் கூறியது வருமாறு, "நேதி நேதி " என்னும் சுருதியில் இரண்டு அன்மைப் பொருளைப் பயக்கும் " ந" என்னும் இடைச் சொற்கள் இருக்கின்றன. அவை காரணம் (அஞ்ஞானம்) காரியம் (ஸ்தூலம் சூக்ஷமம் ) என்னும் இரண்டு பிரபஞ்சங்களையும் கிரமமாக நிஷேதிக்கின்றன.

இங்கு சசிவன்ன போதம் – அறியாப் பொருள் காரண மாயை, குறித்தறியும் பொருள் காரியமாம் உலகு, இந்நெறியால் திகழ் நான்மறை அந்தமெலாம், நீயன்று என ஓதும் நிரந்தரமே : என்னுங் கவியில் அறியாப்பொருள் அதாவது அறிபடாப் பொருள் என்றது சீவனைக் குறித்து அறியபடாப் பொருளாயும், சாக்ஷியைக் குறித்து இது எனுந்தன்மையால் அறிபடும் பொருளாயும் இருக்கிறது என்பது உணரத் தக்கதாம்.

---

இஃது எனுந் தன்மையால் அறியக்கூடாத சொரூபமுடைய சாக்ஷி யெதுவோ அது பாதிக்கக்கூடியதன்று என்பதாம். (சித்தித்ததைக் கூறுகின்றார்.) எப்போது மிருப்பதாகிய பாதமின்றிய யாதொரு சாக்ஷியுண்டோ அதுவே ஆன்மாவாம்; அதாவது நான் என்று அறியத்தக்கதாம். திருசியங்களான அகங்காராதிகள் ஆன்மா அல்லனவாம்; அதாவது நான் அன்று எனநிஷேதிக்கத்தக்கனவாம்; என்பதாம்.

முதலாவது சப்தார்த்தப் பிரகரணம் முடிந்தது.

---

# இரண்டாவது விசாரப் பிரகரணம்

(அகம் பிரம்மாஸ்மி என்னும் மகாவாக்கியம் விசாரம் கூறப்படுகிறது)

**அகம் சப்த விசாரம்**

[அதத்வியாவிருத்தி (பிரம்ம வடிவ ஆத்மா அல்லாதனவற்றை நிஷேதித்த) இலக்கணத்தால் பிரம்ம வடிவ ஆத்மாவை யறிவிக்கும் "நேதி நேதி" (இது ஆத்மா அன்று, இது ஆத்மா அன்று) என்னும் பிருகதாரணிய சுருதியின் அனுசாரமான சித்சடவிசாரம் (சாக்ஷியாகிய அறிவு நான், அறிபடும் சடப் பொருளாகிய இது நானன்று என்னும் ஆராய்ச்சி) வருமாறு]

திருஷ்டாந்தம் – காண்பானால் இது எனுந் தன்மையால் அறியப்படுகிற சடமான கடமானது. அக் காண்பானுக்கு அன்னியமாயும் பாகியமாயும் இருப்பதாகிய காரணத்தாலன்றி அவ்வாறு அறியப்படுதல் பொருந்தாது. ஆகவே அன்னியமாயும் பாகியமாயும் இருத்தலால் சடமான கடமானது அதையறிகிற காண்பானா காததுபோல,

தாஷ்டாந்தம் – சாக்ஷியறிவினால் இது எனுந்தன்மையால் அறியப்படுகிற சடமான அன்னமய கோசமானது , அச்சாக்ஷியறிவுக்கு

அன்னியமாயும் பாகியமாயும் இருப்பதாகிய காரணத்தாலன்றி அவ்வாறு அறியப்படுதல் பொருந்தாதென்னும் யுக்தியினால் அன்னியமாயும் பாகியமாயும் இருத்தல் அறியப்படுகிறது. ஆதலால் *சடமான அன்னமய* கோசமாகிய இது இதை யறிகிற சாக்ஷியறிவாகிய நானன்று.

இவ்வாறே சாக்ஷியறிவினால் இது எனுந்தன்மையால் அறிப்படுகிற சடமான பிராணமயகோசமானது, அச்சாக்ஷியறிவுக்கு அன்னியமாயும் பாகியமாயும் இருப்பதாகிய காரணத்தாலன்றி அவ்வாறறியப்படுதல் பொருந்தாதென்னும் யுக்தியினால் அன்னியமாயும் பாகியமாயும் இருத்தல் அறியப்படுகிறது. ஆதலால் சடமாக பிராணமயகோசமாகிய இது இதையறிகிற சாக்ஷியறிவாகிய நானன்று.

இவ்வாறே சாக்ஷியறிவினால் இது எனுந்தன்மையால் அறிப்படுகிற சடமான மனோமயகோசமானது, அச்சாக்ஷியறிவுக்கு அன்னியமாயும் பாகியமாயும் இருப்பதாகிய காரணத்தாலன்றி அவ்வாறறியப்படுதல் பொருந்தாதென்னும் யுக்தியினால் அன்னியமாயும் பாகியமாயும் இருத்தல் அறியப்படுகிறது. ஆதலால் சடமான மனோமயகோசமாகிய இது இதையறிகிற சாக்ஷியறிவாகிய நானன்று.

இவ்வாறே சாக்ஷியறிவினால் இது எனுந்தன்மையால் அறிப்படுகிற சடமான விஞ்ஞானமய கோசமானது, அச்சாக்ஷியறிவுக்கு அன்னியமாயும் பாகியமாயும் இருப்பதாகிய காரணத்தாலன்றி அவ்வாறறியப்படுதல் பொருந்தாதென்னும் யுக்தியினால் அன்னியமாயும் பாகியமாயும் இருத்தல் அறியப்படுகிறது. ஆதலால் சடமான விஞ்ஞானமயகோசமாகிய இது இதையறிகிற சாக்ஷியறிவாகிய நானன்று.

இவ்வாறே சாக்ஷியறிவினால் இது எனுந்தன்மையால் அறியப்படுகிற சடமான ஆனந்தய கோசமானது, அச்சாக்ஷியறிவுக்கு அன்னியமாயும் பாகியமாயும் இருப்பதாகிய காரணத்தாலன்றி

அவ்வாறறியப்படுதல் பொருந்தாதென்னும் யுக்தியினால் அன்னியமாயும் பாகியமாயும் இருத்தல் அறியப்படுகிறது. ஆதலால் சடமான ஆனந்தமய கோசமாகிய இது இதையறிகிற சாக்ஷியறிவாகிய நானன்று.

இவ்வாறு இவ்வைங்கோசங்களையும் நிஷேதித்தபின் சூனியம் தோற்றுகிறது.

இவ்வாறே சாக்ஷியறிவினால் இது எனுந்தன்மையால் அறியப்படுகிற சடமான சூனியமானது, அச்சாக்ஷியறிவுக்கு அன்னியமாயும் பாகியமாயும் இருப்பதாகிய காரணத்தாலன்றி அவ்வாறறியப்படுதல் பொருந்தாதென்னும் யுக்தியினால் அன்னியமாயும் பாகியமாயும் இருத்தல் அறியப்படுகிறது. ஆதலால் சடமான ❺ சூனியமாகிய இது இதையறிகிற சாக்ஷியறிவாகிய நானன்று.

❻ இவ்வைங்கோசங்களும் சூனியமும் இவற்றுக்கு அன்னியமாயும் ஆந்தரமாயும் உள்ள எந்தச் சாக்ஷியறிவினால் அறிபடுபொருள்கள் ஆகின்றனவோ, இவ்வன்னமயாதி ஐங்கோசங்களையும் சூனியத்தையும் இது நானன்று இது நானன்று என நிஷேதிங்குங்கால் அந்நிஷேதத் திற்கு விஷயமாகாமல் அந்நிஷேதத்தின் அவதி ரூபமாய் எந்தச் சாக்ஷியறிவு சேஷிக்கின்றதோ, அதாவது மிஞ்சுகின்றதோ, அந்தச் சாக்ஷியறிவே ஆன்மாவாகிய நான்.

சங்கை – இத்தகைய சாக்ஷியறிவாகிய ஆன்மா பஞ்சகோசங்களையும், சூனியத்தையும் போல இது எனுந்தன்மையால் அறியப்படாததற்குக் காரணம் என்னையோ வெனின்.

---

❺ சூனிய விஷயம் கைவல்லிய நவநீதம் "முன்புகல் தசமன்" என்னுங் கவியில் தசம திருஷ்டாந்தத்துடன் கூறியுளது. அறியவிரும்புவோர் ஆண்டறிக.

❻ இவ்வைங்கோசங்களும் அறிபடுபொருள்கள் என்னும் விஷயம் பஞ்சதசி, பஞ்சகோச விவேகம் 12–ஆம் சுலோக முதலியவைகளில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது அறிய விரும்புவோர் ஆண்டறிக.

உத்தரம் – சாக்ஷியறிவான ஆன்மா அவற்றைப்போல அன்னிமாயும் பாகியமாயும் இல்லாமல் நிஷேதஞ் செய்பவனுடைய சொரூபமாயும் எல்லாவற்றினுள்ளாயும் இருக்குங்காரணத்தால் அவற்றைப்போல இது எனுந் தன்மையால் அறியப்படாததாம்; என்றறிக.

சங்கை – அப்படியானால் அத்தகையதாய் இருந்து [7]எல்லாவற்றையும் கண்டறிகின்ற சாக்ஷியறிவான ஆன்மாவை வேறு எந்த அறிவால் அறியக்கூடும் எனின்.

உத்தரம் – திருஷ்டாந்தம் கடம் சடமாயிருப்பதால் அக்கடத்தை யறிவதற்கு அக்கடத்தினும் அன்னியமாக ஞாதாவாகிய காண்பான் இருப்பது போல, தாஷ்டாந்தம் – ஆன்மாசுயம்பிரகாச சித்துருபமாயிருப்பதால் அவ்வான்மாவை யறிவதற்கு அவ்வான்மாவினும் அன்னியமாக ஞாதாவாகிய அறிபவன் இல்லாததால் சாக்ஷியறிவான ஆன்மா வேறு அறிவால் அறியப்படுவதின்றாம்.

மற்றோ நான் சாக்ஷியறிவான ஆன்மாவை அறிகின்றேன் என்னும் கர்த்திருபாவமும், என்னால் சாக்ஷியறிவான ஆன்மாஅறியப்படுகின்றது என்னும் கர்மபாவமும் நீங்கிய அனுபவத்தில் அதாவது சாக்ஷியறிவான ஆன்ம வடிவமாக நிலைத்தலாகிய அனுபவத்தில் சுயம்பிரகாசமாக அறிபவன் வடிவமாகவே விளங்குவதாம் என்றறிக.

"ஆன்மா வேறு அறிவால் அறியப்படுவதின்றாம்" என்றதற்கு உதாரணம், பிரமகீதை.

"வாக்குமன முங்கண்ணும் மற்றளவிந் தியங்களுமே
நோக்கரிய பரஞ்சுடரை நோக்கியிவை செலமாட்டா
தாக்கில்பரம் பரனறியிற் றான்வேறாம் அறியாதே
போக்குபொழு தினும்வேறாம் பரனரிய பொருளன்றோ,"

---

[7] எல்லாவற்றையும் கண்டறிகின்ற சாக்ஷி. என்னும் விஷயம் கைவல்லிய நவநீதம் " எல்லாங்கண்டறியுமென்னை" என்னுங் கவியில் தசம திருஷ்டாந்தத்துடன் கூறியுளது அறிய விரும்புவோர் ஆண்டாறிக.

வாக்குமனம் கண்செவியால் மன்னிநின்ற பிராணனினால்
நீக்கியுள கரணத்தால் நின்மலன்கோ சரிக்கவுறான்
பாற்கரனுக் குருவம்போல் பகர்பொருளெ லாந்திகழ்வ
தாக்கதனைச் சனாதனமாம் பரம்பிரமம் என அறிமின்.

என்பனவாம்.

"கர்த்திரு கர்மபாவம் நீங்கிய அனுபவத்தில் சுயம்பிரகாசமாக விளங்குவதாம்" என்றதற்கு உதாரணம் பிரமகீதை.

தர்க்க மானம் தானொழியத் தானா யுள்ள பேரொளியை
மிக்க கர்த்தா ஆகுதலும் விடயம் ஆகு தலுமொழியப்
பொக்க மறவே றறக்கண்ட பொழுது புரைதீர் பொருளான
தக்க பிரம தத்துவத்தைக் கண்டான் ஆகும் தானாக.

என்பதாம்.

கோசங்கள் ஓரவஸ்தையில் கண்டது மற்றோர் அவஸ்தை யில் காணாதழிதலின் அசத்து. அறிபடு பொருள்களாதலால் சடம், அப்பிரியமாய்க் கைவிடப்படுவதால் துக்கரூபம், கோசங்களின் அனுபவ ரூபசாக்ஷியாகிய நாம் ஒரு தினத்தில் சாக்கிர, சொப்பன, சுழுத்திகளிற் போலவே தினாந்தரம், மாசாந்தரம், வருஷாந்தம், உகாந்தரம், கற்பாந்தரம் என்னும் இறப்பெதிர்வு நிகழ்வாகிய முக்காலங்களிலும் ஒரே பிரகாசமாக நிற்றலால் சத்து. தினாதியாகச் சொல்லப்படும் காலங்கள் தோறும் தோற்றா நின்ற சாக்கிர, சொப்பன, சுழுத்திகளில் பிரதீதியாகும் ஸ்திர, அஸ்திர, மூலாக்ஞான விஷயங்களை அறிவதால் சித்து. நம் பொருட்டே மாலை, சந்தனம், வனிதை, ஆடை, கங்காதி தீர்த்தங்கள், இருக்காதி வேதங்கள், பூவாதி லோகங்கள், பிரம்மாதி தேவர்கள், குரு முதலிய யாவும் பிரியங்கள் ஆகின்றன, நம்மிடத்துள்ள பிரியம் எதன் பொருட்டும் ஆகிறதில்லை, ஆதலால் நாம் நிரதிசயப் பிரேமைக்கு விஷயம். இவ்வாறு நிரதிசயப் பிரேமைக்கு விஷயமாதலால் நாம் ஆனந்த ரூபன்.

## பிரம்ம சப்த விசாரம்

பேரறிவான பிரம்மத்தால் விளக்கப்படுகிற சடங்களான விராட்டு, இரண்ய கர்ப்பம், அவ்வியாகிருதம் என்னும் ஈசுரனது மூன்று சரீரங்களான சமஷ்டி பஞ்சகோசங்களும் அவற்றினபாவமும் அந்தப் பேரறிவான பிரம்மத்துக்கு அன்னியங்களாயும் பாகியங்களாயும் இருப்பதாகிய காரணத்தாலன்றி அவ்வாறு விளக்கப்படுதல் பொருந்தாதென்னும் யுக்தியினால் அன்னியங் களாயும் பாகியங்களாயும் இருக்கின்றன என அறியப் படுகின்றன. ஆதலால் சடங்களான இவைகள் இவற்றை விளக்குகிற பேரறிவாகிய பிரம்மமன்று.

விராட்டாதி சமஷ்டி பஞ்சகோசங்களையும் அவற்றின பாவத்தையும் விளக்குகிற பேரறிவே பிரம்மமாம். இத்தகைய பிரம்மமானது தனது சுயம்பிரகாசத்தினால் விளங்குவதாம்.

"விராட்டாதிகள் பிரம்மத்தால் விளக்கப்படுகிறது" என்றதற்கும், "பிரம்மமானது தனது சுயம்பிரகாசத்தினால் விளங்குவதாம்" என்றதற்கும் உதாரணம், பிரம்ம கீதை.

இலங்கிரவி இந்துஅனல் தாரகைமின் எல்லாம்
நலம்பெற விளங்குவது ஞானவொளி கொண்டே
புலம்படும் அனைத்தையும் விளக்குபர போதம்
துலங்குவது தன்னுடைய சோதியத னாலே.

என்பதாம்.

பிரம்மத்தால் விளக்கப்படும் விராட்டாதி சமஷ்டி பஞ்ச கோசங்கள் அசத் சடதுக்கரூபங்களாக இருக்கின்றன. விராட்டாதிகளை விளக்கும் பிரம்மம் சத்து சித்து ஆனந்த ரூபமாக இருக்கின்றது.

### அஸ்மி சப்தார்த்த அனுசந்தானம்

திருஷ்டாந்தம் – கடாகாசமும் மகாகாசமும் விசாரத்தால் கடமும், பிரம்மாண்டமும் ஆகிய உபாதிகள் விடுபட்டவிடத்து அசங்கதன்மை நிர்விகாரத்தன்மை இலக்கணங்களில் ஏகமாயிருந்தால் ஏகமாயிருப்பதுபோல, தாஷ்டாந்தம் – சாக்ஷியறிவான நாமும், பேரறிவான பிரம்மமும் முற்கூறிய விசாரத்தால் வியஷ்டி சமஷ்டியாகிய உபாதிகள் விடுபட்ட விடத்து சச்சிதானந்த அசங்க நிர்விகாரத்தன்மை இலக்கணங்களில் ஏகமாயிருத்தலால் ஏகமாம்.

இங்கு திருஷ்டாந்த தாஷ்டாந்தங்களில் கூறப்பட்ட அசங்க நிர்விகாரத்தன்மைகளின் வேற்றுமை என்னையோ-வெனின், திருஷ்டாந்தத்தில் ஆபேக்ஷிகமாயும் தாஷ்டாந்தத்தில் நிரபேக்ஷிகமாயும் கொள்ளத்தக்கதாம்; என அறிக.

(இது வரை வியஷ்டி சமஷ்டி பஞ்சகோசங்கட்கும் கூடஸ்த பிரம்மங்கட்கும் உள்ள பிராந்தி சித்த அபேத ஞானத்தை விசாரத்தால் உண்டான சுபாவ சித்தபேத ஞானத்தால் நீக்கி, கூடஸ்த பிரம்மங்கட்கு உள்ள பிராந்தி சித்தபேத ஞானத்தை நீக்கி யதார்த்தமாயுள்ள அபேத ஞானத்தைக்கூறி, இனி சேதனத்திற்கு விலக்ஷணமாகத் தோற்றப்பட்ட வியஷ்டி சமஷ்டிப் பிரபஞ்சத்திற்கு சேதனத்தோடுள்ள சுபாவசித்த பேதஞானத்தை அபவாதத்தினால் வாதித்து அதிஷ்டான கூடஸ்த பிரம்மசேதனத்தோடு அபேதப்படுத்தும் யதார்த்தமாயுள்ள அபேதஞானம் கூறப்படுகிறது.)

திருஷ்டாந்தம் – இரச்சுவை நன்றாய்க் கண்டால் இரச்சுவில் ஆரோபமாய்த் தோற்றுகிற சர்ப்பம் தண்டம் முதலியவைகள் அபவாதமாய் அதிஷ்டான இரச்சு மாத்திரமாய்மிஞ்சுவது போல,

தாஷ்டாந்தம் – பிரத்யகபின்ன பிரம்மாகிய நமது சத்து சித்து ஆனந்த அத்வைத வடிவத்தை அகண்டாகார ❽ விருத்தியினால் நன்றாய்க் கண்டால் நமது பிரத்யகபின்ன பிரம்ம சொரூபத்தில் ஆரோபமாய்த் தோற்றுகிற திருஷ்ட நஷ்ட சுபாவமுடைய வியஷ்டி சமஷ்டியகிய சர்வப் பிரபஞ்சமும் ❾ அபவாதமாய் அதிஷ்டானப் பிரத்யகபின்ன பிரம்மாகிய நமது சத்து சித்து ஆனந்த அத்வைத சொரூபமாத்திரமாக மிஞ்சுகிறது.

"நன்றாய்க் கண்டால் அபவாதமாய் மிஞ்சுகிறது" என்ற தற்கு, உதாரணம்.

---

❽ விருத்தி வடிவ ஞானமானது வஸ்துவின் அதீனமாம்; இது வஸ்து தந்திரம் எனப்படும். விருத்தி வடிவ பாவனையானது புருடனுடைய அதீனமாம்; இது புருட தந்திரம் எனப்படும். இதன் விசேட விபரம் கைவல்லிய நவநீதம் " விருத்தி ஞான மந்தக்கரணத்தொடு " என்னுங்கவி முதலியவற்றிற் கூறியுளது. விரிவாயறிய விரும்புவோர் ஆண்டறிக. இங்கு கூறிய அகண்டாகார விருத்தியானது வஸ்து தந்திரம் என அறியத்தக்கதாம்.

❾ "அபவாதமாய் " என்றதில் அறிய வேண்டிய விளக்கமான விஷயம் வருமாறு. ஆன்மாவிற்கும் அகங்காராதிட்கும் உள்ள அன்னியோன்னிய அத்தியாசவடிவ நான் என்னும் கோச ரூப அகங்காரமானது மற்றப் பிரபஞ்சப் பிரதிபந்தங்களைப் போலச் சுலபத்தில் அபவாதமாகாமல் இருந்து கொண்டு அல்லது அபாவாதமானாலும் மறுபடி உடனுக்குடன் வந்து கொண்டு அபரோக்ஷ அனுபவம் வராமல் தடுத்துக் கொண்டிருக்கும். அவ்வகங்காரம் சிறி திருந்தாலும் அக்கினியைப் போல உடனே பெரிதாய்விடுமாதலால் அவ்வகங்காரத்தை மிகவும் சூட்சும புத்தியினால்அறிந்து சிறிதும் இல்லாமற் போகும் படி பிரத்யகபின்ன பிரம்மத்தைக் காண்பதனால் அபவாத மாக்கினால். அந்தக் கணமே அபரோக்ஷப்பிரம்மானந்தானுபவம் உண்டாம்; என்னும் சர்வசாத்திரங்களிலும் கூறப்பட்டுள்ள விஷயம் ஞாபகத்தில் கொண்டு, எப்போது அப்பியாசம் செய்தும் அபரோக்ஷப்பிரமானந்தானுபவம் வரவில்லையோ அப்போது அகங்காரம் அபவாதமாகவில்லை என்று சூட்சுமபுத்தியினாலறிந்து அபவாதமாக்கி அபரோக்ஷப் பிரம்மானந்தா னுபவத்தையடைய வேண்டியதாம்.

ஞானவாசிட்டம், முண்டகோப நிடதார்த்தம் கூறும் கவி.

“பராபரமாம் அப்பொருளை வயங்கக் கண்டால்
பெருமனக் கட்டறும் ஐயமறும் கருமமறும்

என்பதாம்.

ஆதலால் நமது சொரூபத்தையன்றிச் சொப்பனம் போலத் தோற்றும் வியஷ்டி சமஷ்டியாகிய சர்வப் பிரபஞ்சமும் பரமார்த்த திருஷ்டியில் இல்லை. ஆகவே அகம் பிரம்மம், பிரம்மம் அகம், சர்வம் பிரம்மம் என்று அப்பியசிக்கவேண்டும். அகம் பிரம்மம் என்னும் அப்பியாசத்தால் பரிச் சின்னப்பிராந்தியும் , பிரம்மம் அகம் என்னும் அப்பியாசத்தால் பரோக்ஷப் பிராந்தியும், சர்வம் பிரம்மம் என்னும் அப்பியாசத்தால் துவைதப் பிராந்தியும் நீங்குவனவாம்.

இரண்டாவது விசாரப் பிரகரணம் முடிந்தது.

## மூன்றாவது அனுபூதிப் பிரகரணம்

(முதல் பிரகரணத்தில் சுருதியின் மகாவாக்கியார்த்தம் கூறப்பட்டது. இரண்டாவது பிரகரணத்தில் சுருதிக்கனுகூலமான யுக்தியினால் மகாவாக்கிய விசாரம் கூறப்பட்டது. இந்த மூன்றாவது பிரகரணத்தில் சுருதியுக்திகளை யனுசரித்த மகாவாக்கிய விசாரத்தினாலுறத்தக்க அனுபவக்கிரமம் கூறப்படுகிறது.)

இவ்வாறு முமுட்சுக்கள் (மோட்ச விருப்பமுடைய அதிகாரிகள்) மகாவாக்கிய விசாரஞ்செய்து, அன்னமயகோசமுதல் ஆனந்த மயகோச பரியந்தம் நானல்லவென்று நிஷேதித்து, அவைக்கட்கு விலட்சணமாய் அதற்குப் பின்பு காணப்படும் பஞ்சகோசங்களின் அபாவரூபமான சூனியத்தையும், அறிபடுபொருளாதலால் நானன்று என்று நிஷேதித்து, அகத்தில் பஞ்சகோச சூனியங்களைக் காணும் அறிவு ரூபமான சாக்ஷி நானென்றறிந்து அவ்வாறறிந்த அற்பமாகிய அதாவது பரிச்சின்னமாகிய நிலையையும் அகம் பிரம்மம் என்று

அப்பியாசஞ் செய்வதால் விடுத்து, அகம் பிரம்மம் என்னும் அகண்டாகார விருத்தியையும் நிதித்தியாசன பரிபாகவசத்தினால் உறங்கினவன் கையிற்பதார்த்தம் போல நழுவச் செய்து, அகண்ட ஏகரசமாயுள்ள பரிபூரணமான பிரம்மத்தை அனுபவிக்க வேண்டும்.

பஞ்சகோச சூனியங்களாகிய துவிதங்களை நானெனல் பந்தமாதலால் நானன்று என்று நிஷேதித்து என்றும், சாட்சி நான் என்று அறிந்தது பந்தமன்றாயினும் புருஷார்த்த சாதன ஞானமன்றாதலால் சாட்விருத்தியையும் விடுத்து என்றும், புருஷார்த்த சாதன ஞானமாயினும் அத்வைத அவஸ்தான ரூபம் என்னும் சாத்தியமான நிர்விகற்ப அனுபவத்திற்கு அஞ்ஞாதமான அகண்ட பிரம்மாகார விருத்தியும் ஒழிதல் வேண்டுமாதலால் அகண்டாகார விருத்தியையும் நழுவச் செய்து என்றும், வெகுவித பிரயாசங்கட்குக்காரணமான சித்த விகற்பங்களனைத்தும் தொலைத்து அகண்ட ஏகரச சொரூபம் ஆகவேண்டுமாதலால் அகண்ட ஏகரசாமாயுள்ள பரிபூரணமான பிரம்மத்தைஅனுபவிக்க வேண்டும்; என்று கூறப்பட்டன.

**இப்பொருளின் கவி ( கைவல்லிய நவநீதம்)**

“ தஞ்சமாம் குருவும் சொன்ன தத்துவ வழிதப் பாமல்
பஞ்சகோ சமும்க டந்து பாழையும் தள்ளி யுள்ளில்
கொஞ்சமாம் இருப்பும் விட்டுக் கூடஸ்தன பிரமம் என்னும்
நெஞ்சமும் நழுவி யொன்றாய் நின்றபூ ரணத்தைக் கண்டான்.”

என்பதாம்

**இதற்கு உதாரணம், ரிபுகீதை,**

“தேகமுதல் நானென்னல் துவித விர்த்தி
திகழ்சாட்சி நானென்னல் சாட்சி விர்த்தி
ஏகபரம் நானென்னல் அகண்ட விர்த்தி
இம்மூன்று விருத்திகளில் இரண்டைத் தள்ளி
ஆகுமகண் டாகார விருத்தி தன்னை

அனவரதம் ஆதரவாய் அப்யா சித்துச்
சோகமுறும் சித்தவிகற் பங்கள் தீர்த்துச்
சொன்னவகண் டேகரச சொரூபம் ஆவாய்.

என்பதாம்.

சமாதி லட்சணம் வருமாறு – வியுத்தான சம்ஸ்காரத்தின் ஒழிவும், நிரோத சம்ஸ்காரத்தின் பிரகடத்தன்மையும் ஆகிய அந்தக்கரணத்தின் ஏகாக்கிரத் தன்மைரூபமான பரிணாமம் சமாதி எனப்படும். அச்சமாதியும், சவிகற்ப சமாதி, நிருவிகற்ப சமாதி என இருவகைத்தாம். ஞாதா, ஞான, ஞேயரூபத் திரிபுடித் தோற்றத்தோடு கூட அத்விதீயப் பிரம்மத்தின் கண் அந்தக் கரண விருத்தியின் ஸ்திதி சவிகற்ப சமாதி எனப்படும். அதுவும் சத்தானுவித்தம், சத்தானனுவித்தம் என இருவகைத்தாம். அவற்றுள் அகம் பிரம்மம் என்னும் சத்தத்தோடு கூடியிருப்பதைச் சத்தானுவித்த மெனவும், சத்தர கிதத்தைச் சத்தானனு வித்தமெனவும் கூறுவர். திரிபுடித் தோற்றமின்றி அகண்ட பிரம்மாகாரமான அந்தக்கரண விருத்தியின் ஸ்திதியை நிருவிகற்ப சமாதி கட்குப் பேதமுண்டு; அவைகளில் சவிகற்ப சமாதிசாதனம்; நிருவிகற்பசமாதி பலமாம்; நிருவிகற்ப சமாதியும் அத்வைத பாவானரூப மென்றும் , அத்வைத அவஸ்தான ரூபமென்றும் இருவகைத்தாம். அத்வைதப் பிரம்மாகாரமான அந்தக்கரணத்தின் அஞ்ஞாத விருத்தியோடு கூடில் அது அத்வைத பாவனாரூப நிருவிகற்ப சமாதி யெனப்படும்; அச்சமாதியின் அப்பியாச மிகுதியில் பிரம்மாகார விருத்தியும் சாந்தமாய்விடில் விருத்தி ரகிதமான அச்சமாதி அத்வைத அவ்ஸ்தானருப நிருவிகற்ப சமாதி யெனப்படும். அத்வைத அவஸ்தானரூப நிருவிகற்ப சமாதியே முக்கிய பலமாம்; அத்வைத பாவனாரூப நிருவிகற்ப சமாதி அதற்குச் சாதனமாம்.

வியுத்தான சம்ஸ்காரம் = வெளிப்பட்ட அனான்மாகார சம்ஸ்காரம்.

நிரோத சம்ஸ்காரம் = அடங்கிய ஆன்மாகார சம்ஸ்காரம்.

மற்றும் சமாதியின் விசேஷ விபரங்களும், அச்சமாதிக்குப் பிரதி பந்தங்களின் விசேஷ விபரங்களும் விசாரசாகரம் ஏழாவது தரங்கத்திலும், ஜீவன்முக்தி விவேகம், சாதனப் பிரகரணத்திலும் கூறியுள்ளன; ஆண்டுக் காண்க.

இவ்வாறு குருவருளாலும் மகாவாக்கிய விசாரத்தாலும் அடைந்த சமாதியினால் அபரோக்ஷப்பிரம்ம ஞானம் உண்டாகும். அபரோக்ஷப்பிரம்ம ஞானம் உண்டானாலும் பிரதி பந்தங்கள் உண்டாமாயின் அந்த அபரோக்ஷ அனுபவந்திடப் படமாட்டாது.

இராஜாவானவன் பர்ச்சுவை நேத்திரத்தினாலறிந்தும் விபரீதபாவனை எப்படி நிவிர்த்தியாக வில்லையோ அப்படிக் குரு வருளாலும் மகாவாக்கிய விசாரத்தாலும் பிரம்மாபரோக்ஷ ஞானம் உண்டாயினும், யாவருடைய புத்தியில் அசம்பாவனை விபரீத பாவனையாகிய தோஷமுண்டோ! அவருடைய தோஷ ரூபமான களங்கத்தோடு கூடிய ஞானம் பலத்திற்கு ஏது வாகாது; என்றறிக. பர்ச்சுவின் திருஷ்டாந்தம், விசாரசாகரம் ஐந்தாவது தரங்கத்தில் கூறியுளது; ஆண்டுக் காண்க. பிரதிபந்தங்கள் எவையென்றால் அஞ்ஞானம் , சந்தேகம், விபரீதமாம் (அபரோட்ச ஞானம் வந்தும் இந்தப் பிரதிபந்தங்கள் உண்டாவதற்குக் காரணம் என்னையோ வெனின்) துன்பத்தைப் பயக்கின்ற இம்மூவகைப் பிரதிபந்தங்களும் பூர்வம் நாநாவித ஜனனங்களில் பழகிவந்த வாசனையினாலே அடிக்கடி உண்டாகும். (அவையுண்டானால் படும் இழுக்கு என்னையோவெனின்) அவையுண்டானால் மேலான பிரம்மான்ம ஐக்கிய ஞானம் மோக்ஷமாகிய பலத்திற்கு ஏதுவாகாமற் போகும். ஆதலால் இவ்வஞ்ஞான சந்தேக விபரீதங்களைச்சிரவண, மனன, நிதித் தியாசனங்களினாலே திடமுடன் (தைரியத்தோடு கூடி நின்று) நாசம் செய்யவேண்டும்.

திடமாவது, சிட்டுக்குருவி தர்ப்பை நுனியால் சமுத்திரத்தை இறைத்துப் பாழாக்கத்தான் கொண்ட முயற்சி போலும், பிரதிபந்தங்கள் அடிக்கடி யுதிப்பதால் மலையாமல் அவை

கெடுதற்குரிய வாயிலில் நெடுங்காலம், நிரந்தரம், நேயம் அதாவது ஆதரவோடு கூடி நிற்கும் முயற்சி.

இப்பொருகளின் கவிகள் (கைவல்லிய நவநீதம்)

நீ நானென் றிரண்டி லாமல் நிறைந்தபூ ரணமாய் எங்கும்
நானாகத் தெளிந்த ஞானம் நழுவுமோ குருவே யென்றான்
தானாகும் பிரமரூபம் சற்குரு நூலால் தோன்றும்
ஆனாலும் தடைகள் உண்டேல் அனுபவம் உறைத்தி டாதே.

தடையெவை யெனிலஞ் ஞான சந்தேக விபரீ தங்கள்
படர்செயும் இந்த மூன்றும் பலசன்மப் பழக்கத் தாலே
உடனுடன் வரும்வந்த தக்கால் உயர்ஞானங் கெடுமி வற்றைத்
திடமுடன் கெடுப்பாய் கேட்டல் சித்தித்தல் தெளித லாலே.

என்பனவாம்.

(பிரதிபந்த சகித ஞானம் பலத்திற்கு ஏதுவாகாது என்பதைக் திருஷ்டாந்த முகத்தினால் அறிவித்து முற்கூறியதை வற்புறுத்துதல்)

அக்கினயானது மணிமந்திர அவுஷதங்களினாலே அடக்கப் படுமாயின் கொஞ்சமும் காஷ்டம் முதலியவற்றைத் தகிக்க யோக்கியமாகாது; அதுபோல அஞ்ஞான சந்தேக விபரீதங்களாலே அமிழ்த்துண்டதத்துவ ஞானமாகிய அக்கினியினால் அனாதிகாலந் தொடுத்து வந்துள்ள கர்த்திருத்துவாதி பந்தமும் வேகாது. ஆகலின் நெடுங்காலம், நிரந்தரம், நேசத்தோடும் அப்பியசித்துச் சிரவண, மனன, நிதித்தியாசனங்களாலே ஞானபலமான மோட்சப் பிரதி பந்தங்களான அஞ்ஞான சந்தேக, விபரீதம் என்பவற்றை ஒழிக்கவேண்டும்.

**இப்பொருளின் கவி (கைவல்லிய நவநீதம்)**

அக்கினி கட்டுப் பட்டால் அற்பமும் சுடமாட் டாது
மக்கின ஞானத் தாலே வந்தபந் தமும் வே வாது
சிக்கெனப் பழகிக் கேட்டல் சிந்தித்தல் தெளித லாலே
விக்கின மடஞ்சந் தேகம் விபரீதம் போக்கு வாயே. என்பதாம்.

(நிவிர்த்திக்கத் தக்கவைகளான பிரதிபந்தங்களின் சொரூபங்களைக் கூறுதல்) சிவோகம் அதாவது நான் பிரம்மமாயிருக்கின்றேன் என்னும் பாவனையை மறைத்து நான் பிரம்மம் அல்லன் என்னும் நினைப்பூட்டுவது அஞ்ஞானமாம், நீ பிரம்மம் என்றருளிய ஆசிரியர் வாக்கியத்தை விசேஷித்து நம்பாமல் நான் பிரம்மமோ! அலனோ! என்று கலங்குவது சமுசயமாம். திருஷ்ட நஷ்டமான ஜகத்துச் சத்தியமென்றும் அனான்மாவாகிய தேகம் நான் என்றும் உள்ளே பொருந்து வதான வாசனாரூப மோகமே ⑩விபரீதமாம்.

(முன் சொல்லிய அஞ்ஞானாதிப் பிரதி பந்தங்களின் விரோதிகளான சிரவணாதிகளின் சொரூபங்களைக் கூறுதல்) பிரம்மாகார விருத்தியை வேதாந்தார்த்த சிந்தனத்தினாலே, தான் அடிக்கடி ஆவிர்த்தி செய்வது சிரவணமாம்,. சிரவணத்தால் சம்மதித்துள்ள பொருளை சீவப்பிரம்ம அபேதத்தைச் சாதிப்பதும், பேதத்தை வாதிப்பதுமான யுக்தியினால் ஆராய்தல் மனனமாம். சித்தம் பிரம்மாகார மாத்திரமாக நிற்கும் அனுபவம் நிதித்தியா சனமாம். நாள்தோறும் இவ்வாறு ①சிரவணாதிகளை அனுஷ்டித்து வந்தால் அவ்வஞ்ஞானாதிப் பிரதிபந்தங்கள் நீங்கி மோட்சம் உண்டாகும்.

---

⑩ விபரீத பாவனையின் சொரூபமும், அதன் நிவிர்த்தியுபாயமும் பஞ்சதசி திருப்திதீபம், சமஸ்கிருதநூல் 103 ஆம் சுலோகம் முதல் 136 ஆம் சுலோகம் வரையிலும் , தமிழ்க்கவிநூல் 64 ஆம் கவிமுதல் 81ஆம் கவி வரையிலும் , விரிவாகக்கூறப்பட்டிருக்கின்றன ஆண்டுக் காண்க.

①சிரவண மனன நிதித்தியாசன அகண்டாகாரவிருத்தி சமாதிகளின் விசேட விபரங்கள், பஞ்சதசி பிரத்யக்தத்துவ விவேகம், சமஸ்கிருதநூல் 53 ஆம் சுலோகம் முதல் 65 ஆம் சுலோகம் வரையிலும், தமிழ்க்கவி நூல் 49 ஆம் கவி முதல் 57 ஆம் கவி வரையிலும் விரிவாக் கூறப்பட்டிருக்கின்றன.

விசார சாகரம், 18 ஆம் பிரசங்கம் முதல் 23 ஆம் பிரசங்கம் வரையிலும், 459 ஆம் பிரசங்கம் முதல் 472 ஆம் பிரசங்கம் வரையிலும் விரிவாகக் கூறப்பட்டிருக்கின்றன.

ஈண்டிது விவேகம்; மோட்சமானது ஞானத்தால் நியமமாக வுண்டாகும்! ; இதுவே சித்தாந்தமாம் ; அந்த ஞானம் சிரவணத்தா லுளதாம் சிரவணம் இருவகைத்து ஒன்று வேதாந்த வாக்கியத்திற்கும், சுரோத்திற்கும் உளதாய சம்யோகரூபம், மற்றொன்று வேதாந்த வாக்கியத்தின் விசாரரூபம், ஞானத்திற்கேது பிரதமசிரவணம், இரண்டாவதல்ல, என்னை? சத்த ஜன்னிய ஞானத்தில், இந்திரியத்தோட சத்தத்தின் சம்யோகமே சர்வத்திர ஏதுவாம். ஆகலின் வேதாந்த வாக்கியத்திற்கும் சுரோத்திரத்திற்கும் உளதாய சம்யோக ரூபமான சிரவணம் பிரம்ம ஞானத்திற் கேதுவாம், அவாந்தர வாக்கியத்தின் சிரவணம் பரோட்ச ஞானத்திற்கேதுவாம். மகாவாக்கியத்தின் சிரவணம் அபரோட்ச ஞானத்திற்கேதுவாம். ஒருவனுக்கு ஞானம் உதயமாயினும் அசம்பாவனை விபரீத பாவனைகளுண்டாமாயின், அவனால் இரண்டாவதான சிரவணமும் மனன நிதித்தியாசனங்களும் செய்யற்பாலனவாம். பிரதம சிரவணமோ ஞானவாயிலாக மோட்சத்திற் கேதுவாம். இரண்டாவதான விசாரரூப சிரவணமும் மனன நிதித்தியாசனங்களும் அசம்பாவனை விபரீத பாவனைகளை நிவிர்த்திக்கும் வாயிலாக மோட்சத்திற் கேதுவாம். வேதாந்தத்தின் அர்த்தசிந்தனத்தினாலே அடிக்கடி பிரம்மாகார விருத்தியுண்டாகும், ஆதலால் அடிக்கடி வேதாந்தத்தின்

---

ரிபுகீதை, நான்கு மகாவாக்கியார்த்தம் உரைக்கும் அத்தியாயம் 33 – ஆம் கவி முதல் 48 – ஆம் கவி வரையிலும் விரிவாகக் கூறப்பட்டிருக்கின்றன.

ஜீவன் முக்தி விவேகம், நான்காவது பிரகரணம் ஜீவன் முக்திக்குப் பிரயோஜனப் பிரசங்கம்; தத்துவம் அறியப்படினும் சித்த விசிராந்தி யில்லாதவனுக்குச் சுகராகவர்களுக்குப் போலச் சம்சயம் உண்டாகும், நிதாகருக்குப் போல விபரீதம் உண்டாகும். அவை சித்தவிசிராந்தியால் நீங்கி ஞானரக்கையுண்டாகின்றது ; என்னும் பிரசங்கத்தில் சம்சய விபரீத விபரமும் அவற்றை நீக்கும சித்தவிசிராந்தி வடிவ நிதித்தியாசன சமாதியின் விபரமும் விரிவாகக் கூறப்பட்டிருக்கின்றன.

இவை முதலியவற்றில் காண்க.

அர்த்த சிந்தனாரூபமான இரண்டாவதான சிரவணத்தினாலேயே அஞ்ஞானப் பிரதிபந்தம் நிவிர்த்தியம். நிதித்தியாசனத்தின் பரிபாகாவஸ்தையைத்தானே சமாதி யென்பாராகலின், சமாதியும் நிதித்தியாசனத்தில் அந்தர்ப்பாவமாம்; வேறு சாதனமன்று.

"தொக்க பிறவித் திரள்கள் தொறும் தொடர்ந்து வந்த வாதனைதான், மிக்க கால யோகத்தின் பழக்கத் தல்லால் விடாது".

என்று வாசிட்டத்தில் கூறியிருப்பது பற்றி, நாள் தோறும் இவ்வாறு சிரவணாதிகளை அனுஷ்டித்து வந்தால் அவ்வஞ் ஞானாதிப் பிரதிபந்தங்கள் நீங்கி மோட்சம் உண்டாகும்; என்று கூறப்பட்டது.

**இப்பொருள்களின் கவிகள் (கைவல்லிய நவநீதம்)**

பிரமபா வனையை மூடிப் பேதங்காட் டுவதஞ் ஞானம்
குரவன்வாக் கியம் பாமல் குழம்புவ தாஞ்சந் தேகம்
திரமறு சகம்மெய் யென்றும் தேகம்நான் என்றும் உள்ளே
விரவிய மோகம் தானே விபரீதம் என்பர் மேலோர்,

தத்துவ அனுபோ கந்தான் சாதித்தல் கேட்டல் என்பார்
இத்துள பொருள்ஊ கத்தால் உசாவல்சிந் தித்தல் என்பார்
சித்தமே காந்தம் ஆன தெரிசனம் தெளிதல் என்பார்
நித்தமிப் படிசெய் தக்கால் நிர்வாணம் பெறுவாய் நீயே.

என்பனவாம்.

நிதித்தியாசன பரிபாக சமாதியால் அகங்காராதி விபரீதபாவனை நீங்குமென்றதற்கு உதாரணம், பஞ்சதசி பிரத்தியக் தத்துவ விவேகம்,

**சுலோகம்:**

அநாதாவிஹ ஸம்ஸாரே ஸம்சிதா: கர்மகோடய:
அநேந விலயம் யாந்தி சுத்தோ தர்மோ விவர்ததே

(நிதித்தியாசனத்தின் பரிபாக அவஸ்தையாகிய சமாதியின் அவாந்தர பலத்தைப் பைங்கல சுருதி கூறியபடி கூறுகின்றார்)

(இதன் பொருள்) அனாதிகாலத்து இந்தச் சம்சாரத்தில் சஞ்சித புண்ணிய பாவங்களாகிய கர்மகோடிகள் அதாவது அளவில்லாத கர்மங்கள் சம்பாதிக்கப்பட்டிருக்கின்றன. அவை இந்த நிருவிகற்ப சமாதியினால் ஞான வாயிலாக நாசத்தை அடைகின்றன. " அந்தப் பராவரமாகிய பிரம்மத்தைப் பார்க்குமிடத்து இந்தப் புருஷனது கர்மங்கள் க்ஷயமாகின்றன" என்னும் முண்டக சுருதியாலும் " ஜ்ஞானாக்கினி ஸர்வகர்மாணி = அர்ச்சுனா! ஞானாக்கினி சர்வகர்மங்களையும் பஸ்மமாக்குகின்றது " என்னும் கீதாஸ்மிருதியினாலும் ஸ்தூல சூட்சும காரிய சமூகங்களோடு கூடிய அவித்தையை நிவிர்த்திக்கும் சாக்ஷாத்காரத்துக்குப் பிரதிபந்தத்தின் அதாவது சித்தத்தின் மலவிக்ஷேப தோஷ முதலிய வடிவப் பிரதிபந்தத்தின் நிவிருத்தி வாயிலாகச் சாதன (காரண) மாகிய சுத்ததர்மம் (புண்ணியம்) விருத்தியையடைகின்றது.

சுலோகம்:

தர்மமேகமிமம் ப்ராஹு: ஸமாதிம் யோகவித்தமா:
வர்ஷத்யேஷ யதோ தர்மாம்ருததாரா: ஸஹஸ்ரச:

(சமாதியால் தர்மம் விருத்தியாகின்ற தென்பதில் பிரமாணம் யாதெனப் பைங்கல சுருதியைக் கூறுகின்றார்)

(இதன் பொருள்) யோகத்தை மிகவும் உணர்ந்தவர்களாகிய பிரம்ம சாக்ஷாத்காரமுடையவர்கள் இந்த நிருவிகற்ப சமாதியைத் தர்மமேகம் என்று சொல்லியிருக்கின்றனர்.

(அந்தச் சமாதி தர்மமேகம் என்பதைச் சித்திக்கச் செய்தல் வடிவ உபபாதனம் செய்கின்றார்) இந்தச் சமாதி ஆயிரமாயிரமாகத் தர்மமாகிய அமிர்ததாரையை வருஷிக்கின்றது: சமாதியின் "ஒருக்ஷணம் இருது அதாவதுயஞ்ஞும் நூறின் தர்மமாம் " என்னுஞ் சுருதியினால் ஆதலால் இந்தச் சமாதியைத் தர்மமேகம் என்றனர்.

**சுலோகம்**

அமுநா வாஸனாஜாலே நி : சேஷம் ப்ரவிலாபிதே
ஸமூலோந்மூலிதே புண்யபாபாக்யே கர்மஸம்சயே

(இப்போது சமாதியின் பரமப் பிரயோஜனத்தைப் பைங்கல சுருதி கூறியப்படி கூறுகின்றார்.)

(இதன் பொருள்) இந்தச் சமாதியினால் அகங்காரம் (நானெனல்) மமகாரம் (எனதெனல்) கர்த்திருத்வ முதலிய அபிமானத்திற்கு ஏதுவாகிய ஞானத்தினும் விரோத சம்ஸ்கார சமூகமாகிய வாசனைக்கூட்டம் முழுவதும் நாசமடைந்தும், புண்ணிய பாபமென்னும் கர்மக்கூட்டம் வேரோடு நாசமாகியும்.

**சுலோகம்**

வாக்யமப்ரதிபந்தம் ஸத்ப்ராக்பரோக்ஷா வபாஸிதே
கராமலக வத்போதமபரோக்ஷம் ப்ரஸூயதே

(பலித்ததை அதாவது சித்தித்ததைக் கூறுகின்றார்)

(இதன் பொருள்) " தத்துவமஸி" முதலிய மகாவாக்கியங்கள் கர்மம் வாசனை யென்னும் பிரதி பந்தங்கள் இல்லாதனவாய் முன் பரோக்ஷத் தன்மையால் பிரகாசிக்கப்பட்ட தத்துவமான பிரத்யக்காகிய பிரம்மத்தில் கரத்திலுள்ள ஆமலகத்தை (நெல்லிக்கனியை) அல்லது அமலகத்தை (சுத்தமாகிய நீரை) விஷயஞ்செய்யும் அபரோக்ஷ ஞானத்தைப்போல் அபரோக்ஷத் தன்மையால் தத்துவத்தைப் பிரகாசிப்பித்தலில் சாமார்த்திய முள்ள ஞானத்தை உண்டாக்குகின்றன; என்பனவாம்.

(ஞானத்திற்குப் பிரதிபந்தகளான அஞ்ஞானாதிகளின் சொரூபமும், அவைகளின் விரோதிகளான சிரவணாதிகளின் சொரூபமும் கூறி, " நாள்தோறும் இவ்வாறு சிரவணாதிகளை அனுஷ்டித்து வந்தால் அவ்வஞ்ஞானாதிப் பிரதிபந்தங்கள் நீங்கி மோட்சம் உண்டாகும் " என்று முன்கூறியதனால், பிரதி பந்த

நிவிர்த்தியின் பொருட்டுச் சிரவணாதிகள் சடபரதாதியர் போல, மரணபரியந்தம் செய்ய வேண்டுமோ? என வரும் ஆசங்கையைத் தொலைத்தற்கு அவை அனுஷ்டிக்குங் கால அளவை கூறப்படுகிறது.) எவ்வளவு காலம் ஞானத்தின் கர்த்தாவாகிய அந்தக்கரணமும், பிரம்மாகாரமான அந்தக் கரணத்தின் விருத்திரூப ஞானமும் இருக்குமோ, அவ்வளவு காலமும் அஞ்ஞானாதிப் பிரதிபந்த விரோதிகளான சிரவணாதிகள்வேண்டும். ஞாதாஞானம் என்னும் விகற்பங்கள் இறந்து மகாவாக்கியப்பிரமாண ஜன்னிய ஞான விஷயமான ஞேயமாத்திரமாக அவசேஷித்த (மிஞ்சிய) பின்னர், சிரவாணதியனுஷ்டானங்களுள் ஓர் அனுஷ்டானமும் வேண்டுவ தில்லை. நாள்தோறும் ஆகாயம் போல அசங்க சிதான்மா மாத்திரமாய் சீவன் முத்தராயினோர், பிராரத்த நாசத்தில் விதேக முத்தியடைந்து சார்வகாலமும் அந்தப் பிரம்ம சொரூபமாக இருப்பர்.

**இப்பொருளின் கவி (கைவல்லிய நவநீதம்)**

எத்தனை நாண்ஞா தாவும் ஞானமும் இருக்கும் உன்பால்
அத்தனை நாளும் வேண்டும் அப்பாலோர் செயலும் வேண்டா
நித்தமும் வெளிபோற் பற்றா ஞேயமாத் திரமாய்ச் சீவன்
முத்தரா னவர்வி தேக முத்திபெற் றிருப்பார் என்றும்.

என்பதாம்.

(மகாவாக்கிய சிரவண, மனன, நித்தியாசனத்தின் மகத்துவம் கூறப்படுகின்றது)

முமுக்ஷுக்களாகிய அதிகாரிகட்கு நல்லயுக்தியாகிய இந்த மகாவாக்கிய சிரவண, மனன, நிதித்தியாசனத்தினால் பிரதிபந்த ரகித ஞான வாயிலாகப் பிரயாசமின்றி மிகுந்த சுலபத்தில், அன்னமுண்டால் பிரத்யக்ஷ பலமாக பசித்துன்பம் நீங்கித் திருப்தி யுண்டாவது போல பிரத்தியக்ஷ பலமாகச் சர்வதுக்க நிவிர்த்தி பரமானந்தப்பிராப்தியானது உண்டாகின்றது.

நல்லயுக்தி , என்பதற்கு உதாரணம், ஞானவாசிட்டம்,

"ஊக நன்மையால் அல்லது வெலப்படா துள்ளம்
வேக மத்தமா அங்குசத் தலால் வெலப் படுமோ
ஏக போதத்தை அறிதல் நல் லவருடன் எய்தல்
சோக வாதனை விடலுயிர் தோன்றுறா தொடுக்கல்"

"உரைசெய்நால் வகையு நெஞ்சை ஒடுக்குமூ கங்க ளாகும்
புரையிலா இவற்றுக் குள்ளம் ஒடுங்குதல் புயன்ம ழைக்குத்
தரையுறு தூளி போலாம் சாற்றுமூ கங்க ளன்றி
விரைவினெஞ் சடர்ப்பார் தீபம் விட்டிருள் இருளாற்றீர்ப்பார்."

பிரயாசமின்றி, என்பதற்கு உதாரணம் சீவன் முக்தி விவேகம்,

"பிராரப்த கர்மம் எப்படித்தத்துவ ஞானத்தைவிடப் பிரபலமோ அப்படிப் பிராரப்த கர்மத்தை விட யோக அப்பியாச முயற்சி பிரபலமாம். அவ்வாறாகவே யோகிகளாகிய உத்தாலகர், வீதகவ்வியர் முதலியோருக்குச் சுவேச்சையாகத் தேகத்தியாகம் பொருந்து கின்றது. அற்பாயுளுடைய நம்மனோருக்கு அத்தன்மைய யோகம் சம்பவியாவிடினும், காமாதி வடிவ சித்த நிரோத மாத்திரமான யோகமுயற்சியில் பிரயாஸம் யாதுளது? யாதொன்றுமில்லை. சாஸ்திரீயமான பிரயத்தினத்திற்கு (முயற்சிக்கு)ப் பிரபலத்தன்மை அங்கீகரியாவிடின், அப்போது வைத்திய சாஸ்திரம் முதல் மோக்ஷசாஸ்திர பரியந்தமான எல்லாவற்றிக்கும் அனர்த்தத்தன்மைப் பிரசங்கம் வருகின்றது. ஒரு காலத்தில் முயற்சி பயன் கொடாதது கண்டு முயற்சி முழுவதும் துற்பலமென்று சொல்லக்கூடாது. அன்றியும் வாசிட்டத்தில் முயற்சியே பிரபலமென்று வெகுவாக வசிட்டரால் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே முயற்சியே பிரபலமென்று சித்திக்கின்றது."

மிகுந்த சுலபத்தில் , என்பதற்கு உதாரணம் . வாசிட்டம்,

"சாக்ஷியனுசந்தானம் மிகின்,

அலர்க சக்குமுன் இமைக்குமுன் அகங்கரம் அகற்றுதல் எளிதாகும்
பலவு ரைப்பதென் னேகமாய் அனந்தமாய்ப் பரம்சித் தேயாகிக்
குலவு சுத்தமாய் விண்ணிலும் நுண்ணிதாம் குறைவிலாப் பொருணிற்கும்
சலன மற்றதைப் பாவனை செய்துப சாந்தனாய் இடர் தீர்வாய்"

திருஷ்டபலமாக, என்பதற்கு உதாரணம் பஞ்சதசி, திருப்திதீபம், சுலோகம் 114.

"அந்யதேதி விஜாநீஹீ த்ருஷ்டார்த்தத்வேந புத்திவத் ."

(இதன் பொருள்) தத்துவ பாவனை வடிவ நிதித்தியாசனம், போஜனமானது பசித்துன்ப நிவிர்த்திவடிவ திருஷ்ட(பிரத்யக்ஷ) பலமுடையதாயிருப்பது போல, விபரீதபாவனா துக்க நிவிர்த்திவடிவ திருஷ்ட (பிரத்யக்ஷ) பலமுடையதாயிருத்தலால் நியமம் இன்றிச் செய்யத்தக்கதாம்.

என்பன முதலியவையாம்.

தனது ஆன்ம ரூமான பிரம்மத்தை யடைந்து சர்வ துக்கநிர்த்தி பரமானந்தப் பிராப்தியை யடைதல் ②முமுட்சுக்களாகிய நிஷ்காம அதிகாரிகட்கு பிரயாசை யின்றியதாம். தேகாதிகளில் அகந்தை மமதைரூப அபிமான முடைய சகாம புருஷர்களாகிய அநதிகாரிகளுக்கு மிகுந்த பிரயாசையுடையதாம்.

---

②நான் பந்தத்தை யடைந்திருக்கின்றேன் மேலாகிய மோக்ஷபதத்தை இனியடைய வேண்டும், என்று நிச்சயமுடையவன் எவனோ அவன் முமுட்சுவாம். அவனுக்கு முக்தி வாஞ்சை யுண்டாயிருத்தலின் அதற்குப் பூர்வம் இந்திரியங்கள் விடயங்களில் நின்றும் அவசியம் உபரதியடைந்திருக்கும். இருக்கவே இகபரபோக வைராக்கியம் இன்றியமையாது அடைந்திருக்கும். ஆகவே நித்தியம் இன்னது அநித்தியம் இன்னது என்னும் பகுப்பாகிய விவேகமும் உண்டாகியிருக்கும், எங்ஙனமெனின் பூர்வ சாதனங்கள் உளவாகிய பின்னரே உத்தரசாதகனங்கள் உளவாதல் நியமமாதலின் என்றறிக. ஆகவே முமுட்சு வென்பவன் நான்கு சாதன முடையவனாம் .

இதற்கு உதாரணம். பகவத்கீதை. (ஸ்ரீ பொன்னம்பலசுவாமிகள் உரை) 12 ஆம் அத்தியாயம் 4 ஆம் கவி " காரணம் இறந்தொன்றிற்கும்" என்பதன் விரிவுரைப்பகுதி, " முன்னே ஒன்பதாம் அத்தியாயத்தின் மூன்றாவது கவி " அழிவொன்றிலது" என்பதன் உரையில் அக்ஷய பலமுடையதும் சுதர்மத்தின் பயனாகப் பொருந்தியதுமான ஆன்ம ஞானம், அரிதன்றியது = குருவின் கிருபையினால் அடையா நிற்கும் விசாரத்தைச் சககாரியாக வுடைத்ததாகுந் தத்துவமசியாதி மகாவாக்கியங்களால் ஆயாசமில்லாமலே சம்பாதிக்கத் தக்கது; என்று கூறி; இங்கே, காரண மிறந்தொன்றிற்குங் காட்சியிற் படாததொன்றைச் சேர்பவர் வருத்தம் வேறு செப்பிடல் ஆவதன்று = தனக்கு ஒரு காரணமுமில்லாமல் அந்தரிந்திரிய பகிரிந்திரியங்களுள் ஓர் இந்திரியத்திற்கும் தனதறிவில் விஷயமாக அகப்படாததான நிர் விசேஷ அட்சர தத்துவத்தை (மாயையாதி விசேஷணங்களோடு கூடாத நாசமற்ற பிரமதத்துவத்தை) அடைபவருடைய கிலேசமானது வேறொரு கிலேசங்களோடு சேர்த்துச் சொல்லலாவதன்று, பின்னையோ அதிகதர கிலேசமாம் என்று கூறினது, முன்னொடுபின் விரோதமாகின்றதே எனின்? முன்னே, அரிதன்று என்றது, விவேகாதி சர்வ சாதன சம்பன்னரான நிஷ்காம அதிகாரிக்கு , இங்கே அதிக தர கிலேசம் என்றது தேகாதிகளில் அகந்தை மமதை ரூப அபிமானமுடைய சகாம புருஷர்க்கு; ஆதலால் முன்னொடுபின் விரோதமின்மை யறிக."

13–ஆம் அத்தியாயம். 15ஆம் கவிப்பகுதி.

"அருவமாய் அதிதூரமாய தணித்துமாய தனைத்துமாய்."

(இதன் பொருள் ) ஞேயப் பிரமமானது உருவமில்லாததாய், விவேக வைராக்கியாதி சாதனமின்றிய புருஷர்க்கு ஆயிரங்கோடி வருஷங்களாலும் அடையப்படாமையின், அப்பகிர்முக புருஷர்க்கு இலக்ஷங்கோடி யோஜனை மார்க்க முடைய தேசம்போல அத்தியந்தம் அதாவது மிகவும் தூரமாகியது. விவேக வைராக்கியாதி சாதகனங்கள் நிறைந்த புருஷர்க்கு எல்லாந்தானாய்த் தமது ஆன்ம

ரூபமாகலின், அத்தியந்தம் அதாவது மிகவும் சமீபமுமாகியது.

ஞானவாசிட்டம், திதிப்பிரகரணம், கசன்கதை,

"ஊகமின் மூகர்க் கெல்லாம் ஊழிவெங் கடலாம் சென்மம்
மோகமில் ஊகத் தோர்க்கு முன்னுறு கோவின் தாளாம்
சோகமில் ஞானி நெஞ்சில் தொடர்ந்தசிற் றின்பம் பற்றா"

(இதன் பொருள் ) யுக்தியை வெகுதூரத்தில் விடுத்த மூடர் யாவருக்கும் சம்சாரம் மகாப்பிரளய சமுத்திரமாம்; குதர்க்கமற்ற யுக்தியை அதாவது சந்தேக விபரீதமற ஆன்மாவை யறிவதாகிய யுக்தியையுடைய அறிஞர்க்கோ, எதிரில் அற்பமாய்க் தோற்றும் சம்சாரம் . பசுவின் பாதப்பள்ளத்திலுள்ள தண்ணீராம்; சோகமயமான சகத்திரயமும் உதயமேயாகாத தத்துவஞானியுடைய மனதில் மற்றையர் யாவரும் பின்பற்றிய எந்தச்சகத்தின் வடிவங்களும் மயக்கமாட்டாவாம்; (ஆதலால் மயங்கியவர்கள் செய்யும் மாயாநடனம் ஆன்மஞானி நடிக்காமல் மற்றவர் நடிக்கும் மாயாநடனங் கண்டு நிச்சலனாயிருப்பன் என்பன முதலியவையாம்.

இவ்வாறு முடுட்சுக்கள் மகாவாக்கியார்த்த சிரவணஞ்செய்த, விசாரஞ்செய்து, அனுபூதியடைந்து காம மரணாதிசர்வதுக்க நிவிர்த்தி பரமானந்தப் பிராப்திவடிவ மோக்ஷானந்தம் அடைவார்களாக.

(இதுவரையில் அனுபூதியடையும் கிரமம் கூறப்பட்டது. இனி அனுபூதிக்கிரமத்தைக் குறித்த ஆன்றோரின் அமிர்தமொழிகள் கூறப்படுகின்றன.)

ஸ்ரீ சங்கர பகவத் பாதாச்சார்ய சுவாமிகள்

**விவேகசூடாமணி.**

(ஆன்மாவாகிய தன்னையறியாதவன் தன்னைக் கொன்றவனாவன் என்று கூறுகின்றார்.)

எத்திற ஏதுவாலோ எய்தியும் மநுடத் தேகம்
அத்திலும் ஆர ணார்த்தம் அறிவதற் கேது வாக

ஒத்த ஆண் மையைய டைந்தும் உண்மையாம் முத்தி சேர
எத்தனஞ் செய்யா மூடன் என்றும் ஆன் மாவைக் கொன்றோன்.

**அத்வைதானுபூதி.**

கற்பிதமான இவ்விரஜ்ஜு சர்ப்பம் இரஜ்ஜுவின் சத்தையினால் சத்தியம்போல் தோற்றுகிறது. அதுபோலக்கற்பிதமான இந்த ஜகத்து சுவாத்ம சத்தையினால் சத்தியம்போல் விளங்குகிறது.

கற்பிதமான பாம்பின்மையால் இரஜ்ஜுவே மிஞ்சுகிறது. அதுபோலக் கற்பிதமான ஜகத்தின்மையால் எப்போதும் ஆத்மாவே மிஞ்சுகிறது.

ஸ்தாணு (தூண்) அறியப்பட்டபோது அதன் சத்தையினால் சத்தியம்போல் தோற்றிய திருடன் ஏது? திருடனில்லாத தாகவே பயம் ஏது? இவ்வாத்மா அறியப்பட்டபோது இதன் உலகமில்லாதபோது பயம் ஏது?

# பஞ்சதசி திருப்தி தீபம்

(திருப்தி தீபமானது பிருகதாரண்யக சுருதியின் வியாக்கியானவடிவமாதலால் அதன மூலமாயுள்ள வியாக்கி யானிக்கத் தகுந்த சுருதியை முதுலிற் படிக்கின்றார்)

இந்தப்புருடன்றானென வேதன்னை யுணர்ந்தால்

எந்தப் பொருள் இச்சித்தெவன் இன்புக்குடல் வேவாம்.

(இதன் பொருள் ) இந்தப் பிரத்யக்கு ③வடிவபுருஷனே யான் என்று (சந்தேகவிபரீதமற) ஆன்மாவை யறிந்தால் எந்த வஸ்துவை விரும்பி எவனுடைய காமத்தின் பொருட்டு சரீரத்தைப் பின்பற்றித் தாபப்படுவன்.

---

③ யான் அதாவது நான் என்னும் அகங்காரம் மூன்றுவிதமாதல் வாசிட்டம். திதிப்பிரகரணம், பீமபாசதிடர் கதை. கவி 11,12,13,14, 15–ல் காண்க.

ஞாலம் மித்தையெனும் ஞானம் உண்மையின்
நயப்ப தோடிலை நயப்பவன்
சால மாயினவை தாபம் என்பது
சமிக்கும் எண்ணெயறு தீபம் நேர்.

(இதன் பொருள்) (சந்தேகவிபரீதமற ஆன்மாவை யறிந்தவனுக்கு) பிரபஞ்சம் பொய் என்னும் புத்தியிருத்தலினால் காமிய மாகிய வஸ்துவும் காமுகனாகிய போக்தாவும் இல்லையாம். (காமியத்தையும் காமுகனையும் நிஷேதிப்பதினால் என்னையெனிற் கூறுகின்றார்) இச்சையின் விஷயமும், இச்சிப்பவனும் அத்தியந்தம் நாசமாயின் (இல்லாமுயற் கொம்பிற்போல) இச்சை யில்லாமற் போதலால் இச்சையாகிய காரணத்தாலுண்டாகும் சந்தாபமும் அதாவது துக்கமும் காரணமின்மையால் எண்ணெயில்லாத விளக்குப்போல அழிந்துபோகும்.

இவனுடைக் கேடுதுயில் முதலவற் றேகரியின்
இனிதனுப விக்க லாமே
அவமுறும் போதுதன தியல்பிதென் றேயுடன்
உடன்பகுத் தறிகு வானால்
எவமறக் கூறதுசெய் தழிவினைத் தேறியபின்
எவளவும் போகம் நயவான்
புவனியின் மூர்ச்சையது புகிகிடப் பானொருநற்
புதுமணம் நயப்பன் எவனே.

(சகத்தின் விநாசம் அனுபவிக்கப் படுதல்போல சிதாபாசனது விநாசமும் அனுபவிக்கப் படுதலால் சிதாபாசன் மித்தையாம் எனக்கூறுகின்றார்) (பொருள்) விஞ்ஞான மய சத்தவாச்சியனான இச்சிதாபாசனுடைய விலயம் சுழுத்தியாதிகளில் சாக்ஷியினால் நன்றாய் அனுபவிக்கப்படுகிறது. (மித்தியாத்துவ மிருக்குக அதனாலென்னை யெனிற் கூறுகின்றார்) கூடஸ்தனினின்றும் வேறு பிரிக்கப்பட்ட சிதாபாசன் மித்தையாக அறியப்பட்டபோது தனது சொரூபம் மித்தையாமென்று அடிக்கடி கூடஸ்தனினின்றும் பிரித்து

உணருவான். (பிரித்து அறிவதனாற்றானென்னை யெனிற் கூறுகின்றார்) குற்றமின்றிக் கூடஸ்தனினின்றும் கொஞ்சமும் போகத்தை விரும்பான். (தனது விநாச நிச்சயகாலத்தில் போகேச்சை யினின்மையில் திருஷ்டாந்தங்கூறுகின்றார்.) மூர்ச்சை யடைந்து பூமியில் சயனித்திருக்கும் எப்புருஷன்தான், ஒப்பற்ற நல்ல புதிய விவாகத்தை யிச்சிப்பான்; ஒருவனும் இச்சியான். (மேலும் முன்போன்று அதாவது அஞ்ஞான காலத்திற்போன்று நான் போக்தாவென்று வியவகரிப்பதும் நீங்கும். இவ்வாறு அசங்க ஆன்மா போக்தா அன்றென்று நீங்குவதால் சரீரங்களைப் பற்றிய சந்தாபம் (துக்கம்) உண்டாவதின்றாம்)

## பூதவிவேகம்.

51 ஆம் கவி " அவனியில் " என்பது முதல் 55ஆம் கவி "ஒன்றெனும் " என்பது வரை கூறியுள்ளதின் பொருள். (இப்போது பௌதிகமான பிரமாண்டாதிகளினின்றும் சத்தையை வேறாக்கும் பொருட்டு அது இருக்கும் விதத்தைக் காண்பிக்கின்றார்) பிரமாண்டமானது பிருதிவியைப் பார்க்கிலும் பத்துமடங்க குறைந்து அவ்விடத்து அதாவது பிருதிவியின் மத்தியில் பதினான்கு உலகங்களும் பொருந்தியிருக்கும் . இப்பதினான்கு உலகங்களில் பிராணிகளின் தேகங்கள் யோக்கியப்படி பொருந்தி யிருக்கின்றன. (அவைகளின் சத்தையைப் பிரிப்பதின் பயனைக் கூறுகின்றார்.) இப்பிரமாண்டாதிகளில் அனுகதமாய் முதலில் தோற்றுவதாயுள்ள சத்தாகிய இருப்பை வேறு பிரிக்கின் ஏனைப் பிரமாண்டாதி களனைத்தும் மித்தையாகத் தோன்றும் பிரமாண்டாதிகள் இந்த அத்வைதப் பிரமத்தில் (சுத்தியில் இரசதம் போலத்) தோற்றினம் இந்த அத்வைதப்பிரம்மத்தில் என்ன குறைவு வந்து பொருந்தும். ஒன்றுமில்லை என்றபடி. இப்படிமித்தையாகத் தோற்றவே சத்வஸ்து ஒன்றேயாம் என்னும் அத்வைத புத்தியுண்டாம். அத்வைத புத்தியுண்டாகவே ஜீவன்முக்தியும், இனிவரும் பிறப்பின்றியதான விதேக முக்தியும் உண்டாம். இப்படிக் கீதையில் பகவானால்

அர்ச்சனா! இந்த அத்வைதப் பிரமநிஷ்டையினை நீ சேர்ந்து பிராந்தி நீங்கி முக்தனவாய், அந்திய காலத்திலும் பிரமத்தில் திதியடைந்து பிரமபதந்தை யடைவாய் என்று கூறப்பட்டிருக்கிறது.

(ஞானியினது அந்தியகால சத்தத்தின் இரண்டு பொருள்கள் , அதாவது முற்கூறிய கீதாவாக்கியத்தில் அந்தியகாலம் என்று கூறியதற்கு இரண்டு பொருள்கள் கூறுகின்றார்.)

சத்து வடிவமாகிய அத்வைதத்திலும் மித்தியா வடிவமாகிய துவைதத்திலும் உள்ள அந்நியோந்நியாத்தியாசமாகிய ஐக்கியத்தின் ஞானமாகிய பிராந்தி எதுவோ அதன் அந்திய (முடிவு) காலமாவது அந்தச் சத்தாகிய அத்வைதத்தையும் மித்தையாகிய துவைதத்தையும் கிரமமாய்ச் சத்தியாகவும் மித்தையாகவும் பேதமா யறிவதேயாம்; மற்ற வர்த்தமான தேகம் விழுதலன்று.

அல்லது லோகப் பிரசித்தமாகத் தேகத்தினின்றும் பிராணப் பிரதானமாகிய இலிங்கம் பிரிவதே அந்திய காலமாயிருக்குக. அந்தத் தேகத்தினின்றும் பிராணன் பிரியுங்காலத்திலும் முன் நீங்கிய பிராந்தியானது மறுபடியும் வருதலில்லை. என்பதாம்.

ஞானவாசிட்டம் ; நிர்வாணப் பிரகரணம் சிகித்துவசன்கதை,

(ஆன்ம சொரூபத்தின் மறதியால் அகங்காராதிப் பிரபஞ்சங்கள் அனைத்தும் உற்பத்தியாகின்றன, எனக் கூறுகின்றார்.)

"இந்தவறி வெத்தால் " என்னுங்கவியின் பொருள். இந்த அறிவு எந்த ஏதுவினால் மனோபுத்தியாதி ரூபமாக விவர்த்த மாயிற்று என்று இதனை இப்போது யான் விசாரிக்குங்கால் வேறேதுமில்லை அளவறு காலத்தினாலே தெரிய வேண்டியதைத் தெரிந்து கொண்டேன். ஆச்சரியம் ! ஆச்சிரியம்! சடப்பொருள்களின் முதன்மையாகத் தோற்றும் சைதன்னியத்தின் விஸ்தாரத்தைப் பிரியந்தமாகவுடைய இந்த அகங்காரம், புத்தி, மன்ம், இந்திரியம் முதலிய அனைத்தும் உண்மையாகப் பொய்யேயாயினும் ஆன்மாவின் சொரூப நிட்டை வடிவ சிந்தனையின்மையே வடிவமான பிரமாத்தால் உண்டாயினவாம்; ஆன்ம சொரூபத்தைச் சிந்தனை செய்தால்

அனைத்தும் அத்தியந்தம் மித்தையேயாம். சித்தின் அநவதானமே சித்து நாநாரூபமாக விவர்த்த மாதற்கேது என்பது பொருள்.

(இவ்வாறே விவேக சூடாமணி கூறுவது வருமாறு)

சொரூபநிட் டையையோர் காலுஞ் சொற்பமும் தவிர வொண்ணா
தரணியில் அந்த நிட்டை தவிர்தலே காலன் என்று
பிரியனே பகவா னான பிரமபுத் திரச்சு சாதன்
பரசனச் சுசாதீ யத்திற் பலவிதம் பகர்ந்தானன்றே.

ஆதலாற் சொரூப நிட்டை யன்றியுந் தவிர்தல் ஞானிக்
கேதமாம் அனர்த்த மாகும் ஏதெனிற் றவிர்த் லாலே
சாதமாம் மோகம் அத்தாற் சனித்திடும் அகந்தை யத்தாற்
கோததாம் பந்த முண்டாம் கூடிடும் அவற்றாற் றுன்பம்

(இவ்வாறே ஒழிவிலொடுக்கம் கூறுவது வருமாறு)

ஒழிவிலொடுக்கம்; யோகக் கழற்றி.

மணிப்பாம் பிருளின் மறைந்திருக்கக் தேடும்
கணக்காந்தற் போதத்தைக் காட்டி – உணர்த்துகினும்
நீரிற் கிணறும் நிழலுயுத்த மும்போலாம்
ஆரித்தை நீக்கியிருப் பார்.

(இதன் பொருள்) சென்னியின் மீது மணியையுடைய பாம்பு தான் இருளிடத்து மறைந்திருப்ப இருளைத்தேடும் முறைமை போலாகும், நீ உன் போதத்தை முன்னிட்டு அருளிடத்து மறைந்திருப்ப அருளைத்தேடும் முறைமை என்று போதஞ் சீவிப்பதைக் காட்டி, அருளையும், உன்னைவிட்டு நீங்காத பரிபூரணம் என்று அறிவிப்பினும் தெளிந்து கொள்ளாது; பிரளயமாய்க் கோத்துநின்ற சுத்தசலத்தில் கிணறுதொட்டு நீர் தேடும் ஒருவனைப்போலும், தனது நிழலை எதிராய்க் கருதி அதனோடு உயுத்தஞ் செய்யும் ஒருவனைப் போலும், பின்னரும் உன்போதஞ் சீவியாநிற்கும் ஆகலின், இப்போதத்தை நீக்கிச் சிவமாயிருப்பார் யாவர் எ–று.

சென்னியின் மீது மணிச்சுடரை உடைய பாம்பு இருளைத் தேடுந்தோறும் அவ்விருள் நீங்குவது அன்றி நில்லாது; அதுபோல, தற்போதத்தை முன்னிட்டு அருளைத் தேடுந்தோறும் இவ்வருள் நீங்குவது அன்றி நில்லாது என்பதும், அப்பாம்பு சென்னிமணியைப் புரைவழிக்கொணர்ந்து வாய்க்குள் அடக்கின், இருள்தேட வேண்டுவது இன்ற, அதுபோல், முன்னிட்டபோதத்தைப் பின்னிட்டால் அருள் தேடவேண்டுவது இன்று என்பதும், அவ்விருள் நிறைந்தாற்போல் இவ்வருள் நிறைந்திருப்பது என்பதும், நீர் சம்பாதிக்கத் தொடங்கினவனைப் போல், அருள் எங்கும் பிரிவற்ற பூரணமாயிருக்கவும், அவ்வருளுள் தேடி அருளைச் சம்பாதிக்கத் தொடங்கினோன் என்பதும், தன் தேக அசைவால் நிழல் அசைவது என்று அறியாது அதற்கு ஓர் அசைவு வேறுளது என்று கருதி அதனோடு உயுத்தஞ் செய்வானைப்போல், தன்போத அசைவால் கருவிகள் அசைவது என்று அறியாது அதற்கு ஓர் அசைவு வேறுளது என்று கருதி அவற்றை அடக்கத் தொடங்கினோன் என்பதும், இவ்வுவமைக் குறிப்புகளாற் காண்க.

இங்ஙனம் எழும்போதம் ஒழிப்பார் அரியர் ஆகலின், "ஆரித்தை நிக்கியிருப்பார்" என்றார்.

"மணிப்பாம்பிருளை" என்பது தற்போதத்தை முன்னிட்டு அருளை நாடுதற்கு உவமை; "நீரிற் கிணறு" என்பது அருளை ஏகதேசமாக நாடுதற்கு உவமை; "நிழலுயுத்தம்" என்பது தன்னை அருளுக்கு ஊணாகக் கொடுத்து நிற்கவே கருவிகள் ஒழியும் என்று அறியாது, தற்போதத்தால் அவற்றை அடக்கத் தொடங்குவதற்கு உவமை எனக்கொள்க.

(மாயாப் பிரதீதித் திரயம்) வேதாந்த சூடாமணி. மாயை படும் இயல்பு கூறில்,

விண்ணின்மல ரெனத்துச்ச மேயெனவும் இப்பிவருவெள்ளி போல
எண்ணுமநிர் வாச்சியமாம் எனவுமுயிர் போல் நித்தம் எனவும் நிற்கும்.

(இதன் பொருள்) அந்த மாயையானது சுருதி சம்பந்த ஞானத்தால் ஆகாயத்தாமரை மலரைப்போலத் துச்சத்துவரூப அசத்தென்றும். யுக்தி சம்பந்த ஞானத்தால் கிளிஞ்சிலில் தோன்றும் வெள்ளியைப்போல ஆராய்ந்தறியத்தக்க அநிர்வாச்சியம் என்றும். உலகசம்பந்த ஞானத்தால் ஆத்மாவைப்போல நித்தியம் என்றும் சொல்லப்பட்டு இருப்பதாம்.

ஆன்ம ஞானத்தால் அகங்காரக் கிரந்தி நீங்குதல் வாயிலாகக் காம மரணாதி சர்வதுக்க நிவிர்த்தி பரமானந்தப் பிராப்தி யுண்டாம்; என்னும் விஷயம் , மடாலய வெளியீடு 3 " காரண அகங்காரக் கிரந்தி நீக்கத்தால் காரிய காம மரண நீக்கம் " என்னும் நூலிற் காண்க.

மூன்றாவது அனுபூதிப் பிரகரணம் முடிந்தது.

மகாவாக்கிய விசாரம் முடிந்தது.

## ஸ்ரீ நாராயண சுவாமிகள்

## தாண்டவராய சுவாமிகள் துதி

சீர்மிகுங் கங்கைச் சீதள மென்னத
திகழுமெய்ஞ் ஞானசீ தளஞ் செய்
பேர்மிகுங் கைவல் லியநவ நீதம்
பிறப்பிறப் பறப்பரிந் தியற்றி
தார்மிகுந் தரும நன்னில மருவும்
தாண்டவ ராயமா முனிவன்
சார்மிகுங் குருநா ராயண முனிவன்
தாண் மலர் முடிமிசை பணிவாம்.

# யஜுர்வேதத்தின் பிருகதாரண்ய உபநிஷதத்தில் உள்ள அகம் பிரம்மாஸ்மி என்னும் மகா வாக்கிய விசார சங்கிரகம்

## முகவுரை

சீவன் தனது யதார்த்த வடிவத்தை யறியாமை யாகிய அஞ்ஞானத்தாலான அந்நியோந்நிய அத்யாசத்தினால் நான் என்னும் அயதார்த்த விருத்திக்கு விஷயமான அகங்காரத்தோடு கூடிய அன்னமயாதி வியஷ்டி பஞ்ச கோசங்களும், நான் என்னும் யதார்த்த விருத்திக்கு விஷயமான சாக்ஷியறிவாகிய ஆன்மாவும் ஒருமைப்பாடாகவும் பிரம்மம் என்னும் அயதார்த்த விருத்திக்கு விஷயமான விராட்டாதி சமஷ்டி பஞ்ச கோசங்களும், பிரம்மம் என்னும் யதார்த்த விருத்திக்கு விஷயமான சர்வசாக்ஷி யறிவாகிய பிரம்மமும் ஒருமைப்பாடாகவும் அறியப்படுகின்றன. இவ்வாறு அறியப் படுவதற்குக் காரணமாகிய அந்நியோந்நிய அத்தியாசத்தினால் சச்சிதனாந்தவடிவ ஆன்மாவோ டபேதமான பிரம்மமாகிய நம்மிடத்தில வியஷ்டி சமஷ்டியாகிய பஞ்சகோசங்களின் சுபாவமான அசத்து சட துக்க ரூபமரணம், அறியாமை, காமக்குரோத லோப பேதபய மாதி துன்பங்கள் தோற்றிக் கொண்டிருக்கின்றன.

மகாவாக்கிய விசாரத்தினால் உண்டாம் தன்னைப் பிரம்ம வடிவமாய் அறிதலாகிய ஞானத்தினால் அஞ்ஞான நிவிர்த்தி வாயிலாக அந்த அந்நியோந்நிய அத்தியாசம் விடுபடுவதாகிய அபவாத முண்டாய்ச், சர்வதுக்க நிவிர்த்தி பரமானந்தப் பிராப்தி வடிவமோக்ஷம் லபிக்கின்றது.

இத்தகைய மோக்ஷம் லபிக்கும் பொருட்டு மோக்ஷசாதனமான ஞானத்திற் கேதுவான மகாவாக்கிய விசாரம் முமுக்ஷுக்கள் அனைவரும் செய்யவேண்டியது அவசியமும், சரீரம் இக்கணத் திருந்தது இனிவருங்கணத்தூடு இருக்குமோ மரிக்குமோ என

நிலையாமை யுடையதாயும், ஒரு கண வாழ்நாள் பெறக் கோடி திரவியம் கொடுத்தாலும் வாங்கிக் கொள்ள முடியாத துர்லபமுடையதாயும் இருத்தலால் அவசரமும் ஆம்.

ஆதலால் முமுக்ஷுக்கள் அறிந்து விசாரஞ் செய்யும் விபரம் சங்கிரகமாக இந்நூலில் கூறப்படுகிறது. இதன் விவரம் விரிவாக அறிய விரும்புவோர் நன்னிலம் நா. தா. ஆலயத்தின் இரண்டாவது வெளியிடான மகாவாக்கிய விசாரம் என்னும் நூலிற்காண்க.

இந்நூல் பல பெரியோர்கள் முன்னிலையில் அரங்கேற்றஞ் செய்யப் பெற்றது.

இங்ஙனம்
**மகா.கோவிந்தசுவாமி,**
தர்மபரிபாலனத் தலைவர்,
ஸ்ரீ நாராயண தாண்டவேஸ்வர ஸ்வாமி ஆலயம்,
1963 நன்னிலம், தஞ்சை மாவட்டம்.

## ஸ்ரீ கிருஷ்ணானந்த சுவாமிகள் துதி

(ஏகாம்பரக்குப்பம் – ஸ்ரீ சிவ சுப்ரமணிய மடம்)

சீர்வளர் அருளால் அறம் பொருள் இன்பம்
சேர்ந்திடும் நெறி யெலாம் உணர்த்தீ
நேர்வளர் வீட்டின் பரமவானந்தம்
நிகழ்ந்திடும் ஞான வாழ் வருளி
ஏர்வளர் ஏகாம்பரகுப்பம் பேட்டை
எனுமா லயமிருந் தருளும்
பேர்வளர் கிருஷ்ணானந்த தேசிகனைப்
பேணியே வணங்கி வாழ்ந்திடுவாம்.

# யஜுர்வேதத்தின் பிருகதாரண்ய உபநிஷதத்தில் உள்ள அகம் பிரம்மாஸ்மி என்னும் மகா வாக்கிய விசார சங்கிரகம்

(அஃதாவது அறிபடும் தான் ஆகிய அகங்காராதி அற அறிவாம் தான் ஆகிய ஆன்மாவோ டபேதமான பிரம்மத்தை அறியும் விசார சங்கிரகம்.)

அகம் பிரம் மாஸ்மி – (பதவுரை) அகம் = நான்; பிரம்மம் = பிரம்மாய்; அஸ்மி = இருக்கின்றேன் (என்றவாறு)

[குருவானவர் சீடனானவன் தன் உண்மை வடிவமாகிய பிரத்யக் அபின்ன (சாக்ஷியறிவாகிய ஆன்மாவோ டபேதமான) பிரம்மத்தை யறிந்து சர்வதுக்க நிவிர்த்தி பரமானந்தப் பிராப்தியாகிய மோக்ஷம் அடையும் பொருட்டு உபதேசம் செய்வது உபதேச மகாவாக்கிய மாகிய " தத்துவமஸி ( அது நீ ஆகிறாய்)" என்னும் மகாவாக்கியமாம். சீடனானவன் மேற்படி உபதேசம் கேட்டபின் தான் மோக்ஷம் அடையும் பொருட்டுத் தன் உண்மை வடிவமாகிய பிரத்யக் அபின்ன பிரம்மத்தை அறிவதாகிய அனுபூதி ஞானம் வருவதற்காக விசாரம் செய்வது ; மேற்படி தத்துமஸி மகாவாக்கியத்தின் பொருளையே அறிவிப்பதான அனுபூதி மகாவாக்கியமாகிய "அகம் பிரம்மாஸ்மி (நான் பிரம்மமாய் இருக்கின்றேன் ) " என்னும் மகாவாக்கியத்தின் விசாரமாம். இத்தகைய அனுபூதி மகாவாக்கிய விசாரம் செய்யவேண்டிய விதிமுறையானது வருமாறு : – முதலில் வியஷ்டி பஞ்ச கோசங்கட்கும் சாக்ஷியறிவாகிய ஆத்மாவிற்கும் உள்ள பிராந்திசித்தமான அபேத ஞானத்தை நீக்கும் பொருட்டு, அவற்றிற்குள்ள சுபாவ சித்தமான சடங்கள் வேறு சித்து வேறு என்னும் பேதஞானத்தை யுண்டாக்கும் அகம்சப்த விசாரம் செய்யவேண்டியதாம். அதன்பின் சமஷ்டி பஞ்ச கோசங்கட்கும் சர்வசாக்ஷியறிவாகிய பிரம்மத்திற்கும் உள்ள பிராந்திசித்தமான அபேத ஞானத்தை நீக்கும் பொருட்டு, அவற்றிற்குள்

சுபாவசித்தமான சடங்கள் வேறு சித்துவேறு என்னும் பேதஞானத்தை யுண்டாக்கும் பிரம்மசப்த விசாரம் செய்ய வேண்டியதாம். அதன்பின் சாக்ஷி யறிவாகிய ஆத்மாவிற்கும் சர்வசாக்ஷியறிவாகிய பிரம்மத்திற்கும் உள்ள பிராந்தி சித்தமான பேத ஞானத்தை நீக்கும் பொருட்டு, அவற்றிற்குள்ள யதார்த்தமான நான் பிரம்மாய் இருக்கின்றேன் என்னும் அபேத ஞானத்தையுண்டாக்கும் அஸ்மி சப்தார்த்த சிந்தனம் செய்ய வேண்டியதாம். அதன்பின் வியஷ்டி சமஷ்டி பஞ்ச கோசங்கட்கும் சாக்ஷியறிவாகிய ஆன்மாவோ டபேதமான சர்வசாக்ஷி யறிவாகிய பிரம்மத்திற்கும் முன் கூறப்பட்ட சுபாவசித்தமான பேதஞானத்தை நீக்கும் பொருட்டு, அவற்றிற்குள்ள யதார்த்தமான சர்வம் பிரம்மம் என்னும் அபேத ஞானத்தை யுண்டாக்கும் அகம் பிரம்மாஸ்மி என்னும் வாக்கியார்த்த சிந்தனம் செய்ய வேண்டியதாம். ஆகவே இத்தகைய விதிமுறையின் படியான மகாவாக்கிய விசாரம் கூறப்படுகிறது.]

## அகம் சப்த விசாரம்

[அதத் வியாவிருத்தி இலக்ஷணத்தால் (பிரம்மவடிவ ஆத்மா அல்லாதனவற்றைப் பிரம்ம வடிவஆத்மா அல்ல என நிஷேதித்தல் ஆகிய இலக்கணத்தால்) பிரம்ம வடிவ ஆத்மாவை அறிவிக்கும், ❶ "நேதி நேதி" (இது அன்று இது அன்று) என்னும் பிருக தாரண்ய சுருதி கூறும் சித்சட விசாரம் வருமாறு.]

---

❶ "நேதி நேதி" இதன் பதம்– ந . இதி– ந. இதி – என்பதாம். இதன் பதவுரை – இதி = இது ; ந = அன்று ; இதி = இது ; ந = அன்ற என்பதாம். இதன் பொழிப்புரை – இது அன்று இது அன்று என்பதாம். இதன் விரிவுரை சித்துரூபசாக்ஷியறிவினால் இது எனுந்தன்மையால் அறியப்படுகிற சடரூப காரியமாகிய தூலம் சூக்ஷுமம்; இதை அறிகிற சித்துரூப சாக்ஷியறிவாகிய ஆத்மா அன்று, சித்துரூப சாக்ஷி யறிவினால் இது எனுந்தன்மையால் அறியப்படுகிற சடரூப காரணமாகிய அஞ்ஞானம், இதை அறிகிற சித்துரூப சாக்ஷி யறிவாகிய ஆத்மா அன்று என்பதாம்.

அத்தியாசத்துடன் கூடிய நான் என்னும் விருத்திக்கு விஷயமான அன்னமய கோசமானது அத்தியாச மின்றிய நான் என்னும் விருத்திக்கு விஷயமான சாக்ஷியறிவினால் இது எனுந்தன்மையால் அறியப்படுகிற காரணத்தால், கடதிருஷ்டாவுக்கு கடம்போல அச்சாக்ஷி யறிவுக்கு அன்னியமாயும் பாகியமாயும்

---

"நேதி நேதி'' என்னும் சுருதி அறிவிக்கும் ஞானமானது அனுபவத்தினாலும் உண்டாவது வருமாறு : – இது எனுந்தன்மையால் அறியப்படும் தூல சரீர உரோமமானது ஓர் காலத்தில் தூல சரீரத்தில் இருப்பதாய் நான் என அறியப்பட்டு மற்றோர் காலத்தில் தூல சரீரத்தினின்றும் நீங்கும் போது அதில் முன்பு நான் என்று அறிந்த ஞானம் நீங்கி இது நான் அன்று என அறியும் "நேதி நேதி'' சுருதி அறிவிக்கும் ஞானமானது அச்சுருதியின் உபதேசமின்றியே பாலருக்கும் வந்து விடுகிற அனுபவத்தினாலும் ஸ்தாலிபுலாக நியாயப்படி (ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம் பார்த்தறிகிற திருஷ்டாந்தப்படி) இது எனுந்தன்மையால் அறியப்படுவன அனைத்தும் அவற்றை அறிகிற சாக்ஷி யறிவாகிய நான் அன்று என அறிதலும் கூடும்.

இது எனுந்தன்மையால் அறியப்படும் தத்துவங்கள் அனைத்தும் உலக சம்பந்த அஞ்ஞான அத்தியாச ஞானத்தால் ஆத்மாவைப்போலச் சத்தியமாயும், யுக்தி சம்பந்த ஞானத்தால் ஆத்மாவைப்போலச் சத்தியமாயும், யுக்தி சம்பந்த ஞானத்தால் கிளிஞ்சலில் தோற்றும் வெள்ளியைப்போல அநிர்வசநீயமாயும், சுருதி சம்பந்த யதார்த்த ஞானத்தால் ஆகாயத் தாமரை மலரைப் போல துச்சத்வரூப அசத்தாயும் அறியப்படும் என்று அறிக.

"நேதி நேதி'' சுருதி கூறுவதை ஒழிவி லொடுக்கம் கூறுவது வருமாறு:

தம்மால் அறிந்த வெல்லாம் தாமல்ல என்றுரைத்தால்<br>சும்மா இருப்பது வாய்த் தோன்றாதோ– விம்மி<br>அரிந்ததலை வாயடங்கும் அவ்வளவே அல்லால்<br>தெரிந்திடுமோ நீயே தெளி.

❷சடமாயும் இருத்தல் அறியப்படுகிறது ; ஆதலால் அறியப்படுகிற சடரூப அன்னமாயகோசமாகிய இது இதை அறிகிற ❸சித்துரூப சாக்ஷி யறிவாகிய நான் அன்று.

இவ்வாறே அத்தியாசத்துடன் கூடிய நான் என்னும் விருத்திக்கு விஷயமான பிராணமய கோசமானது அத்தியாச மின்றிய நான் என்னும் விருத்திக்கு விஷயமான சாக்ஷி யறிவினால் இது எனுந்தன்மையால் அறியப்படுகிற காரணத்தால், கடதிருஷ்டாவுக்குக் கடம்போல அச்சாக்ஷியறிவுக்கு அன்னியமாயும் பாகியமாயும் சடமாயும் இருத்தல் அறியப்படுகிறது ;ஆதலால் அறியப்படுகிற சடரூப பிராணமய கோசமாகிய இது இதை அறிகிற சித்துரூப சாக்ஷி யறிவாகிய நான் அன்று.

இவ்வாறே அத்தியாசத்துடன் கூடிய நான் என்னும் விருத்திக்கு விஷயமான மனோமய கோசமானது. அத்தியாசமின்றி நான் என்னும் விருத்திக்கு விஷயமான சாக்ஷி அறிவினால் இது எனுந்தன்மையால் அறியப்படுகிற காரணத்தால், கடதிருஷ்டாவுக்குக் கடம் போல அச்சாக்ஷி யறிவுக்கு அன்னியமாயும் பாகியமாயும் சடமாயும் இருத்தல் அறியப்படுகிறது ; ஆதலால் அறியப்படுகிற சடரூப மனோமய கோசமாகிய இது இதை அறிகிற சித்துரூப சாக்ஷி யறிவாகிய நான் அன்று.

---

❷சடம் என்னும் லக்ஷணத்தை உப லக்ஷணமாகக் கொண்டு அசத்து, துக்கம் என்னும் லக்ஷணங்களையும் சேர்த்து அசத்து சடம் துக்கம் எனவும் கொள்ளலாம்.

❸சித்து என்னும் லக்ஷணத்தை உப லக்ஷணமாகக் கொண்டுசத்து, ஆனந்தம் என்னும் லக்ஷணங்களையும் சேர்த்துச் சத்து சித்து ஆனந்தம் எனவும் கொள்ளலாம்.

இவ்வாறே அத்தியாசத்துடன் கூடிய நான் என்னும் விருத்திக்கு விஷயமான விஞ்ஞானமய கோசமானது அத்தியாசமின்றிய நான் என்னும் விருத்திக்கு விஷயமான சாக்ஷியறிவினால் இது எனுந்தன்மையால் அறியப்படுகிற காரணத்தால், கடதிருஷ்டாவுக்குக் கடம் போல அச்சாக்ஷியறிவுக்கு அன்னியமாயும் பாகிய மாயும் சடமாயும் இருத்தல் அறியப்படுகிறது ; ஆதலால் அறியப்படுகிற சடரூப விஞ்ஞானமய கோசமாகிய இது இதை அறிகிற சித்துரூப சாக்ஷி யறிவாகிய நான் அன்று.

இவ்வாறே அத்தியாசத்துடன் கூடிய நான் என்னும் விருத்திக்கு விஷயமான ஆனந்தமய கோசமானது அத்தியாசமின்றிய நான் என்னும் விருத்திக்கு விஷயமான சாக்ஷியறிவினால் இது எனுந்தன்மையால் அறியப்படுகிற காரணத்தால், கடதிருஷ்டாவுக்குக் கடம் போல அச்சாக்ஷியறிவுக்கு அன்னியமாயும் பாகிய மாயும் சடமாயும் இருத்தல் அறியப்படுகிறது ; ஆதலால் அறியப்படுகிற சடரூப ஆனந்தமய கோசமாகிய இது இதை அறிகிற சித்துரூப சாக்ஷி யறிவாகிய நான் அன்று.

இவ்வைங் கோசங்களையும் இவ்வாறு நிஷேதித்த பின் சூனியம் தோற்றுகிறது.

இவ்வாறே அத்தியாசத்துடன் கூடிய நான் என்னும் விருத்திக்கு விஷயமான சூனியமானது அத்தியாசமின்றிய நான் என்னும் விருத்திக்கு விஷயமான சாக்ஷியறிவினால் இது எனுந்தன்மையால் அறியப்படுகிற காரணத்தால்,கடதிருஷ்டாவுக்குக் கடம்போல அச்சாக்ஷி யறிவுக்கு அன்னியமாயும் பாகியமாயும் சடமாயும் இருத்தல் அறியப்படுகிறது ; ஆதலால் அறியப்படுகிற சடரூப சூனியமாகிய இது இதை அறிகிற சித்துரூப சாக்ஷி யறிவாகிய நான் அன்று.

இவ்வைங் கோசங்களையும் சூனியத்தையும் ❹ அறிபடு பொருள்கள் ஆகும்படியாக அறிகின்றதாயும், இவ்வைங் கோசங்களையும் சூனியத்தையும் ❺ இது நானன்று, இது நானன்று என நிஷேதிக்குங்கால் இவ்வைங் கோசங்களும் சூனியமும் சாக்ஷி யறிவுக்கு அன்னியமாயும் பாகியமாயும் சடமாயும் இருத்தலால் இது எனுந்தன்மையால் அறியப்பட்டு நிஷேதிக்கப்பட்டபின் ❻ எல்லாவற்றின் அன்னியமாயும் உள்ளாயும் ❼ அதற்குள்ளாய் அதை அறிவதற்கு வேறு அறிவு இல்லாததாயும் நிஷேதிக்கும் சீவனின் யதார்த்த சொரூபமான சாக்ஷி யறிவாயும் இருத்தலால் இது எனுந்தன்மையால் அறியப்படாததாயும் நிஷேதிக்கப் படாததாயும் அந்நிஷேதத்தின் அவதி (முடிவு) ரூபமாய்ச் சேஷிக் (மிஞ்சு) கின்றதாயும் உள்ள ❽ சுயம்பிரகாச சாக்ஷி அறிவே ஆன்மாவாகிய நான்.

❹ அறிபடுபொருள்கள்– என்னும் விஷயம் பஞ்சதசி . பஞ்சகோசவிவேகம் சமஸ்கிருத சுலோகம் 12 – தமிழ்க் கவி 6ல் கூறப் பட்டுள்ளது.

❺ இது நானன்று,இது நானன்று என்னும் அதத்வியாவிருத்தியாகிய நிஷேத உபதேசத்தால் நான் என்று அறியப்படுவன அனைத்தையும் நானன்று என நிஷேதித்து, மிஞ்சுகிற சாக்ஷியறிவான ஆன்மாவை நான் என்று அறிவதில் சங்கை உத்தரங்கள் பஞ்சதசி திருபதி தீபம் சமஸ்கிருத சுலோகம் 88–89 தமிழ்க் கவி 56–ல் கூறப்பட்டுள்ளது.

❻ எல்லாவற்றின் அன்னியமாயும் உள்ளாயும் நிஷேதிப்பவனின் சொரூபமாயும் இருத்தலால், இது எனுந்தன்மையால் அறியப்படாத சொரூபமுடைய சாக்ஷி; என்னும் விஷயம் – பஞ்சதசி பஞ்சகோச விவேகம். சமஸ்கிருத சுலோகம்33–தமிழ்க் கவி 16–ல் கூறப்பட்டுள்ளது.

❼ அதற்குள்ளாய் அதை அறிவதற்கு வேறு அறிவு இல்லாதாயும் – என்னும் விஷயம் பஞ்சகோசவிவேகம் சமஸ்கிருத சுலோகம் 13– தமிழ்க் கவி 7–ல் கூறப்பட்டுள்ளது.

❽ சுயம்பிரகாசம் – என்னும் விஷயம் , பஞ்சதசி பஞ்சகோச விவேகம் சமஸ்கிருத சுலோகம் 28 – தமிழ்க் கவி 14–ல் (இந்த ஆத்ம ா அறிபடாதாயினும் அபரோக்ஷமாம். ஆகையால் சுயம்பிரகாசமாகின்றது என்பதாதிகளில்) கூறப்பட்டுள்ளது.

இத்தகைய சுயம்பிரகாச சாக்ஷியறிவாகிய ஆன்மாவை எவ்வாறு அறியக்கூடும் எனின், நான் சாக்ஷியறிவான ஆன்மாவை யறிகின்றேன் என்னும் கர்த்திருபாவமும், என்னால் சாக்ஷியறிவான ஆன்மா அறியப் படுகின்றது என்னும் கர்மபாவமும் நீங்கி அச்சுயம் பிரகாச சாக்ஷியறிவான ஆன்மவடிவ மாத்திரமாக நிலைத்தலாகிய சாக்ஷாத்காரவடிவ அனுபவத்தில் ஆத்மாவானது சுயம்பிர காசத்தினால் அறிபவன் வடிவமாகவே விளங்குவதாம்; ஆதலால் அவ்வாறான சாக்ஷாத் கார வடிவ அனுபவத்தினால் அறிபடு பொருளாக இன்றி அறிபொருளாகிய தானாகவே அறியக் கூடும் என்றறிக.

இவ்வாறு அறியக்கூடும் என்பதில் அறிதல் அறியப்படுதல் என்னும் பேதங் காணப்படுகிறதே எனின், ஆத்மாவானது சுயம் பிரகாசத்தினால் தானாகவே விளங்குவதா மாதலால் அப்பேதம் அறிவுக்கும் நிமித்தமான சொல் மாத்திரமேயன்றி யதார்த்த மன்று என்றறிக.

கோசங்கள் ஓர் அவஸ்தையில் கண்டது மற்றோர் அவஸ்தையில் காணா தழிதலால் அசத்தாயும், அறிபடுபொருள்களாதலால் சடமாயும், அப்பிரியமாய்க் கைவிடப்படுவதால் துக்கமாயும் இருக்கின்றன.

கோசங்களை யறியும் சாக்ஷியறிவாகிய நான் இறப்பு எதிர்வு நிகழ்வு ஆகிய முக்காலங்களிலும் ஒரே தன்மையாக இருத்தல்ால் சத்தாயும், முக்காலங்களிலும் தோற்றுகின்ற சாக்கிர சொப்பன சுழுத்திகளில் பிரதீதியாகும். ஸ்திர, அஸ்திர, மூலாக்ஞான விஷயங்களை அறிவதால் சித்தாயும், மேலான பிரியத்திற்கு விஷயமாதலால் ஆனந்தமாயும் இருக்கின்றேன்.

## பிரம்ம சப்த விசாரம்

அத்தியாசத்துடன் கூடிய பிரம்மம் என்னும் விருத்திக்கு விஷயங்களான விராட்டு இரண்ணிய கர்ப்பம் அவ்வியாகிருதம் என்னும் ஈசுரனது மூன்று சரீரங்களான சமஷ்டி பஞ்ச கோசங்களும்

அவற்றின் அபாவமும், அத்தியாசமின்றிய பிரம்மம் என்னும் விருத்திக்கு விஷயமான பிரம்மாகிய சர்வசாக்ஷியறிவினால் விளக்கப்படுகிற காரணத்தால் கடதிருஷ்டாவுக்குக் கடம்போல அச்சர்வ சாக்ஷியறிவுக்கு அன்னியங்களாயும் பாகியங்களாயும் சடங்களாயும் இருத்தல் அறியப்படுகிறது. ஆதலால் விளக்கப்படுகிற சடரூப விராட்டு இரண்ணிய கர்ப்பம் அவ்வியாகிருதம் என்னும் ஈசுரனது மூன்று சரீரங்களாகிய சமஷ்டி பஞ்ச கோசங்களும் அவற்றின் அபாவமும் அவற்றை விளக்குகிற சித்துரூப சர்வசாஷி யறிவாகிய பிரம்மம் அல்ல.

விராட்டாதி சமஷ்டி பஞ்சகோசங்களையும் அவற்றின் அபாவத்தையும் விளக்கப்படு பொருள்கள் ஆகும் படியாக விளக்குவதாயும் , விராட்டாதி சமஷ்டி பஞ்சகோசங்களையும் அவற்றின் அபாவத்தையும் பிரம்மமன்று பிரம்மமன்று என நிஷேதிக்குங்கால், அவைகள் சர்வசாக்ஷியறிவுக்கு அன்னியங்களாயும், பாகியங்களாயும் சடங்களாயும் இருத்தலால், அறியப்பட்டு நிஷேதிக்கப்பட்டபின் அவற்றின் அன்னியமாயும் உள்ளாயும் அதற்குள்ளாய் அதை விளக்குவதற்கு வேறு விளக்கம் இல்லாததாயும் பிரம்மத்தின் யதார்த்த சொருபமான சர்வசாக்ஷியறிவாயும் இருத்தலால் அறிபடுபொருளாக அறியப்படாததாயும் நிஷேதிக்கப் படாததாயும் அந்நிஷேதத்தின் அவதி (முடிவு) ரூபமாய் சேஷிக் (மிஞ்சு)கின்றதாயும் உள்ள சுயம்பிரகாச சர்வசாக்ஷி யறிவே பிரம்மம்.

இத்தகைய சர்வசாக்ஷி யறிவாகிய பிரம்மமானது தனது சுயம்பிரகாசத்தினால் விளங்குவதாம்.

விராட்டாதி சமஷ்டி பஞ்சகோசங்கள் ஓர் அவஸ்தையில் கண்டது மற்றோர் அவஸ்தையில் காணா தழிதலால் அசத்தாயும், விளக்கப்படு பொருள்களாதலால் சடமாயும், அப்பிரியமாய்க் கைவிடப்படுவதால் துக்கமாயும் இருக்கின்றன.

விராட்டாதி சமஷ்டி பஞ்சகோசங்களை யறியும் சர்வசாக்ஷி யறிவாகிய பிரம்மமானது இறப்பு எதிர்வு நிகழ்வு ஆகிய

முக்காலங்களிலும் ஒரே தன்மையாக இருத்தலால் சத்தாயும் , முக்காலங்களிலும் தோற்றுகின்ற சிருஷ்டி ஸ்திதி சங்காரங்களில் தோற்றும் விஷயங்களை விளக்குவதால் சித்தாயும், மேலான பிரியத்திற்கு விஷய மாதலால் ஆனந்தமாயும் இருக்கின்றது.

## அஸ்மிசப்தார்த்த சிந்தனம்

இவ்வாறு அகம்சப்தத்தின் சோதிதார்த்தமாகிய அதிஷ்டான சேதனரூப சாக்ஷியறிவாகிய ஆன்மாவிற்கும், பிரம்ம சப்தத்தின் சோதிதார்த்தமாகிய அதிஷ்டான சேதனரூப சர்வசாக்ஷி யறிவாகிய பிரம்மத்திற்கும் சச்சிதானந்தரூப லக்ஷணம் ஏகமாதலால் அவ்விரண்டும் கடாகாச மகாகாசம்போல எப்போதும் அஸ்மி பதத்தின் இருக்கின்றேன் என்னும் அர்த்தவடிவ ஏகமாம் ஆகலின் அகம்பிரம்மம் பிரம்மம் அகம்.

இந்த அதிஷ்டான ஆன்மாவோ டபேதமான பிரம்மாகிய நமது சத்து சித்து ஆனந்த அத்வைத வடிவத்தை (9) அகண்டாகார விருத்தியினால் நன்றாய்க் கண்டால் நமது அதிஷ்டான ஆன்மாவோ டபேதமான பிரம்மசொரூபத்தில் ஆரோப (அத்தியாச) மாய்த் தோற்றுகிற திருஷ்ட நஷ்ட சுபாவமுடைய வியஷ்டி சமஷ்டியாகிய

(9) அகண்டாகார விருத்தி என்பது சீவப்பிரம்மங்களின் அபேதத்தை யுணர்த்துவதாம் . அது இரு வகையாம். ஒன்று வஸ்துவின் அதீனமாம். ஒன்று புருடனின் அதீனமாம். வஸ்துவின் அதீனமான விருத்தியானது வஸ்துவின் இயல்பை உள்ளபடி விளக்குவதால் யதார்த்தமாம். புருடனின் அதீனமான விருத்தியானது பாவனா வஸ்துவை யுணர்த்துவதால் சம்வாதிப் பிராந்திவடிவ கற்பனை யாம்.

இங்குக்கூறியது வஸ்துவின் அதீனமான அகண்டாகார விருத்தியாம்.

வஸ்துவின் அதீனமானது வஸ்து தந்திரம் எனப்படும். புருடனின் அதீனமானது புருடதந்திரம் எனப்படும். இவற்றின் விசேட விவரங்கள் அறிய விரும்புவோர் கைவல்லிய நவநீதம் “விருத்தி ஞான மந்தக் கரணத்தொடு” என்னும் கவி முதலியவற்றிற்காண்க.

சர்வப் பிரபஞ்சம்; அதிஷ்டான சுத்தியை (கிளிஞ்சிலை) நன்றாய்க் கண்டால் அவ்வதிஷ்டான சுத்தியில் ஆரோபமாய்த் தோற்றுகிற வெள்ளியானது அபவாதமாய் அதிஷ்டான சுத்தி மாத்திரமாய் மிஞ்சுவதுபோல, ⑩ அபவாதமாய் (பாதமாய்) அதிஷ்டான ஆன்மாவோ டபேதமான பிரம்மமாகிய நமது சத்து சித்து ஆனந்த ஆத்வைத சொரூப மாத்திரமாக மிஞ்சுகிறது; ஆகலின் சர்வம் பிரம்மம்.

---

⑩ அபவாதமாய் என்றதில் அறியவேண்டிய விளக்கமான விஷயம் வருமாறு. "ஆன்மாவிற்கும் அகங்காராதிகட்கும் உள்ள அன்னியோன்னிய அத்தியாச வடிவு நான் என்னும் கோசரூப அகங்காரமானது மற்றப் பிரபஞ்சப் பிரதிபந்தங்களுக்கெல்லாம் மிகவும் திடமான மூலமாயிருப்பதால் மற்றப் பிரப்பஞ்சப் பிரதிபந்தங்களைபோலச் சுலபத்தில் அபவாதமாகாமல் இருந்து கொண்டு அல்லது அபவாதமானாலும் மறுபடி உடனுக்குடன் வந்து கொண்டு அபரோக்ஷ அனுபவம் வராமல் தடுத்துக் கொண்டிருக்கும். அவ்வகங்காரம் சிறிதிருந்தாலும் அக்கினியைப்போல உடனே பெரியதாய் விடுமாதலால் அவ் வகங்காரத்தை மிகவும் சூட்சும புத்தியினால் அறிந்து சிறிதும் இல்லாமற்மத்தைக் காண்பதனால் அபவாதமாக்கினால் அந்தக் கணமே அபரோக்ஷப் பிரம்ம ஞானானந்தானுபவம் உண்டாம் ." என்னும் சர்வ சாஸ்திரங்களிலும் கூறப்பட்டுள்ள விஷயம் ஞாபகத்தில் கொண்டு, எப்போது அப்பியாசம் செய்தும் அபரோக்ஷப் பிரம்ம ஞானானந்தானுபவம் வரவில்லையோ அப்போது அகங்காரம் அபாவாதமாகவில்லை என்று சூட்சுமபுத்தியினா லறிந்து அப்வாத மாக்கி அபரேக்ஷப் பிரம்ம ஞானானந்தானுபவத்தை அடைய வேண்டியதாம்.

இதற்கு உதாரணம் – விவேக சூடாமணி

தொந்தமாம் பவத்தைச் செய்யும் துட்டமாம் பிரதி பந்தம்
மைந்தனே அனேக மேனும் மருவிய அவற்றிற் கெல்லாம்
முந்திய விகாரம் ஆக முளைத்திடும் அகங்கா ரந்தான்
சந்ததம் மூலம் அத்தைச் சருவதா ஒழிக்க வேண்டும்.

வெப்பமாம் விடதோ டந்தான் வீங்குதே கத்தி லெம்மட்
டற்பமும் இருக்கும் அம்மட்ட ரோகமில் லாது கண்டோம்
அப்படி யோகி யர்க்கும் அகங்காரம் எம்மட் டம்மட்
டொப்பிலா முத்தி சித்தி உள்ளவா றுதிப்ப தில்லை.

இவ்வாறு அகம்பிரம்மம், பிரம்மம் அகம், சர்வம் பிரம்மம் என்று அப்பியசித்துப் பிரம்ம மாத்திரமாக நிலைக்கவேண்டும்.

அகம் பிரம்மம் என்னும் அப்பியாச ஞானத்தால் பரிச்சின்னப் பிராந்தியும் பிரம்மம் அகம் என்னும் அப்பியாச ஞானத்தால் பரோக்ஷப் பிராந்தியும் , சர்வப் பிரம்மம் என்னும் அப்பியாச ஞானத்தால் துவைதம் பிராந்தியும் நீங்குவனமாம்.

இவ்வாறு முமுட்சுக்கள் (மோட்ச விருப்பமுடைய அதிகாரிகள்) மகாவாக்கிய விசாரம் செய்து அன்னமாயகோசம் முதல் ஆனந்தமய கோசபரியந்தம் அறிபடு பெருள்களாதலால் நானன்று என நிஷேதித்து, அவைகட்கு விலக்ஷணமாய் அதற்குப் பின்பு காணப்படும் பஞ்சகோசங்களின் அபாவரூபமான சூனியத்தையும் அறியடு பொருளாதலால் நானன்று என நிஷேதித்து, அகத்தில் பஞ்சகோச சூனியங்களைக் காணும் அறிவு ரூபமான சாக்ஷி நான் என்று அறிந்து, அவ்வாறு அறிந்த அற்பமாகிய அஃதாவது பரிச்சின்னமாகிய நிலையையும், சமஷ்டி பஞ்சகோசங்களையும் அவற்றின் அபாவத்தையும் நிஷேதித்தறிந்த பிரம்மத் தோ டபேதமாக்கும் அகம் பிரம்மம் என்னும் அகண்டா கார விருத்தியினால் விடுத்து, அகம்பிரம்மம் (அகம் பிரம்மம் பிரம்மம்அகம் சர்வம் பிரம்மம்) என்னும் அகண்டாகார விருத்தியையும் நிதித்தியாசன பரிபாக வசத்தினால் (சமாதி வசத்தினால்) உறங்கினவன் கையிற் பதார்த்தம்போல நழுவச் செய்து அகண்ட ஏகரசமா யுள்ள பரிபூரணமான பிரம்ம மாத்திரமாக நிலைத்தலாகிய அனுபவத்தை யடையவேண்டும்.

இவ்வாறே கைவல்லியநவநீதம் "தஞ்சமாங் குருவுஞ்சொன்ன தத்துவ வழிதப்பாமல் பஞ்சகோச முங்கடந்து பாழையுந்தள்ளி யுள்ளில், கொஞ்சமாம் இருப்பும்விட்டுக் கூடஸ்தன் பிரம்மம் என்னும், நெஞ்சமும் நழுவி யொன்றாய்நின்ற பூரணத்தைக் கண்டான் " எனவும்.

விகேவக சூடாமணி

மருவிய முஞ்சிப் புல்லின் மத்தியுள் ஆணியைப் போல்
திருசியத் திரளில் நின்றும் திகழ்ந்திடும் தன் ஆன் மாவை
அருமையாம் புத்தியோலே அசங்கமாய் அசலம் ஆக
மருவிய தென்று கண்டு மாசற வகுக்க வேண்டும்.

எனவும் கூறுகின்றன.

இவ்வாறான அனுபவத்தை யடைந்தால் அக்கணமே இறப்புப் பிறப்பாதி சர்வதுக்க நிவர்த்தி பரமானந்தப் பிராப்தியாகிய மோக்ஷம் லபிப்பதாம்.

(ஞானத்தின் சம்பூர்ணத் தன்மையை அறிதல் விவரம்)

பஞ்சதசி யோகானந்தம் சமஸ்கிருத சுலோகம் 84 – தமிழ்க்கவி 40 – எப்போது " நான் கிருதார்த்தன் கர்த்தவ்வியப் பிராப்தவ்வியங்களின் அபாவ முடையவனாயிருக்கின்றேன்" என்று கிருதார்த்தத்தன்மையின் புத்தியுண்டாகின்றதோ, அப்போது ஞானத்தின் சம்பூர்ணத்தன்மை அறியத்தக்கதாம்.

மகாவாக்கிய விசாரசங்கிரகம் முடிந்தது.

**கோவிலூர் மடலாயம் 9 ஆம் பட்டம் ஸ்ரீலஸ்ரீ இராமநாத ஞான தேசிக பரமாசாரிய சுவாமிகள் மோட்ச தீபப் பத்திரிகை**

உலகெலாம் புகழும் குருபரம் பரையார்
உத்தமக் கோவிலூர் மடத்தின்
நிலைமையாய் ஒன்பதாம் குருவாகி
நேர்மையாய்ப் பணிபல புரிந்து
கலைமையாம் அன்பர் யாவரும் மகிழக்
கதியும் அறிவுரை புகன்ற
தலைமையாம் இராம நாத தேசிகனின்
தாள் மல ரினைப் பணிந் துய்வாம்.

# மனிதன் எக்காரணத்தினால் உயர்ந்தவன்

## முகவுரை

" அறிவுடையோர் அடையும் பயன்களாய், எல்லா நூல்களாலும் சொல்லப்படுவனவான, அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கனுள்ளும், வீடு மரணாதி துன்பக் கலப்பின்றிய இன்பவடிவ மேன்மையுடையதாதலால், சிறந்த பயனாகவுள்ளது. அஃதன்றியும் அறமாதிகட்கு உள்ள இலக்கணங்களும் வீட்டிற்கே உளவாதலால் மாசறக் தேருங்காலத்து, அந்நால்வகைப் பயன்களும் அவ்வீடேயாகும் " என்று சாந்தலிங்கசுவாமிகள் அவிரோதவுந்தியார் என்னும் நூலில் சிறந்த பயனாகக் கூறியுள்ள மரணாதி துன்பக் கலப்பின்றிய இன்ப வடிவமான மேன்மையுடைய வீடு என்னும் மோஷத்தை, அதற்குச் சாதனமான கடவுளைக் குறித்துச் செய்யும் கர்மம், உபாசனை, ஞானம் என்னும் நெறிகளினால் அடைவதற்கு பகுத்தறிவு படைத்த மனிதப் பிறப்பினால் மாத்திரமே சாத்தியமாகும். இவ்வாறு மோக்ஷ சாதனங்களை அறிந்து ஒழுகுவதற்கான பகுத்தறிவைப் பெற்ற காரணத்தினால், மனிதப் பிறப்பு உயர்ந்தது என்னும் பொருளை விளக்குவதற்காக " மனிதன் எக்காரணத்தினால் உயர்ந்தவன் " என்னும் இந்நூல் எழுதப்படுகிறது. அன்பர்கள் அறிந்து இன்புறுவார்களாக.




இங்ஙனம்
கோயிலூர் மரபு
மகா.கோவிந்தசுவாமி
1–11–1970

**சமர்ப்பணம்**

தமிழ்நாட்டு மாணவ மாணவிகளுக்குச் சிறப்பாகவும்,
மற்றும் எல்லோருக்கும்.

# மனிதன் எக்காரணத்தினால் உயர்ந்தவன்

## கடவுள் வணக்கம்

சீராருந் தெய்வக் கணபதியைச் சேவித்து
நேராரப் போற்றுவாம் நேர்ந்து.

**வினா**

மனிதன் எக்காரணத்தினால் உயர்ந்தவன்?

**விடை**

விலங்கு, பறவை முதலியவைகளினும் அதிகமான பகுத்தறிவு என்னும் ஆறாவது அறிவைப் பெற்றுள்ள காரணத்தினாலாம்.

**வினா**

ஆறுவித அறிவுள்ள உயிர்களின் விபரம் என்ன?

**விடை :**

1. புல், மரம் முதலியவை தேகத்தால் பரிசிக்கப்பட்டு ஸ்பரிசத்தை அறிகின்ற ஒரு அறிவு உடைய உயிர்களாம்.
2. சிப்பி, சங்கு முதலியவை முன் கூறிய ஓரறிவுடனே நாவினால் ரசத்தையும் அறிகின்ற அறிவோடு இரண்டு அறிவு உடைய உயிர்களாம்.
3. செல், எறும்பு முதலியவை முன் கூறிய இரண்டறிவுகளுடனே மூக்கினால் கந்தத்தையும் அறிகிற அறிவோடு மூன்று அறிவு உடைய உயிர்களாம்.
4. தும்பி, வண்டு முதலியவை முன் கூறிய மூன்று அறிவுகளுடனே கண்ணால் ரூபத்தையும் அறிகிற அறிவோடு நான்கு அறிவு உடைய உயிர்களாம்.
5. பறவைகள், மிருகங்கள் முதலியவை முன் கூறிய நான்கு அறிவுகளுடனே செவியால் சப்தத்தையும் அறிகிற அறிவோடு ஐந்து அறிவு உடைய உயிர்களாம்.

6. மனிதர் , தேவர் முதலியவர்கள் முன் கூறிய ஐந்து அறிவுகளுடனே பகுத்தறிவினால் கடவுளையும் பரலோகத்தையும் அறிகின்ற அறிவோடு ஆறு அறிவு உடைய உயிர்களாம்.

**வினா :**

மனிதப் பிறப்பினால் கடவுளையும் பரலோத்தையும் அறியத் தக்க ஆறாவது அறிவாகிய உயர்ந்த பகுத்தறிவை அடைந்தும், கடவுளை அறிந்து கொள்ளாமலிருந்தால் எந்தத் தகுதி உண்டாம்.

**விடை :**

தாழ்ந்த அறிவுகளையுடைய பறவைகள் மிருகங்கள் முதலியவைகளுக்குச் சமானமான தாழ்ந்த தகுதியே உண்டாம்.

**வினா :**

இவ்வாறு கூறுவதற்கு உதாரணம் என்ன?

**விடை :**

திருக்குறள் :

"கற்றதனால் ஆய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழா அர் எனின்".

"கோளில் பொறியிற் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை."

" அரம்போலும் கூர்மையே ரேனும் மரம்போல்வர்
மக்கட்பண் பில்லா தவர்."

" உலகத்தார் உண்டென்ப தில்லென்பான் வையத்
தலகையா வைக்கப்படும்."

என்பவையும் இவை போன்ற பிறவும் ஆம்.

**வினா:**

கடவுளை அறிந்து கொள்வதனால் எந்தத் தகுதி உண்டாம்?

**விடை:**

மனிதப் பிறப்பினால் அடைந்த உயர்ந்த பகுத்தறிவினால் எவ்வளவுக் கெவ்வளவு கடவுளை அறிகிறானோ, அதாவது ஆன்றோர் நூல்களிற் கூறப்பட்ட கர்மம், உபாசனை ,ஞானம் என்னும் நெறிகளால் கடவுளை அறிந்து அடைகிறானோ, அவ்வளவுக் கவ்வளவு துக்க நிவர்த்தியும் சுகப் பிராப்தியும் உண்டாகி பகுத்திறிவுனால் கடவுளின் நிலையையடைந்த ஆன்றோர்க்குச் சமானமான உயர்ந்த தகுதி உண்டாம்.

**வினா :**

இவ்வாறு கூறுவதற்கு உதாரணம் என்ன?

**விடை :**

திருக்குறள் :

"மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்."

"இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு".

"கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட் டவர்க்கு."

"இருள்நீங்கி இன்பம் பயக்கும் மருள் நீக்கி
மாசறு காட்சி யவர்க்கு."

என்பவையும் இவை போன்ற பிறவும் ஆம்.

**வினா :**

கடவுள் என்பதன் பொருள் என்ன?

கடவுள் என்னும் பதமானது 'கட' – என்னும் பகுதியையும் 'உள்' – என்னும் தொழிற் பெயர் விகுதியையும் உடையது.

இதன் பதவுரை – கடந்தது என்பதாம். விரிவுரை– உயிர்களின் கடவுள் பக்தியற்ற தூலமான இராசத தாமத குண மனத்துக்கு எட்டாத (அறியப்படாத) விதத்தில் கடந்தது என்பதாம்.

**வினா :**

இவ்வாறு கூறுவதற்கு உதாரணம் என்ன?

**விடை :**

திருவாசகம் :

"மாற்றம் மனம்கழிய நின்ற மறையோனே."

(சொல்லும் மனமும் கடந்து நின்ற வேதியனே)

திருமுருகாற்றுப்படை :

" நின் அளந்தறிதல் மன்னுயிற்கு அருமையின்"

பிரமகீதை :

"உரைமனம் இறந்து உள் ஓங்கும்
ஒளியினை வணங்கல் செய்வாம்."

என்பனவும் இவைபோன்ற பிறவும் ஆம்.

**வினா :**

கடவுள் பக்தியற்ற தூலமான இராசத தாமத குண மனத்துக்கு எட்டாதது என்று முன் கூறப்பட்டது. ஆனால் வேறு எத்தகைய மனத்தால் எட்டி அறியக்கூடியதாம்?

**விடை :**

கடவுள் பக்தியுற்ற, சூக்குமமான சத்துவகுணமனத்தால் எட்டி அறியக்கூடியதாம்.

**வினா :**

இவ்வாறு கூறுவதற்கு உதாரணம் என்ன?

**விடை :**

திருக்குறள் :

"ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வானம் நணிய துடைத்து"

திருவாசகம் :

"சேயாய் நணியானே" (பக்தியில்லாதவரின் மனதுக்கு எட்டாமல் கடந்து தூரத்தில் உள்ளவனே, பக்தி உள்ளவரின் மனதுக்கு எட்டுவதாய்ச் சமீபத்தில் உள்ளவனே.)

என்பவையும் இவைபோன்ற பிறவும் ஆம்.

**வினா :**

கடவுளின் சொரூப லக்ஷணங்கள் எவை?

**விடை :**

கடவுள் என்பதும், சச்சிதானந்த சொரூபபிரம்மம் என்பதும், ஈசுவரன் என்பதும் ஒரு கடவுளையே குறிக்கும் பெயர்களாம். கடவுளாகிய பிரம்மம் சத்துவம், இராசதம், தாமதம் என்னும் முக்குணங்களையுடைய மாயா சக்தியுடன் கூடாமல் இருப்பதை முன்னிட்டு நிர்க்குணப் பிரம்மம் என்று கூறப்படும். அந்த மாயா சக்தியுடன் கூடியிருப்பதை முன்னிட்டு சகுணப் பிரம்மம் என்று கூறப்படும். சகத்காரணத் தன்மையுடைய அந்த மாயா சக்தியுடன் கூடியிருப்பதை முன்னிட்டு காரணப் பிரம்மம் என்று கூறப்படும். அத்தகைய சகுண காரணப் பிரம்மானது, தூலமான, முகம், கை, கால் முதலிய உருவமாய் அன்பர்களின் கண்களுக்குத் தெரியும்படி வெளிப்படுவதை முன்னிட்டு சகுண காரியப் பிரம்மம் என்று கூறப்படும். இவற்றுள் நிர்க்குணப் பிரம்மமும் சகுண காரணப் பிரம்மமும் கண்களுக்குத் தோற்றாத சூட்சுமமாயிருப்பதை

முன்னிட்டு அருவம் என்று கூறப்படும். சகுண காரியப்பிரம்மம் கண்களுக்குத் தோற்றுவதான தூலமாக இருப்பதை முன்னிட்டு உருவம் என்று கூறப்படும். இந்த உருவமும் முகம், கை, கால் முதலிய விரிவான காரியமாக இன்றி அவற்றின் சுருங்கிய காரியமாகிய உருண்டை முதலிய வடிவங்களான சாலக்கிராமம், சிவலிங்கம் முதலிய வடிவங்களுடன் கூடியிருப்பதை முன்னிட்டு அருவ உருவம் என்று கூறப்படும் . இத்தகைய கடவுள் ஒருவரே யாவர்.

இத்தகைய ஒரே கடவுளே பக்தர்களுக்கு உதவி செய்யும் சூழ்நிலைகளை முன்னிட்டு பல விதமான உருவங்களை எடுக்கிறார். இந்தப் பலவித உருவங்களுக்கு ஏற்ற பலவித நாமங்களை (பெயர்களை) அடைகிறார். அவற்றில், சுருங்கக் கூறுமிடத்து, கணபதி எனவும், குமரன் எனவும், சிவன் எனவும், விஷ்ணு எனவும், சக்தி எனவும், சூரியன் எனவும் அறுவகைப் பெயர்களால் கூறப்படுகிறார். இத்தகைய அறுவகை உருவங்களை வழிபடுஞ்சமயங் (கொள்கை) கள், முறையே காணாபத்தியம், கௌமாரம் , சைவம், வைஷ்ணவம், சாக்தம், சௌரம் என்னும் அறுவகைப் பெயர்களால் வழங்கப்படும். இத்தகைய ஆறுவகை உருவங்களை எடுத்த கடவுள் ஒருவரேயாகவும், அவரைப் பக்தியினால் அறிந்து வணங்கியடையும் முக்தியும் ஒன்றேயாகவும் இருப்பதால் எந்தச் சமயமும் ஒன்றுக்கு ஒன்று உயர்ந்ததும், தாழ்ந்ததும் ஆக இன்றிச் சமமானவைகளாகவே உள்ளன. உண்மை இப்படி இருக்க சமயத்தவர்களில் சிலர் என் சமயம் நன்று, உன் சமயம் தீது எனக்கூறி விவாதம் செய்வது தங்கள் அறியாமையினால் ஆன அகங்காரமமகார துரபிமானத்தினா லேயேயாம்.

ஆகவே சமயங்கள் அனைத்தும் சமரசங்களே என்னும் உண்மையை அறிந்து, தத்தம் தாய் தந்தையருக்கு நன்றியறிவிக்கும் முறையில், தத்தம் தாய் தந்தையர்கள் அறிவித்த சமயத்தையே , அவரவர்கள் அனுசரித்துக் கடவுட் காட்சியுற்று சர்வ துக்க நிவர்த்தி பரமானந்தப் பிராப்தியை அடைய வேண்டியதே முறையானதாம். ஒரே

கடவுள் இவ்வாறு வெவ்வேறு உருவங்களை எடுத்துக் காட்டியது பக்தர்களுக்கு உதவி செய்யும் சூழ்நிலைகளுக்குப் பொருந்தும்படியான காரணங்களினாலேயேயாம்.

ஆகவே பக்தி செய்த முன்னோர்கள் அவரவர்களுக்கு உதவி செய்யக் கடவுள் எந்த எந்த உருவத்தை எடுத்துக் காட்டினரோ, அந்த அந்த உருவத்தில் கடவுளை வழிபடுஞ்சமயத்தராகித் தத்தம் புத்திரர்கட்கும் போதித்தனர். ஆகவே அவ்வாறு வழிபடுவது முறையான (நியாயமான ) தேயாகும் . ஆகவே ஏற்றம் தாழ்வு கருதாமல் சகல சமயங்களும் சமரசங்களே என்னும் வேற்றுமையில் ஒற்றுமை காணும் அதாவது மார்க்கங்களில் வேற்றுமையிாயினும் முடிவில் ஒற்றுமையாகிய சமரசங் காணும் கருத்தைக் கொண்டு கடவுட்கொள்கையில் விவாதமின்றி யிருப்பதே கடவுளுக்கும், ஆன்றோர்கட்கும் சம்மதமான தாம்.

**வினா :**

இவ்வாறு கூறுவதற்கு உதாரணம் என்ன?

விடை :

திருமந்திரம் :

"ஒன்றதே பேரூர் வழியதற்கு ஆறுளது
என்றதே போலும் இருமுச் சமயங்கள்
நன்றிது தீதிது என்றுரை மாந்தர்கள்
குன்று குரைத்தெழும் நாயை யொத்தாரே."

" ஒத்த சமயங்கள் ஓராறு வைத்திடும்
அத்தன் ஒருவனாம் என்ப தறிந்திலர்
அத்தன் ஒருவனாம் என்ப தறிந்திடின்
முத்தி விளைக்கும் முதல்வனும் ஆமே."

"முதலொன்றாம் ஆனை முதுகுடன் வாலும்

திதமுறு கொம்பு செவிதுதிக் கைகால்
மதியுடன் அந்தகர் வகைவகை பார்த்தே
அதுகூறல் ஒக்கும் ஆறு சமயமே."

திருவாசம் :

" சமயவாதிகள் தத்தம் மதங்களில்
அமைவதாக அரற்றி மலைந்தனர்."
"இருமுச் சமயத் தொருபேய்த் தேரினை
நீர்நசை தரவரு நெடுங்கண் மான்கணம்
தவப்பெரு வாயிடைப் பருகித் தளர்வொடும்
அவப்பெருந் தாபம் நிங்கா தசைந்தன."

அஞ்ஞாவதைப் பரணி :

" தலைபலவாய்ப் பெயர்பலவாம் நதிகள் எல்லாம்
சாகரத்தில் ஒரு நீராம் தன்மை போலப்
பலபலவாய்ச் சொல்லுநெறி எல்லாம் சொல்லப்
பட்டதொரு பொருளினையாம் பணிதல் செய்வாம்."
"அழியாத வீடென்னும் பழைய வூர்கண்
டறியாதார் அது காண வேண்டி யாறு
வழியாகும் சமயங்கள் கொண்டு தம்மில்
வழக்குப் பேசுஞ்சழக்கு மாள்க வன்றே."

பட்டினத்துப் பிள்ளையார் :

" அன்றென்றும் ஆம் என்றும் ஆறு சமயங்கள்
ஒன்றொடொன் றொவ்வா துரைத்தாலும் – என்றும்
ஒருதனையே நோக்குவார் உள்ளத் திருக்கும்
மருதனையே நோக்க வரும்".

திருவாய்மொழி :

"உணர்ந்துணர்ந் துரைத்துரைத் தரியயன் அரன்
என்னும் இவரை
உணர்ந்துணர்ந் துரைத்துரைத் திறைஞ்சுமின்
மனப்பட்டதொன்றே,"

சிவவாக்கிய சுவாமிகள் :

" எங்கள் தெய்வம் உங்கள் தெய்வம் என்றபேதம் உள்ளதே
உங்கள் பேதம் அன்றியந்த உண்மைபேதம் இல்லையே."

தாயுமானவ சுவாமிகள் :

"வேறுபடுஞ் சமயமெலாம் புகுந்து பார்க்கின்
விளங்குபரம் பொருளேநின் விளையாட் டல்லால்
மாறுபடுங் கருத்தில்லை முடிவில் மோன
வாரிதியில் நதித்திரள் போல் வயங்கிற் றம்மா."
என்பவையும் இவைபோன்ற பிறவும் ஆம்.

**வினா :**

கடவுளையடையும் நெறிகள் எவை? அவற்றின் விளக்கங்கள் எவை?

**விடை :**

கன்மம், உபாசனை, ஞானம் என நெறிகள் மூன்றாம், அவற்றின் விளக்கங்களை பகவத்கீதை, கைவல்லிய நவநீதம், முதலிய நூல்களில் காண்க.

**வினா :**

கடவுளையடையும் நெறிகளின் முயற்சியைக் காலதாமதமாகச் செய்யலாமா?

**விடை :**

இக்கணத்திருக்கும் உடலானது, மறுகணம் இருக்குமோ?

இறக்குமோ? என்ற சந்தேகத்தின் நிலையிலிருத்தலாலும், சென்ற ஆயுள் கணத்தை மறுபடி பெறமுடியாததாதலாலும் காலதாமதம் இன்றி உடனே கடவுளையடையும் நெறிகளின் முயற்சியைச் செய்யவேண்டும்.

**வினா :**

இவ்வாறு கூறுவதற்கு உதாரணம் என்ன?

**விடை :**

திருக்குறள் :

"நாளென ஒன்று போற் காட்டி யுயிரீரும்
வாள துணர்வார்ப் பெறின்.

"நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு."

" நாச் செற்று விக்குண்மேல் வாராமுன் நல்வினை
மேற்சென்று செய்யப் படும்."

ஒழிவிலொடுக்கம் :

"கோடிக் கொருநிமிடம் கொள்ளுகினும் – கூடாத
வாணாளை வீண் கழிக்கும் மானிடரைப் போன்மயக்கம்
பூணார்பொய் கண்டுதுறப் போர்."

ஆனந்தத்திரட்டு :

"பெறுத்தற் கரிய பிறப்பீ திதன்போக்
கறிதற் கரிய வவிதி– பிறிததொன்றை
நாடுதற்கு நேரமுண்டோ நன்னெஞ்சே முத்திநெறி
கூடுதற்கல் லாது குறித்து."
என்பவையும் இவைபோன்ற பிறவும் ஆம்.

முற்றிற்று.

**சர்வ வேதசாரமான ஸ்ரீ பகவத்கீதை முதலிய சாஸ்திரங்கள் கூறுகின்ற உபதேச சுருக்கக் கருத்துரையான**

# சர்வ துக்கமுறும் காரண வரிசையும் சர்வ துக்கமறும் காரண வரிசையும்

## முகவுரை

சகல சீவர்களும் விரும்புவது துக்கநிவிர்த்தியும் சுகப் பிராப்தியுமே யாகும் என்பது யாவரும் உணர்ந்த விஷயமேயாகும்.

இத்தகைய நிலையையே மோக்ஷம் அதாவது பேரின்ப வீடு என்று அறிவிற் சிறந்த ஆன்றோர்கள் கூறியிருக்கின்றனர்.

புருஷர்களால் (சீவர்களால்) அர்த்திக்க (விரும்ப)ப் படுவதால் புருஷார்த்தம் என்னும் பெயரால் வழங்கப்படுகின்ற அறம், பொருள், இன்பம் , பேரின்ப வீடு என்னும் நான்கு பயன்களுள் "பேரின்ப வீடு" மரணாதி துக்கங்களின்றிய நித்தியமாயும், நிரதிசயமாயும் (தன்னின் மிக்கது ஒன்று இல்லாததாயும்) உள்ள சுகரூபம் ஆதலால் சிறந்த பயனாக உள்ளது. ஆதலால் " பேரின்ப வீடு" முக்கிய புருஷார்த்தம் என்றும், மற்ற அறம், பொருள், இன்பம் என்னும் மூன்றும் மரணாதி துக்கங்களுடன் கூடியதாதலால், கௌண (முக்கியமல்லாத) புருஷார்த்தங்கள் என்றும் சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ளன.

புருஷன் என்பதற்குப் பொருள், பரமாத்மாவாகிய பிரம்மம், ஈசுவரன், ஆத்மா , சீவன், ஆண் மகன், மனிதன் முதலியவைகளாம்.

இவ்வாறு புருஷன் என்பதற்குப் பல பொருள்கள் உள்ளன வாயினும் சொல்லும் இடத்தை முன்னிட்டுப் பொருள் கொள்ளும் முறையில் , இங்கு கூறும் "புருஷார்த்தம்" என்னும் பிரசங்கத்தில் (சொன் முறையில்) புருஷர்கள் என்பதற்குப் பொருள், ஆண்கள் பெண்கள் முதலிய சீவர்களாம்.

இங்கு கூறிய நால்வகைப் புருஷார்த்தங்களைக் குறித்து ஸ்ரீ

**சாந்த லிங்க சுவாமிகள் தாம் இயற்றிய "அவிரோத வுந்தியார்" என்னும் நூலின் 4 ஆம் கவியில் கூறியுள்ள விஷயங்கள் வருமாறு.**

(அவதாரிகை (முன்னுரை)– இந்நூலில் வீட்டுநெறி கூறுவான் தொடங்கி முதற்கண் அவ்வீட்டினது சிறப்புக் கூறுகின்றார்.)

கவி 4. அறம் பொருள் இன்பம் வீ(டு) ஆயவோர் நான்கில்
சிறந்த பயன் வீடுஎன் (று) உந்தீபற
தேரின்வீ டேஎலாம் உந்தீபற

(இதன் பொருள்) தருமம் , அருத்தம், காமம், மோக்ஷம் என்று அறிவுடையோர் அடையும் பயன்களாய் எல்லா நூல்களாலும் சொல்லப்படும் அவையாகிய நான்கனுள்ளும், வீடு நிரதிசயம் (தன்னின் மிக்கது ஒன்று இல்லாதது) ஆதலால் சிறந்தபயனை உடையது. அஃது அன்றியும் தருமாதிகளுக்கு உள்ள இலக்கணங்களும் அவ்வீட்டிற்கே உளவாகலின் மாசறக் தேருங்காலை. அந்நால்வகைப் பயன்களும் அவ்வீடயோகும். (என்றவாறு). (உந்தீபற என்பது ஓர் விளையாட்டு).

இவ்வாறு"தருமாதிகளுக்கு உள்ள இலக்கணங்களும் அவ்வீட்டிற்கே உளவாகலின் மாசறக் தேருங்காலை, அந்நால்வகைப் பயன்களும் அவ்வீடயோகும். " என்றுகூறியிருப்பது எவ்வாறு பொருந்தும். என்பது பற்றிய சிறந்த அறிவுரைகளைப் பின் கவிகளில் கூறுயுள்ளார். அவற்றை அந்நூலில் காண்க.

இவ்வாறான சிறப்பினையுடைய சர்வ புருஷார்த்த வடிவமான, சர்வ துக்க நிவிர்த்தி பரமானந்தப் பிராப்தியாகிய மோக்ஷம் என்னும் பேரின்ப வீடு அடைதற்குச் சாதனமாக அறியத்தக்க , சர்வ துக்கமுறும் காரண வரிசையும், சர்வ துக்க மறும் காரண வரிசையும் , வேத உபநிஷதங்கள், பிரம்ம சூத்திரம், ஸ்ரீ பகவத் கீதை, விவேக சூடாமணி, பஞ்சதசி, ஜீவன் முக்தி விவேகம், ரிபுகீதை, ஞானவாசிட்டம், கைவல்லிய நவநீதம் முதலிய நூல்களில் மிகவும் விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

அவற்றை மிகவும் சுருக்கமாகத் தொகுத்துத் தரவேண்டும் என்று சில அன்பர்கள் விரும்பியதற்கு இணங்க, சர்வ துக்கமுறும் காரண வரிசையை ஒரு கவியலிதும், சர்வ துக்கமறும் காரண வரிசையை ஒரு கவியிலும் சுருக்கியமைத்து , அவற்றிற்குரிய பொருள்களையும் அமைத்துக் கூறுப்படுவதுடன் , இந்த இரண்டு கவிகளிலும் கூறப்படும். அகங்காரக் கிரந்தியாகிய அந்நியோந்திய அத்தியாசத்தின் விசார விளக்கம் வசனமாகவும் , கவியும் உரையுமாகவும்.

தன்னைத்தான் காணும் விசாரமாகிய மகாவாக்கிய விசார விளக்கம் கவியும் உரையுமாகவும் கூறப்படுகின்றன.

சித்தூர் மாவட்டம்
(ஆந்திரபிரதேசம்)
1–11–1981

இங்ஙனம்,
கோவிலூர் மரபு
**மகா. கோவிந்தசுவாமி,**
தலைவர்,
ஸ்ரீ சிவசுப்பிரமணிய
சிவானந்த யதீந்திர சுவாமிகள் மடாலயம்,
ஏகாம்பர குப்பம்பேட்டை.

பொய்யை மெய்யென்ற மூடர்புண்
　　ணியரென்று புராணங்கூப் பிடுமானால்
மெய்யை மெய்யென்ற ஞானிக்குக்
　　குற்றங்கள் விதித்தசாத் திரமுண்டோ
பொய்ய தேதெனி னாமரூ
　　பங்களாம் பூதமா கியமாயை
மெய்ய தேதெனிற் சச்சிதா
　　நந்தமாய் வியாபிக்கு மான்மாவே.

**கைவல்ய நவநீதம்.**

சர்வ வேதசாரமான ஸ்ரீ பகவத்கீதை முதலிய சாஸ்திரங்கள் கூறுகின்ற உபதேச சுருக்கக் கருத்துரையான

# சர்வ துக்கமுறும் காரண வரிசையும் சர்வ துக்கமறும் காரண வரிசையும்

## ஸ்ரீ கணபதி துதி

சீர்மிகும் சீவர் துயருறும் வரிசை
திகழ்ந்திடும் துயரறும் வரிசை
பேர்மிகும் பகவத் கீதையா தியநூல்
பிறங்குமா றுரைப்பதன் கருத்தை
நேர்மிகும் முறையில் விளங்குமா றுரைக்க
நிகிலதே வுருவமாம் இறைவன்
தார்மிகும் முதன்மைக் கணபதி மலர்த்தாள்
சந்ததம் துணையுறப் போற்றி.

## ஸ்ரீ குரு துதி

(ஸ்ரீ ஜகத்குரு சங்கராசார்ய சுவாமிகள் அருளிய தசகாரிய மகாவாக்கியம் என்னும் சமஸ்கிருத நூலை தமிழில் கவிகளாக மொழிபெயர்த் தருளிய, ஸ்ரீ தெய்வநாயக சுவாமிகள் அருளிய கவி.)

### எண்சீர் ஆசிரிய விருத்தம்

இருவிழிகள் உலகறிந்தும் தனையறியா ததுபோல்
இயானறியும் பொருளலதிங் கெனையறியா மையினால்

கருவிடைபுக் கின்பதுன்பக் கடலிடையே சுழன்று
கண்கலக்கப் படுவேனைக் கருணைவழி யதனால்

அருவினைகள் அறநோக்கி ஆணவமே போக்கி
அகமகமென் றிருந்தவெலாம் அறிவுகொடே நீக்கிப்

பருவமதிற் பதந்தாக்கிக் கற்பனைகள் இயாவும்
பாழாக்கித் தானாக்கும் பரகுருவைப் பணிவாம்.

# நூல்

(அவதாரிகை (முன்னுரை) – சர்வ வேதசாரமான ஸ்ரீ பகவத்கீதை முதலிய சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ள சகல துக்கங்களும் உண்டாகும் காரண வரிசையும், சகல துக்கங்களும் நீங்கும் காரண வரிசையும் மிகவும் சுருக்கக் கருத்துரையாகக் கவி இரண்டில் கூறுதல்.)

**சர்வ துக்கம் உறும் காரண வரிசை கூறுதல்**

**அறுசீர் ஆசிரிய விருத்தம்**

நிகழெலாத் துயர்கள் நேரக் காரணம் அவாப்பேய் நேர்தல்
திகழவாப் பகைப்பேய் சேரக் காரணம் அகக்கி ரந்தி
அகங்கரக் கிரந்தி யாரக் காரணம் அவித்தை யார்தல்
வகைமிகும் அவித்தை வாழக் காரணம் தனைக்கா ணாமை. 1.

**(இதன் பொருள்)**

நிகழ் எலாத்துயர்கள் – சம்பவிக்கின்ற மரணம், பயம், கவலை முதலிய எல்லாவிதமான துன்பங்களும்,

நேரக் காரணம் – பொருந்துவதற்குக் காரணம் (ஏது)

அவாப் பேய் நேர்தல் – (சாஸ்திரங்களில் நிஷேதிக்கப்பட்ட அதாவது விலக்கப்பட்ட, எனக்கு இதுவேண்டும் என்னும் விருப்பமாகிய உருவமுடைய ) காமமாகிய ❶பேய் பொருந்துவதாம்.

---

❶ பேயானது, சீவனைப் பற்றி மறைந்திருந்து மயக்கிப் பல துன்பங்களை உண்டாக்குவது போல, காமமாகிய ஆசையானது, சீவனைப் பற்றி மறைந்திருந்து மயக்கிப் பல துன்பங்களை உண்டாக்குவதால், காமமாகிய ஆசையைப் பேய் என உருவகம் செய்து அன்றோர் நூல்களில் கூறியுள்ளனர்.

இதற்கு உதாரணம் : ஸ்ரீ தாயுமான சுவாமிகள் பாடல். சின்மயானந்த குரு – 3 ஆம் கவி. (தலைப்பு) : ஔவிய மிருக்க +" ஆசாபிசாசம் முதலாம் வெவ்விய குணம் " என்பதுவும், இதுபோன்ற பிறவும் ஆம்.

திகழ் அவாப் பகைப்பேய்— விளங்கும் காம சத்துருவாகிய பேய் ஆனது,

சேரக் காரணம் – சேர்வதற்குக் காரணம்

அகக்கிரந்தி – ❷அகங்காரத் கிரந்தி பொருந்துவதாம் (நான் என அபிமானஞ் செய்வதின் பொய்ப் பொருளான அறிபடும் அகங்காரத்தையும், நான் என அபிமானஞ் செய்வதின் மெய்பொருளான சாட்சி அறிவாகிய ஆன்மாவையும், அஞ்ஞான காரணத்தினாலான அத்தியாரோபமாகிய அந்நியோந்நிய அத்தியாசத்தினால் அதாவது ஒன்றுக்கு ஒன்று கற்பனையினால் , ஒருமைப்பாடாக நான் என்று அபிமானஞ் செய்வதான முடிச்சு பொருந்துவதாம்.)

அகங்கரக் கிரந்தி – அகங்கார முடிச்சானது,

ஆரக் காரணம் – பொருந்துவதற்குக் காரணம்,

அவித்தை ஆர்தல் – (சீவனாகிய தான், தனது உண்மை உருவமான ஆத்மப் பிரம்ம சொரூபத்தை அறியாமையாகிய) மூல அஞ்ஞானம் பொருந்தியிருத்தலாம்.

வகைமிகும் அவித்தை – வாழக் காரணம்

தனைக் காணாமை – (சீவனாகிய தான் ) தனது உண்மை உருவமான, சீவ ஈசுர ஐக்கிய சொரூபத்தை அதாவது ஆத்மப் பிரம்ம ஐக்கிய சொரூபத்தை, இடைவிடா ❸மகா வாக்கிய விசாரத்தால், சந்தேக விபரீதங்களின்றித் திட அபரோக்ஷமாக அறிவதாகிய ஞானம் உறாமையாம்.

---

❷ அகங்காரக் கிரந்தியாகிய அந்நியோந்நிய அத்தியாசத்தின் விரிவான விளக்கம் இந்நூலின் 10 ஆம் பக்கம் முதல் கூறப்பட்டுள்ளது.

❸ மகா வாக்கிய விசாரம் இந்நூலின் 76 ஆம் பக்கம் முதல் கூறப்பட்டுள்ளது.

## சர்வ துக்கம் அறும் காரண வரிசை கூறுதல்

## அறுசீர் ஆசிரிய விருத்தம்

நிகழெலாத் துயர்கள் நீங்கக் காரணம் அவாப்பேய் நீங்கல்
திகழவாப் பகைப்பேய்தீரக் காரணம் கிரந்தி நீங்கல்
அகங்கரக் கிரந்தி ஆனிக் காரணம் அவித்தை நீங்கல்
வகைமிகும் அவித்தை மாளக் காரணம் தனைத்தான் காணல். 2.

**(இதன் பொருள்)**

நிகழ் எலாத் துயர்கள் – சம்பவிக்கின்ற மரணம், பயம் , கவலை முதலிய எல்லாவிதமான துன்பங்களும்.

நீங்கக் காரணம் – ஒழிவதற்குக் காரணம்.

அவாப் பேய் நீங்கல் – (சாஸ்திரங்களில் நிஷேதிக்கப்பட்ட அதாவது விலக்கப்பட்ட, எனக்கு இது வேண்டும் என்னும் விருப்பமாகிய உருவமுடைய) காமமாகிய பேய் ஒழிவதாம்.

திகழ் அவாப்பகைப் பேய்– விளங்கும் காமசத்துருவாகிய பேய் ஆனது.

தீரக்காரணம் – ஒழிவதற்குக் காரணம்,

கிரந்தி நீங்கல் – அகங்காரக் கிரந்தி (அகங்கார ஆன்ம அந்நியோந்நிய அத்தியாசமாகிய அத்தியாரோபமுடிச்சு) அபவாதமாய் ஒழிவதாம்.

அகங்கரக் கிரந்தி – அகங்கார முடிச்சானது.

ஆனிக் காரணம் – ஒழிவதற்குக் காரணம்

அவித்தை நீங்கல் – (சீவனாகியதான், தனது உண்மை உருவமான ஆத்மப்பிரம்ம சொரூபத்தை அறியாமையாகிய) மூல அஞ்ஞானம் ஒழிவதாம்.

வகைமிகும் அவித்தை – (நாநா அதாவது பல சீவர்களின் காரண சரீரங்களான) பிரிவுகள் மிகுதியாகி விளங்கும் மூல

அஞ்ஞானமானது.

மாளக் காரணம் – ஒழிவதற்குக் காரணம்

தான் தனைக் காணல் – சீவனாகிய தான் தனது உண்மை உருவமான, சீவ ஈசுர ஐக்கிய சொரூபத்தை அதாவது ஆத்மப்பிரம்ம ஐக்கிய சொரூபத்தை, ❹ இடைவிடா மகாவாக்கிய விசாரத்தால், சந்தேவிபரீதங்களின்றித் திட அபரோக்ஷமாக அறிவதாகிய ஞானம் உறுவதாம்.

இவ்வாறான திட அபரோக்ஷ ஞானம் உறுவதால், மூல அஞ்ஞானம் , அகங்காரக் கிரந்தி, காமம் ஆகிய சர்வதுக்க காரணங்கள் அக்கணமே ஒழிவனவாதலால், இக்கார்ணங்களின் காரியமான சர்வதுக்க நிவிர்த்தி அக்கணமே உண்டாவதாம்; அதாவது சர்வதுக்க நிவிர்த்தி பரமானந்தப் பிராப்தியாகிய மோக்ஷவடிவ பேரின்ப வீடு அக்கணமே உண்டாவதாம். என்பது பொருளாம்.

முற்றிற்று.

---

❹ இடைவிடா மகாவாக்கிய விசாரத்தால், சந்தேக விபரீதங்களி றுறித்திட அபரோக்ஷமாக அறிவதாகிய ஞானம் உறும் விபரமான விஷயங்கள், சர்வ வேதாந்தசாரமாயும், சாதனம் முதல் சாத்தியம் ஆன மோக்ஷபரியந்தம் வரிசைக்கிரமமாக அமைத்துக் கூறுவதாயும் உள்ள, கைவல்லிய நவநீதம், ஸ்ரீ பொன்னம்பல சுவாமிகள் உரை நூலிலும், இதுபோன்ற பிறநூல்களிலும் காணலாம்.

மற்றும் திருவாரூர், மடப்புரம், ஸ்ரீ குரு தக்ஷிணாமூர்த்தி சுவாமிகளின் மடாலய வெளியீடான,"**நாநா சீவ வாதக் கட்டளை, மூலமும் வியாக்கியானமும்**" என்னும் நூலில், கைவல்லிய நவநீதம் முதலிய அநேக நூல்களின் சிறந்த பொருள்களைத் திரட்டி வினா விடைகளாகக் கூறப்பட்டுள்ளன. அதிலும் மேற்கூறிய விஷயங்களை அறியலாம்.

# அகங்காரக் கிரந்தியாகிய அந்நியோந்நிய அத்தியாசத்தின் விளக்கம் வருமாறு

**(வசன வினா- விடை)**

அகங்காரக் கிரந்தி = நான் என்னும் அகங்காரத்திற்கும், அத்மாவிற்கும் ஆன அந்நியோந்திய அத்தியாசமாகிய முடிச்சு.(கிரந்தி = முடிச்சு)

இந்த அந்நியோந்நிய அத்தியாசமானது, அகங்காரக் கிரந்தி என்றும், இருதயக்கிரந்தி என்றும், தாதான்மிய அத்தியாசம் என்றும், விபரீதப் பிராந்தி என்றும், சம்சார பந்தம் என்றும் கூறப்படும்.

இந்த அந்நியோந்நிய அத்தியாசத்தின் விளக்கம் , " விசார சந்திரோதயம் 6– ஆம் கலை, பிரபஞ்சமித்தியா வர்ணனத்தில் " கூறப்பட்டுள்ளதை மேலும் சிறிது விளக்கத்துடன் கூறுதல் வருமாறு.

**வினா- விடை வரிசை**

வினா : அகங்காராதி அநாத்மாக்களையும், ஆத்மாவையும் அறிவதில் விசேஷ உபயோகம் உள்ள அத்தியாசம் எது?

விடை : அந்நியோந்நிய அத்தியாசமாம்.

வினா : அந்நியோந்நிய அத்தியாசம் என்பது யாது?

விடை : பரஸ்பரத்தில் பரஸ்பரத்தின் (ஒன்றில் ஒன்றன்) அத்தியாசத்திற்கு அந்நியோந்நிய அத்தியாசம் என்று பெயர்.

வினா : ஆத்ம, அகங்காராதி அநாத்மாக்களுக்குப் பரஸ்பரம் (ஒன்றிற்கு ஒன்று) எப்படி அத்தியாசம் உண்டாகிறது?

விடை : 1. சத்து, 2. சித்து, 3.அநந்தம், 4.அத்வை தத்துவம் என்னும் இந்நான்கு விசேஷணங்களும் ஆத்மாவினுடையனவாம்.

1. அசத்து, 2. ஜடம், 3. துக்கம், 4. துவைத சகிதத்துவம்

(துவைதத்தோடு கூடிய தன்மை) என்னும் இந்நான்கு விசேஷணங் களும் அகங்காராதி அநாத்மாக்களினுடையனவாம்.

(இனிவரும் "அ" என்பதன் பின் உள்ள எண்கள், அகங்காராதி அநாத்மாக்களின் விசேஷணங்களாகிய லக்ஷணங்களின் வரிசை எண்கள் எனவும் ; "ஆ" என்பதன் பின் உள்ள எண்கள், ஆத்மாவின் விசேஷணங்களாகிய லக்ஷணங்களின் வரிசை எண்கள் எனவும் கொள்க.)

அவற்றுள்,

அகங்காராதி அநாத்மாக்களின் (அ.3) துக்கம் (அ.4) துவைதசகிதத்துவம் என்னும் இவ்விரண்டு விசேஷணங்களும், அத்மாவின் (ஆ.3) ஆனந்தத்திலும், (ஆ.4) அத்வைதத் தன்மையிலும், சொரூபமாக அத்தியஸ்மாய், அந்த (ஆ.3) ஆநந்தத்யையும் (ஆ.4) அத்வைதத்துவத்தையும் மறைக்கின்றன.

அதனால் அத்மாவில்

1. நான் (ஆ .3) ஆனந்த ரூபனாயும், (ஆ4) அத்வைத ரூபனாயும் இருக்கிறேன் " என்னும் (யதார்த்த = உண்மை ) ஞானம் உண்டாகாமல்,

2. " நான் (அ.3) துக்கியாயும் (அ.4) துவைதமாயும், அதாவது ஈசவராதிகளினும் வேறாயும் இருக்கிறேன்" என்னும் (அயதார்த்த = உண்மையின்றிய கற்பனை ) ஞானம் உண்டாகிறது.

ஆத்மாவின் (ஆ.1 சத்து (ஆ.2) சித்து என்னும் இரண்டு விசேஷணங்களும், அகங்காராதி அநாத்மாக்களின் (அ.1) அசத்துவத்திலும் (அ.2) ஜடத்துவத்திலும் சம்சர்க் (சம்பந்த ) வாயிலாக அத்தியஸ்தமாய் அந்த (அ.1) அசத்துவத்தையும் (அ.2) ஜடத்துவத்தையும் மறைக்கின்றன.

அதனால் அகங்காராதி அநாத்மாக்களில்,

# அகங்காரக் கிரந்தியாகிய அந்நியோந்நிய அத்தியாசத்தின் விளக்கம் வருமாறு

**(வசன வினா- விடை)**

அகங்காரக் கிரந்தி = நான் என்னும் அகங்காரத்திற்கும், அத்மாவிற்கும் ஆன அந்நியோந்திய அத்தியாசமாகிய முடிச்சு.(கிரந்தி = முடிச்சு)

இந்த அந்நியோந்நிய அத்தியாசமானது, அகங்காரக் கிரந்தி என்றும், இருதயக்கிரந்தி என்றும், தாதான்மிய அத்தியாசம் என்றும், விபரீதப் பிராந்தி என்றும், சம்சார பந்தம் என்றும் கூறப்படும்.

இந்த அந்நியோந்நிய அத்தியாசத்தின் விளக்கம் , “ விசார சந்திரோதயம் 6– ஆம் கலை, பிரபஞ்சமித்தியா வர்ணனத்தில் ” கூறப்பட்டுள்ளதை மேலும் சிறிது விளக்கத்துடன் கூறுதல் வருமாறு.

**வினா- விடை வரிசை**

வினா : அகங்காராதி அநாத்மாக்களையும், ஆத்மாவையும் அறிவதில் விசேஷ உபயோகம் உள்ள அத்தியாசம் எது?

விடை : அந்நியோந்நிய அத்தியாசமாம்.

வினா : அந்நியோந்நிய அத்தியாசம் என்பது யாது?

விடை : பரஸ்பரத்தில் பரஸ்பரத்தின் (ஒன்றில் ஒன்றன்) அத்தியாசத்திற்கு அந்நியோந்நிய அத்தியாசம் என்று பெயர்.

வினா : ஆத்ம, அகங்காராதி அநாத்மாக்களுக்குப் பரஸ்பரம் (ஒன்றிற்கு ஒன்று) எப்படி அத்தியாசம் உண்டாகிறது?

விடை : 1. சத்து, 2. சித்து, 3.அநந்தம், 4.அத்வை தத்துவம் என்னும் இந்நான்கு விசேஷணங்களும் ஆத்மாவினுடையனவாம்.

1. அசத்து, 2. ஜடம், 3. துக்கம், 4. துவைத சகிதத்துவம்

(துவைதத்தோடு கூடிய தன்மை) என்னும் இந்நான்கு விசேஷணங் களும் அகங்காராதி அநாத்மாக்களினுடையனவாம்.

(இனிவரும் "அ" என்பதன் பின் உள்ள எண்கள், அகங்காராதி அநாத்மாக்களின் விசேஷணங்களாகிய லக்ஷணங்களின் வரிசை எண்கள் எனவும் ; "ஆ" என்பதன் பின் உள்ள எண்கள், ஆத்மாவின் விசேஷணங்களாகிய லக்ஷணங்களின் வரிசை எண்கள் எனவும் கொள்க.)

அவற்றுள்,

அகங்காராதி அநாத்மாக்களின் (அ.3) துக்கம் (அ.4) துவைதசகிதத்துவம் என்னும் இவ்விரண்டு விசேஷணங்களும், அத்மாவின் (ஆ.3) ஆனந்தத்திலும், (ஆ.4) அத்வைதத் தன்மையிலும், சொரூபமாக அத்தியஸ்மாய், அந்த (ஆ.3) ஆநந்தத்யையும் (ஆ.4) அத்வைதத்துவத்தையும் மறைக்கின்றன.

அதனால் அத்மாவில்

1. நான் (ஆ .3) ஆனந்த ரூபனாயும், (ஆ4) அத்வைத ரூபனாயும் இருக்கிறேன் " என்னும் (யதார்த்த = உண்மை ) ஞானம் உண்டாகாமல்,

2. " நான் (அ.3) துக்கியாயும் (அ.4) துவைதமாயும், அதாவது ஈசவராதிகளினும் வேறாயும் இருக்கிறேன்" என்னும் (அயதார்த்த = உண்மையின்றிய கற்பனை ) ஞானம் உண்டாகிறது.

ஆத்மாவின் (ஆ.1 சத்து (ஆ.2) சித்து என்னும் இரண்டு விசேஷணங்களும், அகங்காராதி அநாத்மாக்களின் (அ.1) அசத்துவத்திலும் (அ.2) ஜடத்துவத்திலும் சம்சர்க் (சம்பந்த ) வாயிலாக அத்தியஸ்தமாய் அந்த (அ.1) அசத்துவத்தையும் (அ.2) ஜடத்துவத்தையும் மறைக்கின்றன.

அதனால் அகங்காராதி அநாத்மாக்களில்,

*(1) "(அ.1) அசத்தாயும் (இல்லாததாயும்), (அ.2) ஜடரூபமாயும் (விளங்காததாயும்) இருக்கிறது" என்னும் (யதார்த்த = உண்மை) ஞானம் உண்டாகாமல்*

2."(ஆ.1) இருக்கிறது (ஆ.2) விளங்குகிறது" என்னும் (அயதார்த்த = உண்மையின்றிய கற்பனை) ஞானம் உண்டாகிறது.

*இவ்வாறு அத்மாவிற்கும்*, அகங்காராதி அநாத்மாக்களுக்கும் (அந்நமயாதி பஞ்சகோசங்களுக்கும்), பரஸ்பரம் (ஒன்றிற்கு ஒன்று அதாவது அந்நியோந்நியம்) அத்தியாசம் இருக்கின்றது.

இந்த அந்நியோந்நிய அத்தியாசத்தினால் காமம், பயம், மரணம், பிறப்பு முதலிய சர்வ துக்கங்களும் தோற்றிக் கொண்டிருக்கின்றன. ஆதலால் காமம், பயம், *மரணம்*, *பிறப்பு* முதலிய சர்வதுக்க நிவர்த்தி பரமானந்தப் பிராப்தி வடிவ மோக்ஷமாகிய பேரின்ப வீட்டை விரும்பும் முமுட்சுக்கள், ஆன்மாவையும், அகங்காராதிகளையும் (அந்நமயாதிகளையும்) விவேகித்தலாகிய (வேறு பிரித்நு அறிதலாகிய) அந்நியோந்நிய அத்தியாச விசார வடிவமான "அகம் பிரம்ம அஸ்மி" = நான் பிரம்மாய் இருக்கிறேன்" என்னும் அநுபூதி மகாவாக்கிய விசாரம் செய்து, ஆன்மப்பிரம்ம ஐக்கிய ஞானம் திட அபரோக்ஷமாக அடைந்து, இவ்வந்நியோந்நிய அத்தியாச வடிவமான பந்தத்தின் நிவிரித்தியாகிய மோக்ஷமென்னும் பேரின்ப வீடு அடைய வேண்டியதாம்.

முன்பு வசன வினா விடையில் கூறப்பட்ட
அகங்காரக்கிரந்தி (முடிச்சு) ஆகிய அந்நியோந்நிய
அத்தியாசத்தின் விளக்கமாகிய விசாரமானது
இங்கு கவியில் கூறப்பட்டு அக்கவியின் உரையும் கூறப்படுகிறது.

**இருபத்தெண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்**

அக(ஆ)தியை ஆன்மா வினைப்பிரித்(து) அறியும்
அந்யோந்ய(அ)த் யாசவி சாரம்
அமைசத்து சித்து (ஆ) னந்த(அ)த்து வைதம்
ஆன நான்கு ஆன்மலக் கணங்கள்

அசத்(து)ஒடு சடமும் துக்கமும் துவைதம்
ஆனநான்(கு) அக(ஆ)திலக் கணங்கள்
ஆமிவற்(று) அக(ஆ) தி உறுதுக்கம் துவைதம்
ஆனஇவ் விரண்டும்ஆன் மாவின்
அகண்டித(ஆ) னந்தம் அதிலும் அத் வைதம்
அதிலும் சொ ரூபம(து) ஆக
அத்யஸ்தம் ஆகி அவற்றைம றைக்கும்
அதனினால் ஆன்மசொ ரூபம்
அதனில் நான் ஆன்ம(ஆ) னந்தன்அத் வைதன்
ஆம் எனும் உண்மையாம் ஞானம்
அன்றிநான் துக்கி துவைதன்ஆம் என்னும்
அத்யாச ஞானம்ஆ கிறது
அகிலமாம் ஆன்ம சத்(து)ஒடு சித்து
ஆனஇவ் விரண்டும் அ க(ஆ)தி
அசத்திலும் சடத்தும் சம்பந்த வாயில்
ஆகஅத்தி யஸ்தம(து) ஆகி
அவற்றைம றைக்கும் அதனினால் அக(ஆ)தி
அதில்இலை விளங்கல்இல் என்னும்
அறிவுறும் உண்மை ஞானம்வ ராமல்
ஆர்ந்திருப் பதுவிளங் குவ(து)என்
இகழும் அத் யாச ஞானம் ஆ கிறது
இந்த அந் யோந்நியஅத் யாசம்
இகல் அகக் ❺கிரந்தி இருதயக் கிரந்தி
இரிசமு சாரம் ஆம் பந்தம்
எரிவிப ரீதப் பிராந்திஎன் னஉறும்
இதனின் ஏ(து) அஞ்ஞமல மறப்(பு) ஆம்
இடர் எலாம் ஆக்கும் இதனைத்தன் ஞான
ஏதுவால் ஒழிஎனும் மறையே.

---

❺கிரந்தி , முடிச்சு, பந்தம் , கட்டு என்பன ஒரு பொருட் சொற்கள்.

**(இதன் பொருள்)**

அக(ஆ)தியை ஆன்மாவினை பிரித்து அறியும் = அகங்காரதிகளையும், ஆன்மாவையும் பிரித்து அறியத் தகுந்த (அறிவதில் விசேஷ உபயோகமுள்ள),

அந்யோந்ய அத்யாசவிசாரம் = அந்நியோந்நிய (ஒன்றற்கு ஒன்று) அத்தியாசத்தின் (கற்பனையின்) விசாரம்( பிரித்து அறியும் ஆராய்ச்சி) வருமாறு.

அமை சத்து, சித்து, ஆனந்த, அத்துவைதம் = இயல்பாக அமைந்த, சத்து (இருப்பு), சித்து (அறிவு), ஆனந்தம் (இன்பம்), அத்துவைதம் (இருமையற்ற ஒன்று,)

ஆன நான்கு ஆன்ம லக்கணங்கள் = ஆகிய நான்கும் ஆன்மாவின் இலக்ஷணங்கள் ஆம்.

அசத்து ஒடு, சடமும், துக்கமும், துவைதம் = அசத்து (இன்மை) ஒடு, சடமும் (அறிவற்று அறியப்படுவதும்), துக்கமும் (துன்பமும்), துவைதமும் (இருமையும்).

ஆன நான்கு அக ஆதி லக்கணங்கள் = ஆகிய நான்கும் அகங்காரம் முதலியவைகளின் இலக்ஷணங்கள் ஆம்.

ஆம் இவற்று = ஆகிய இவைகளில்

அக ஆதி உறு துக்கம் துவைதம் ஆன இவ் இரண்டும் = அகங்காரம் முதலியவைகளில் பொருந்திய துக்கம் துவைதம் ஆகிய இந்த இரண்டு இலக்ஷணங்களும்.

ஆன்மாவின் = (நான் என்னும் சொல்லுக்கும், மனோ விருத்திக்கும் பிறழ்ச்சியின்றிய உண்மைப் பொருளான) ஆன்மாவின்,

அகண்டித ஆனந்தம் அதிலும், அத்வைதம்அதிலும் = கண்டிக்கப் படாத (கூறுபடாத) ஆனந்தத்திலும், அத்வைத்திலும்,

சொரூபம் அது ஆக அத்யஸ்தம் ஆகி = சொரூபமாக அத்தியஸ்தம்

(கற்பிதம்) ஆகி,

அவற்றை மறைக்கும் = (ஆன்மாவின் ஆனந்தம், அத்வைதம் என்னும்) அவைகளை மறைக்கின்றன.

அதனினால் ஆன்மசொரூபம் அதனில் = இவ்வாறு மறைக்கும் காரணத்தினால் ஆன்ம சொரூபத்தில்.

நான் ஆன்ம ஆனந்தன் அத்வைதன் ஆம் எனும் = நான் அன்மாவின் ஆன்ந்த ரூபனாயும், அத்வைத ரூபனாயும் இருக்கிறேன் என்னும்,

உண்மை ஆம் ஞானம் அன்றி = உண்மையாகிய (யதார்த்தமாகிய) ஞானம் உண்டாதல் இல்லாமல்,

நான் துக்கி துவைதன் ஆம் என்னும் = நான் துக்கியாயும் , துவைதனாயும் (ஈசுவராதிகளினும் வேறானவனாயும்) இருக்கிறேன் என்னும்.

அத்யாச ஞானம் = அத்தியாசம் (கற்பனை) ஆகிய ஞானம் உண்டாகிறது.

அகிலம் ஆம் ஆன்மசத்து ஒடு சித்து அன இவ்இரண்டும் = எல்லாம் ஆம் ஆன்மாவின் சத்து, சித்து ஆகிய இந்த இரண்டு இலக்ஷணங்களும்,

அக ஆதி = அகங்காரம் முதலியவைகளின்,

அசத்திலும், சடத்தும் = அசத்திலும், சடத்திலும்,

சம்பந்த வாயில் ஆக அத்தியஸ்தம் அது ஆகி = சம்சர்க்க வாயிலாக அத்தியஸ்தம் (கற்பிதம்) ஆகி.

அவற்றை மறைக்கும் = (அகங்காரம் முதலியவைகளின் அசத்து, சடம் என்னும்) அவைகளை மறைக்கின்றன.

அதனினால் அக ஆதி அதில் = இவ்வாறு மறைக்கும் காரணத்தினால், அகங்காரம் முதலியவைகளில்,

இலை, விளங்கல் இல் என்னும் = (இவைகள் ) இல்லை, விளங்கவில்லை என்னும்,

அறிவு உறும் உண்மை ஞானம் வராமல் = அறிவு உறத் தகுந்த உண்மையாகிய (யதார்த்தமாகிய) ஞானம் உண்டாகாமல்,

ஆர்ந்து இருப்பது விளங்குவது என் = (இவைகள்) பொருந்தி இருக்கின்றன, விளங்குகின்றன என்னும்,

இகழும் அத்யாச ஞானம் ஆகிறது = (ஆன்றோர் = அறிவுடையோர்) இகழ்ச்சி செய்யும் அத்தியாசமாகிய (கற்பனையாகிய) ஞானம் உண்டாகிறது.

இந்த அந்யோந்நிய அத்யாசம் = இவ்வாறு கூறப்பட்ட அகங்கார ஆன்ம அந்நியோந்நிய அத்தியாசமானது.

இகல் அகக் கிரந்தி (என்ன) = பகை (சத்துரு) ஆகிய அகங்காரக் கிரந்தி (அகங்கார முடிச்சு) எனவும்,

இருதயக் கிரந்தி (என்ன) = இருதயத்தில் (மனத்தில் ) பொருந்திய முடிச்சு எனவும்,

இரி சமுசாரம் ஆம் பந்தம் (என்ன) = அஞ்சத்தகுந்த சமுசாரம் (பிறப்பு இறப்பு ஆகிய சுழற்சி) உண்டாகக் காரணமாகும் பந்தம் (கட்டு) எனவும்,

எரி விபரீதப் பிராந்தி ❻என்ன உறும் = வெப்பமாகிய மனத்துயரத்தை உண்டாக்கும் விபரீத பிராந்தி எனவும், கூறுதல் உறும் (கூறப்படும்).

இதனின் ஏது அஞ்ஞமல மறப்பு ஆம் = இத்தகைய அகங்காரக் கிரந்தியின் காரணம், அஞ்ஞான மலமாகிய மறதியாம்.

இடர் எலாம் ஆக்கும் இதனை = (காமம் , கவலை, பயம், பிறப்பு, இறப்பு முதலிய) துன்பங்கள் எல்லாவற்றையும் உண்டாக்கும் இந்த அஞ்ஞான மூலமான அகங்காரக் கிரந்தியை,

❻ "என்ன" என்பது முன்னைய மூன்று இடங்களிலும் கூட்டப் பெற்றது.

மறை = வேதமானது.

தன் ஞான ஏதுவால் ஒழி எனும் (ஏ – அசை) – தன்னை அறியும்(தனது உண்மைச் சொரூபமாகிய ஆன்மப் பிரம்ம ஐக்கிய சொரூபத்தைஅறியும்) ஞானமாகிய காரணத்தால், (அஞ்ஞானத்தை ஒழித்தல் மூலமாக) ஒழிப்பாயாக என்று கூறுகின்றது.

முற்றிற்று.

**யஜுர் வேதத்தின் பிருகதாரண்ணிய உபநிடதத்தில் கூறப்பட்ட "அகம் பிரம்ம அஸ்மி = நான் பிரம்மாய் இருக்கிறேன்" என்னும் அநுபூதி மகா வாக்கிய சங்கிரகம் (சுருக்கம்)**

(சித்து , சட விசார முறை)

**இருபத்தெண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.**

(அகம் சப்த விசாரம்)

**(திருஷ்டாந்தம் = உவமானம்)**

அறிபடு கின்ற கடம் அறி வோனுக்(கு)
அனியகா ரணத்தினால்அவனால்
ஆர்ந்திதென் றறியப் படுதலால் சடமாம்
அறிஇது சித்ததாம் அறிவோன்
அன்றிதன் அனியம் ஆனவன் அறிவோன்
ஆம் இந்த முறையினைப் போல

**(தாஷ்டாந்தம் = உவமேயம்)**

அஞ்ஞான ①(அ) த் யாசம் அம்அகக் ②கிரந்தி
ஆர்ந்தநான் எனும் விருத் திக்கு

---

① அத்தியாசம், ஆரோபம், கற்பனை என்பன ஒரு பொருட்சொற்கள்.
② கிரந்தி, முடிச்சு, பந்தம், கட்டு என்பன ஒரு பொருட் சொற்கள்.

அறிபடும் ③வியட்டி அ(ந்) நாதியைங் கோசம்
அபாவமத் யாசமில் நான் என்(று)
ஆம் விருத் தியினுக்(கு) அமைதன் சோ தியினால்
விளங்கும் சித் ④சாட்சியாம் அறிவுக்(கு)
அனியகா ரணத்தால் சாட்சியால் இதிதென்(று)
அறிபட லாற்சடம் இவைகள்
அறிசித்சான் றறிவாம் நான் அல இவற்றின்
அனியசான் றறி(வு)அதே நான் ஆம்

**(பிரம்ம சப்த விசாரம்)**

இறுத்தஇவ் வாறே ⑤சமட்டி அந் நாதி
இவைசடம் சித்பிர மம்(அ)ல
இவற்றன்ய சான்றாம் அறி(வு) அதே பிரமம்

**(அஸ்மி சப்த அர்த்த ஐக்கிய சிந்தனம்)**

**(திருஷ்டாந்தம்)**

இனக்கட மாவான் ஏ கம்போல்

**(தாஷ்டாந்தம்)**

இனவியட்டி சான்று நானும்ச மட்டி
சான்றதாம் பிரமமும் ஏகம்
இனையநான் பிரமம் பிரமமே நான் ஆம்

**(திருஷ்டாந்தம்)**

⑥இப்பிகண் டால்வெள்ளி அழிந்து

---

③வியட்டி = தனி.

④சாட்சி அறிவு, சான்று அறிவு என்பன ஒரு பொருட் சொற்கள்.

⑤சமட்டி = சர்வம், அதாவது எல்லாம்.

⑥இப்பி = கிளிஞ்சில். (இப்பி வெள்ளி திருஷ்டாந்தம் கூறிய தால், இதன் இனமான சாட்சியில் சொப்பனம் (கனவு) முதலிய திருஷ்டாந்தங்களும் கொள்ளலாம்.)

அறியதிட் டான இப்பிய துறல்போல்

**(தாஷ்டாந்தம்)**

அறிவுரு நமைக்கண்டால் காணும்
அசத்சட துக்க துவிதஅஞ் ஞான(அ)த்
யாச(அ)கக் கிரந்திமுன் அனைத்தும்
அழிந்ததிட் டான சச்சிதா னந்த
அத்வித நமதுரு உறலால்
அறிபடும் சருவம் பிரமநாம் இத்திண்

**(பலம் = பிரயோஜனம்)**

அறிவுநாள் துன்பி(ல்)இன் பவீ(டு)ஆம்.

**இதன் பொருள்**

**(அகம் சப்த விசாரம்)**

**(திருஷ்டாந்தம் = உவமானம்)**

அறிபடுகின்ற கடம் – அறியப்படுகின்ற கடமானது.

அறிவோனுக்கு அனிய காரணத்தினால் – இக்கடத்தை அறிகிறவனுக்கு அன்னியமான (வேறு ஆன) காரணத்தினால் (ஏது வினால்),

அவனால் ஆர்ந்து இது என்று அறியப்டுதலால் சடம் ஆம் – அறியப்படும் (சடம் ஆன) இது, (இதை அறிகிற) சித்து ஆன அறிபவன் அன்று.

இதன்அனியம் ஆனவன் அறிவோன் ஆம் – இக்கடத்திற்கு அன்னியம் ஆனவன் (வேறு ஆனவன் ) அறிபவன் ஆவன்.

இந்த முறையினைப் போல– இந்தக் கிரமத்தைப்போல

**(தாஷ்டாந்தம் = உவமேயம்)**

அஞ்ஞான அத்யாசம் ஆம் அகக் கிரந்தி ஆர்ந்த நான் எனும்

விருத்திக்கு அறியபடும் = அஞ்ஞானத்தாலான, அந்நியோந்நிய அத்தியாசமாகிய (கற்பனையாகிய) அகங்காரக் கிரந்தியுடன் கூடிய நான் என்னும் விருத்திக்கு அறியப்படும்.

வியட்டி அந்நாதி ஐங்கோசம் அபாவம் = வியட்டி (தனிமையான) அந்நமய கோசம் முதலிய ஐந்து கோசங்களும் (மறைப்புக்களும்) (அந்நமய கோசம், பிராணமய கோசம், மனோமய கோசம், விஞ்ஞானமயகோசம், ஆனந்தமய கோசம் என்னும் பஞ்சகோசங்களும்,) (இந்தப் பஞ்சகோசங்களையும்,இங்கு கூறப்படும் சித்து, சடவிசாரத்தால் இது நான் அன்று, இது நான் அன்று என இவற்றில் உள்ள நான் என்னும் அகங்காரத்தை நீக்கிய பின்பு அறியப்படும்) இப்பஞ்ச கோசங்களின் அபாவமாகிய இன்மையும் ஆகிய இவைகள் ஒவ்வொன்றும்,

அத்யாசம் இல் நான் என்று ஆம் விருத்தியினுக்கு அமை தன் சோதியினால் விளங்கும் = அத்தியாசம் இன்றி (கற்பனை இன்றி) நான் என்று உண்டாகும் விருத்திக்கு, இயற்கையாக அமைந்த தனது சொரூபப்பிரகாசமாகிய (சுயம் பிரகாரமாகிய ) அறிவினால் விளங்குவது ஆன,

சித் சாட்சி ஆம் அறிவுக்கு அனிய காரணத்தால் = சித்து (அறிவு) வடிவ சாட்சி (நேரில் அறிவது, அதாவது மற்றொன்றன் பிரகாசமாகிய அறிவை அபேக்ஷிக்காமல், தனது சுயம் பிரகாசத்தினால் அறிவது ஆன சாட்சி) ஆகிய அறிவுக்கு அன்னியமான (வேறு ஆன) காரணத்தினால்,

சாட்சியால் இது இது என்று அறிபடலால் சடம் = அந்தச் சாட்சி அறிவினால் இது இது எனும் தன்மையினால் அறியப்படுதலால் சடங்கள் ஆம்.

இவைகள் அறி சித்சான்று அறிவு ஆம் நான் அல = (இவ்வாறு சடங்கள் ஆதலால்) இவைகள் (இவைகளை) அறியும் சித்து ஆன சாட்சி அறிவு ஆகிய நான் அல்ல. ஆத்மா (நான் என்னும்

சப்தத்திற்கும், மனோ விருத்திக்கும் பிறழ்ச்சியின்றிய உண்மைப் பொருள் ஆன ஆத்மா) அல்ல.

இவற்றின் அனிய சான்று அறிவு அதே நான் ஆம் = (சடங்கள் ஆன) இவைகளின் , அன்னியமான சாட்சி அறிவே நான் ஆம் ; ஆத்மா ஆம்,

**(பிரம்ம சப்த விசாரம்)**

இறுத்த இவ் வாறே – கூறிய (அகம் சப்த விசாரத்தில் வியஷ்டி (தனி) அந்நமயாதிகட்கும், சாட்சி அறிவுக்கும் கருதிய) இந்த விசார முறையைப் போல,

சமட்டி அந்ந ஆதி இவை சடம் – (சீவனால் நான் என்று அபிமானம் செய்யப்படாமல் அறியப்படும், ஆகாசாதிப்பிரபஞ்சத்திற்கும், பிரம்மத்திற்கும் சீவனால் செய்யப்பட்ட அந்நியோந்நிய அத்தியா சத்துடன் கூடிய பிரம்மம் என்னும் விருத்திக்கு அறியப் படும் ) சமஷ்டி (சர்வம் = எல்லாம்) ஆனஅந்நமயம் முதலிய பஞ்ச கோசங்களும், அதாவது ஈசுவரனை மறைக்காமல், சீவனை மாத்திரம் பிரம்மத்தை அறியகூடாமல் மறைப்பதாகிய சமஷ்டி பஞ்ச கோசங்களும், இவற்றின் அபாவம் ஆன இன்மையும் ஆகிய இவைகள் சடங்கள் ஆம்.

சித்பிரமம் அல = (இவ்வாறு சடங்கள் ஆதலால் இவைகள், இவைகளைச் சுயம் பிரகாசத்தினால் அறிவதாகிய சர்வ சாட்சி அறிவு ஆன) சித்து ரூபப்பிரம்மம் அல்ல.

இவற்று அன்யசான்று ஆம் அறிவு அதே பிரமம் – இவைகட்கு அன்னியமான (வேறு ஆன) சர்வ சாட்சியாகிய பேரறிவே பிரம்மம் ஆம்.(பிரம்மம் என்னும் சப்தத்திற்கும், மனோ விருத்திக்கும், பிறழ்ச்சி யின்றிய உண்மைப் பொருள் ஆன பிரம்மம் ஆம்).

**(அஸ்மி சப்த அர்த்த ஐக்கிய சிந்தனம்)**

(திருஷ்டாந்தம்)

இன கட மாவான் ஏகம் போல் – (கட ஆகாயமும் , மகா ஆகாயமும், கடம், பிரம்மாண்டம் ஆகிய உபாதிகளின் கற்பனைதிருஷ்டியில் வேறுபபோல் தோற்றினும், உபாதி கற்பனை அற்ற யதார்த்த திருஷ்டியில்) இனம் ஆகிய அதாவது ஒற்றுமை வகையாகிய, இடங்கொடுத்தல், ஆபேக்ஷிக, அசங்க, நிர்விகாரத்துவம் முதலிய லக்ஷணங்களில் ஏகமாய் (ஒன்றாய்) இருத்தலால் , கட ஆகாயமும் மகா ஆகாயமும் ஏகமாய் (ஒன்றாய்) இருத்தல் போல,

(தாஷ்டாந்தம்)

இனவியட்டி சான்று நானும், சமட்டி சான்று அது ஆம் பிரமமும் ஏகம் = (வியட்டி சாட்சி அறிவு ஆகிய நானும், சமட்டி சாட்சி அறிவு ஆகிய பிரமமும் அவித்தை மாயை ஆகிய உபாதிகளின் கற்பனை திருஷ்டியில் வேறுபோல் தோற்றினும், உபாதி கற்பனை அற்ற யதார்த்த திருஷ்டியில்) இனம் ஆகிய அதாவது ஒற்றுமை வகையாகிய நிரபேக்ஷிக, அசங்க, நிர்விகார, அதிஷ்டான சச்சிதானந்தம் முதலிய லக்ஷணங்களில் ஏகமாய் (ஒன்றாய்) இருத்தலால், வியட்டியின் சாட்சி அறிவாகிய நானும், சமட்டியின் சாட்சி அறிவாகிய பிரம்மமும் ஏகம் (ஒன்று) ஆம்.

இனைய நான்பிரமம் பிரமமே நான் ஆம் = இத்தகைய வியட்டியின் சாட்சி அறிவாகிய நான் (ஆத்மா) சமட்டியின் சாட்சி அறிவாகிய பிரம்மாய் இருக்கிறேன் ; சமட்டியின் சாட்சி அறிவாகிய பிரம்மமே, வியட்டியின் சாட்சி அறிவாகிய நான் ஆக இருக்கிறேன்.

(திருஷ்டாந்தம்)

இப்பி கண்டால் வெள்ளி அழிந்து அறி அதிட்டான இப்பி அது உறல் போல் = (அதிஷ்டானமான) கிளிஞ்சிலைக் கண்டால் அதில் அத்தியாசமாக (கற்பனையாக)த்தோற்றிய வெள்ளியானது, அபவாதமாய் (கற்பனைநிவிர்த்தியாய்) ஒழிந்து, உண்மையாக அறியக்கூடிய அதன் அதிர்ஷ்டான மான கிளிஞ்சிலாக மிஞ்சுதலை உறுதல் போல,

(தார்ஷ்டாந்தம்)

அறிவு உரு நமைக் கண்டால் = (சர்வப் பிரபஞ்சத்தின் அதிஷ்டானமாகிய) சாட்சி அறிவோடு அபேதமான சர்வ சாட்சி அறிவு உருவமான பிரம்மம் மாத்திரம் ஆகிய நம்மை (அஞ்ஞான, சந்தேக, விபரீதங்கள் ஆகிய தடைகள் அற்ற திட அபரோக்ஷமாக) அறிந்தால்,

காணும் அசத் சட துக்க துவித = அறிபடும் அசத்து, சடம், துக்கம்,துவிதம் அகிய லக்ஷணங்களையுடைய,

அஞ்ஞான , அத்யாச, அகக்கிரந்தி முன் அனைத்தும் அழிந்து = (வியட்டி, சமட்டியாகிய) அஞ்ஞானம், அந்நியோந்திய அத்தியாசமாகிய அகங்காரக் கிரந்தி முதலிய சர்வப் பிரபஞ்சமும், அபவாதமாக (கற்பனை நிவிர்த்தியாக) ஒழிந்து,

அதிட்டான சச்சி தானந்த அத்வித நமது உரு உறலால் = (சர்வப் பிரபஞ்சத்தின்) அதிஷ்டானமாயும், சத்து, சித்து, ஆனந்த , ஆத்வைதமாயும் உள்ள சாட்சி அறிவோடு அபேதமான சர்வ சாட்சிப் பேரறிவாகிய பிரம்மவடிவ நமது சொரூபமாக மிஞ்சுதலை உறுதலால்,

அறியபடும் சருவம் பிரம நாம் = (ஆத்மப் பிரம்ம வடிவ நாம் ஆகிய, சாட்சி அறிவோடு அபேதமான சர்வ சாட்சிப் பேரறிவினால்) அறியப்படும் சர்வப் பிரபஞ்சமும் ஆத்மப்பிரம்மாகிய நாமே ஆம்.

(பலம் = பிரயோஜனம்)

இத் திண் அறிவுநாள் துன்பு இல் இன்ப வீடு ஆம் = இவ்வாறு ஆன (அகங்காரக் கிரந்தி அற்ற) நான் பிரம்மாய் இருக்கிறேன். பிரம்மம் (அகங்காரக்கிரந்தி அற்ற) நான் ஆக இருக்கிறேன். சர்வமும் பிரம்மம் மாத்திரம் ஆகிய (அகங்காரக் கிரந்தி அற்ற) நான் ஆம். என்னும் அஞ்ஞானம் , சந்தேகம், விபரீதம் ஆகிய தடைகள் அற்ற திட அபரோக்ஷஞானம் உற்ற நாளில் (உற்ற அக்கணத்திலேயே) சர்வதுக்க நிவிர்த்தி பரமானந்தப் பிராப்தி வடிவ மோக்ஷமாகிய பேரின்ப வீடு பெறப்படுவதாம்.

(முற்றிற்று)

# ஹிந்து மத தற்காப்பு

## முன்னுரை

ஹிந்து ஒற்றுமை எழுச்சி நலம் உறுதலால் தெய்வீக அறமதமாகிய இணையிலா ஹிந்து மதம், தற்காப்பு நலம் உற்று வாழும், என்பதை அறிவிக்கும் முறையில்,

1. சாதி வேற்றுமையின் நீக்கத்தைக் குறித்தும்.

2. சமய ஒற்றுமையின் ஆக்கத்தைக் குறித்தும்,

அறிவிற் சிறந்த ஆன்றோர்களின் நூல்களில் கூறப்பட்டுள்ள, பல அறிவுரைகளில் சில அறிவுரைகள் மாத்திரம் எடுத்துத் தொகுத்துக் கூறுதல் வருமாறு.

தொகுப்பு ஆசிரியர்,
13–2–1982 **மகா. கோவிந்தசுவாமி,**
கோவிலூர் மரபு
ஸ்ரீஜகத்குரு சங்கர ஆசிரமம்,
கொப்பமாபுரி – 621 012.

# ஹிந்து மத தற்காப்பு

## 1. சாதி வேற்றுமையின் நீக்கத்தைக் குறிக்கும் அறிவுரைகள்.

தமிழ் நாடு பிராமணர் சங்கம், திருப்பத்தூர் வட்டம், இராமநாதபுரம் மாவட்டம் , மாநாட்டுச்சிறப்புமலர்1–3–1981.

காஞ்சி, காமகோடி பீடம். ஜகத்குரு. ஸ்ரீ சங்கராச்சார்ய சுவாமிகள், சிருங்ககிரி , சாரதாபீடம் ஜகத்குரு. ஸ்ரீ சங்கராச்சார்ய சுவாமிகள், ஸ்ரீரங்கம், பெரியாசிரமம், ஸ்ரீமத் ஆண்டவன் சுவாமிகள் ஆகியவர்களின் அங்கீகாரம் பெற்ற மலர்.

**பக்கம் 25**

## பிராமணன் பற்றி விவேகானந்தர்.

நம் நாட்டிலுள்ள மற்ற சமூகங்களின் நன்மைக்காக, அவைகளின் கதிமோட்சத்திற்காக உழைப்பதே பிராமணனின் கடமை ஆகும்.

நான் பிராமணன் என்று உரிமை பாராட்டிக் கொள்ளும் ஒவ்வொருவரும், அந்த உரிமையை இரண்டு வழிகளில் நிரூபித்தாக வேண்டும்.

ஒன்று, பாரமார்த்திக மேன்மையை விளங்கச் செய்ய வேண்டும்.

இரண்டு , மற்றவர்களையும் தன்னுடைய நிலைக்கு உயர்த்த வேண்டும்.

அவர்கள் அப்படிச் செய்வதாகத் தெரியவில்லை.தற்போது அவர்களில் பலர் பிறவிக்கர்வத்தையே பேணிவருவதாகக் காணப்படுகிறது.

# தற்கால இந்தியா

ஸ்ரீ சுவாமி விவேகானந்தர் இயற்றியது.

2–ஆம் பதிப்பு – 1953. ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், மயிலாப்பூர்.

மேற்படி நூல் பக்கம் 110, ஏ வீரனே, துணிவு கொள்க, தீரனாகுக , நீ ஓர் இந்தியனாவது பற்றிப் பெருமை பூணுக; "யான் ஒரு இந்தியன் , ஒவ்வோர் இந்தியனும் எனது சகோதரன்" என்று பெருமையோடு பறையறைக. "அறிவில்லா இந்தியனும், ஏழையும், அனாதையுமான இந்தியனும் , பிராம்மண இந்தியனும், பறையனான இந்தியனும், எந்த இந்தியனும் எனது சகோதரனே என்று கூறுக.

ஸ்ரீ விவேகானந்த உபநிஷதம் (ஸ்ரீ விவேகானந்த சுவாமிகள் ஆங்கிலத்தில் உரையாற்றிய, "இன்ஸ்பையர்டு டாக்ஸ்= உணர்ச்சி பரவமூட்டும் உரைகள்" என்னும் பெயருள்ளநூல், ஸ்ரீ சித்பவானந்த சுவாமிகள் தமிழாக்கம் செய்யப்பட்டதற்கு ஸ்ரீவிவேகானந்த உபநிஷதம் என்று பெயர்.)

**மூன்றாம் பதிப்பு- 1975**

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம், திருப்பராய்த்துறை.

மேற்படி நூல் பக்கம் 25.

நான் என்பது அகன்று போம் அளவு, தான் என்னும் தெய்வம் முன் வந்து நிற்கிறது. நான் என்னும் துச்ச அகங்காரம் ஒழியட்டும். தான் என்னும் பெரியபுருஷனே (தெய்வமே) வீற்றிருக்கட்டும்.

**பக்கம்-28**

தங்களைத் தெய்வத்திடம் ஒப்படைக்கிறவர்கள், உலகுக்குத் தொண்டு செய்கிறேன் என்று சொல்லிக் கொள்பவர்களைவிடப் பன்மடங்கு அதிகமாக உலகுக்கு நலம் செய்கின்றனர்.

# 2. சமய ஒற்றுமையின் ஆக்கத்தைக்குறிக்கும் அறிவுரைகள்

பேரூர், தவத்திரு, சாந்தலிங்க சுவாமிகள் அருளிய அவிரோத வுந்தியார் மூலமும், போரூர், தவத்திரு. சிதம்பரசுவாமிகள் அருளிய உரையும்.

வெளியீடு : தவத்திரு. சாந்தலிங்க அடிகளார் திருமடம், பேரூர். கோவை.1965

பக்கம்–2

**கவி.2**

தவிரா விரோத சமயநூல் அன்றால்
அவிரோத உந்தியென்(று) உந்தீபற
ஆமிந்நூல் நாமம் என்(று) உந்தீபற

(என்பது)

ஒன்றுக்கு ஒன்று மாறாத விரோதத்தினையுடைய சமய நூல்களில் இஃதும் ஒன்று அன்று; ஆதலால் , அவிரோத உந்தி என்று வழங்குவதற்கு உரித்தாம் இந்நூற் பெயர்.( என்றவாறு)

அவிரோதம்– பக்ஷபாதம் இல்லாமை. இது நூற்பெயர் காட்டியது.

**பக்கம் : 38 -39 (கவியின் முன்னுரை)**

குரு வாக்கியமும், சுருதியும், சுவானுபவமும், ஒத்திருக்க வேண்டும் என்று மேற்கூறுகின்றார்,

**கவி - 22**

ஆன்ற ஆசான் சொல்மெய்ந் நூல்தன் அனுபவம்
மூன்றும் ஒத்தாந் துணிவு உந்தீபற
முத்திநெறிய(து) என்று உந்தீபற.

(என்பது)

அமைவு பெற்ற ஞானாசாரியர் வாக்கியமும் உண்மை நூலாகிய சுருதியும், விசாரிக்கும் தன்னுடைய சுவானுபவமும், ஆகிய இம்மூன்றும் ஒன்றுக்கு ஒன்று மாறுபடாமல் ஒரு தன்மை ஆகிய அவ்விடத்துண்டாகிய நிச்சயமே வீட்டு நெறி. (என்றவாறு)

**பக்கம்-40 (கவியின் முன்னுரை)**

குரு வாக்கியம் போல் ஒரு படித்தன்றிச் சுருதி நானாவழி கற்பித்தலால் எங்ஙனம் ஒக்கும் என்பதற்கு மேல் உத்தரம் கூறுகின்றார்.

**கவி-28**

வேதம்பல்பக் குவமோர்ந்து ஒருவிட்டினுக்கு
ஓதும் பல்லாற் றானும் உந்தீபற
உண்மைகண் டார்க்கேகம் உந்தீபற

(என்பது)

ஒப்பற்ற வீட்டிற்கு மார்க்கம், ஒருவிதம் அன்றிப் பலவிதமாக வேதம் கூறா நிற்பதும், ஆன்மாக்களது கன்மத்தளவில் உண்டாகிய பருவ பேதத்தை ஞான மயனாகிய பகவான் அறிந்து அம்மார்க்கங் களினது கருமகாண்டங்களை அங்ஙனம் (நானா வழியாகக்) கூறி, ஞானகாண்டங்களில் எல்லாம் (ஒரே வழியாகிய ) தற்போத நீக்கமே கூறுதலின் உள்ளபடி (நெறியின் முடிந்த கொள்கைப்படி) தேர்வார்க்கு மார்க்காந்தரங்கள் (வேறு வேறு மார்க்கங்கள்) எல்லாம் அபேதம் ஆதலில் சுருதிநெறி ஒன்றே. (என்றவாறு)

(தற்போதம், ஆணவம், அகங்காரம் என்பன ஒரு பொருட் சொற்கள்.)

இதற்குப் பிரமாணம் : திருமந்திரம் ;

" ஒன்றதே பேரூர் வழி ஆறு அதற்குள
என்றதே போலும் இருமுச் சமயங்கள்
நன்றிது தீதிது என்றுரை மாந்தர்கள்
குன்று குரைத்தெழு நாயை ஒத்தாரே".

என்றும், திருவாசகம்:

" சமயவாதிகள் தத்தம் மதங்களே
அமைவதாக அரற்றி மலைந்தனர்."

**பக்கம் 107. கவி-62**

"எம்மதத் தோர்எவ் வகைநிட்டை சொல்லினும்
சம்மத மேயெமக் குந்தீபற
தற்போதம் மாய்க்குமேல் உந்தீபற.

(என்பது)

இங்ஙனம் கூறியது ஒழிந்து பின்னும் நானாவிதமாக முத்தி நிஷ்டை கூறுவாரும் உளர். யாதொரு சமயி கூறிய யாதொரு நிஷ்டையேனும் ஆத்மாவினது தற்போதத்தை (அகங்காரத்தை)க் கெடுத்துச் சிவத்தோடு இரண்டறக் கலப்பிக்குமாயின் அந்நிஷ்டைகளும் எமக்கு அவிரோதமே. (என்றவாறு)

இதற்கு உதாரணம், வீராகமம்:

"வேத ஆகமமும் தீக்கை விதிகளும் சரியை யாதி
மேதகு பாதம் நான்கும் மிகுபத முத்தி நான்கும்
தீதின்மா ணவக மற்றும் செப்பிய அனைத்தும் உன்தற்
போதம் நீறாக நாதன் புந்தி செய்து அமைத்த ஆமே."

திருஞானசம்பந்தர் திருவருள் பெற்ற
**சீகாழி தவத்திரு. கண்ணுடைய வள்ளலார்**
திருவாய் மலர்ந்தருளிய

# ஒழிவிலொடுக்கம்.

(தற்போத ஒழிவில் சிவத்தில் ஒடுக்கம்) திருப்போரூர். தவத்திரு சிதம்பரசுவாமிகள் இயற்றிய உரையுடனும் வடலூர். தவத்திரு. ஜோதி இராமலிங்க சுவாமிகள் இயற்றிய உரையுடனும் திரு. எஸ். அனவரத விநாயகம் பிள்ளை. எம். ஏ., எல். டீ., அவர்களால் பார்வையிடப்பெற்றும், பதிப்புரை எழுதப்பெற்றும் உள்ள நூல். 1906

**பக்கம் 248 சரியைக் கழற்றி - கவியின் முன்னுரை.**

(வேதாந்த முத்தியோ சித்தாந்த முத்தியோ உண்மை என்ற மாணாக்கனை நோக்கி மேற்கூறுகின்றார்.)

**கவி - 13.**

கயிற்றரவும் கட்டையினில் கள்ளனும் போல் மாயா
மயக்கமற்ற வேதாந்த வாழ்வும் முயற்சிகெட்ட
ஆனந்தா தீதத்தே ஆணராம் ஆகமமும்
தானந்தி னார்க்குச் சமன்.

(உரை ) கயிறு அரவும் கட்டையினில் கள்ளனும் போல் மாயா மயக்கம் அற்ற வேதாந்த வாழ்வும் = உள்ள கயிற்றினிடத்து இல்லாத பாம்பு கற்பிதமாகத் தோற்றுதல் போலும், உள்ள கட்டையினிடத்து இல்லாத கள்வன் கற்பிதமாகத் தோற்றுதல் போலும், உள்ள பிரமத்தினிடத்து இல்லாத மாயை கற்பிதமாகத் தோற்றுகிறதென்று அறிந்து, இம் மாயா மயக்கம் சிறிதும் தோன்றாது இறந்த இடம் வீடு என்று கூறும் வேதாந்தச் செல்வமும்.

முயற்சி கெட்ட ஆனந்தாதீத்தே ஆணவர் ஆம் ஆகமமும் தான் நந்தினார்க்குச் சமன் = தற்போத முயற்சி சிறிதும் தோன்றாது இறந்த ஆநந்தா தீதத்தில் பெத்ததிசையில் ஆணவராகி இருப்பாரைப்

போலும் இருப்பதே வீடு என்று கூறும் ஆகமச் செல்வமும்.

தான் என்று எதிரிட்டு எழும் புல்லறிவு கெட்டார்க்குச் சமனாம்.

(குறிப்பு) அவித்தியாகதமாய் (அஞ்ஞானமயமாய்) இருந்த சீவனும் புன்மை அறிவாய் இருந்து நான் என்று எதிரிடும் அவ்வறிவு கெட்டபோது, அச்சீவசாட்சியாய் இருந்த பிரமம் தான் ஆகலானும், ஆணவமயமாய் இருந்த ஆன்மாவினது புன்மை அறிவாய் இருந்து நான் என்று எதிரிடும் அப்போதம் கெட்டபோது, அவ்வான்மா தனக்கு முதலாகிய சிவமயம் ஆதலானும், இங்ஙனம் ஆய போது (வேதாந்தி, சித்தாந்தி ஆகிய) இருவர்க்கும் ஆநந்தாநுபவம் இருத்தலானும் " தான் நந்தினார்க்குச் சமன்" என்றார்.

தான் நந்தாத (கெடாத) அபரஞானிகட்கு (தற்போதம் கெட்ட அபரோட்ச ஞானம் இல்லாமல், தற்போதம் கெடாத பரோட்ச ஞானிகட்கு) ச் சமன் (சமம்) அன்று என்பது தானே ஆயிற்று.

இத் திருவெண்பாவால் வேதாந்த சித்தாந்த முத்தி இரண்டும், தற்போதம் ஒழந்தோர்க்குச் சமன் (சமம்) என்று அறிவித்தவாறு காண்க.

## இணையிலா இந்துமதம்.

ரிஷிகேசம். ஸ்ரீ சிவானந்தசரஸ்வதி சுவாமிகள் இயற்றியது.

உபநிடதங்கள், வேதாந்தப் பிரம்ம சூத்திரங்கள், பகவத்கீதை இவைகள் பிரஸ்தானத்திரயங்கள் (தலையாய மறைநூல்கள் மூன்று) என வழங்கப்படுகின்றன.

| | |
|---|---|
| ஸ்ரீ சங்கராச்சாரியரின் | கேவல அத்வைதம் |
| ஸ்ரீ இராமானுசாச்சாரியரின் | விசிட்டாத்தவிதம் |
| ஸ்ரீ மத்வாச்சாரியரின் | துவிதம் |
| ஸ்ரீ நிம்பர்க்காச்சாரியரின் | பேதா பேதம் |
| ஸ்ரீ வல்லபாச்சாரியரின் | சுத்தாத்துவிதம் |

ஸ்ரீசைதன்யரின் அசிந்த்ய பேதா பேதம்

ஸ்ரீ மெய்கண்டாரின் சைவசித்தாந்தம்

என்று பற்பல வேதாந்தப் பிரிவுகள் உள்ளன. இவையனைத்தும் உண்மையைக் கண்டுபிடிப்பதற்கான வெவ்வேறு வழி முயற்சிகளே யாகும்.

துவிதம், விசிட்டாத்துவிதம், கேவலஅத்துவிதம் என்பவையே வேதாந்தத்தின் மூன்று முக்கியப் பிரிவுகள். இவை அனைத்தும் உயரிய உண்மை அதாவது பரப்பிரம்மத்தை அடைவதற்கான பல்வேறு படிகளாம்.

இவை ஒன்றற்கு ஒன்று முரண்பாடு உடையவையல்ல. நேர்மாறாக ஒன்று மற்றொன்றுக்கு உதவி புரியக்கூடிய அளவில் அமைகின்றன.

இந்தமூன்று படிகளும் சமாதான முறையில் அடுக்கடுக்காக ஒழுங்குற அமைக்கபட்டிருக்கின்றன. துவிதம், விசிட்டாத்துவிதம், கேவல அத்துவிதம் இம்மூன்றும் முடிவில் பரம்பொருளின் அத்துவித வேதாந்த அனுபவநிலையில் முடிகின்றன.

திருவாவடுதுறை ஆதீன மஹாவித்வான் நாகர் கோவில் திரு. கே. ஆறுமுக நாவலர் இயற்றிய இந்துமத இணைப்பு விளக்கம்.

27 – 10 – 1963.

காஞ்சி காமகோடிபீடம் ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகள், மதுரை திருஞானசம்பந்தர் ஆதீனம் மஹாசந்நிதானம் ஸ்ரீ சோமசுந்தர ஞானசம்பந்த தேசிக சுவாமிகள், ஆகியவர்களின் அங்கீகார ஆசிகள் பெற்ற நூல்.

**பக்கம் 30,31,32,**

அறுவகைச் சமயங்கள் (சுருக்கமாகக்கூறுதல்.)

காணாபத்தியம் – கணபதியை வழிபடுவது.

கௌமாரம் – குமரனாகிய முருகனை வழிபடுவது.

ஸௌரம் – சூரியனை வழிபடுவது.

வைணவம் – விஷ்ணுவை வழிபடுவது.

சாக்தேயம் – சக்தியை வழிபடுவது.

சைவம் – சிவனை வழிபடுவது.

இவையனைத்தையும், திருமூலர் திருமந்திரத்தில் " ஒன்றது பேரூர் வழி ஆறு அதற்கு உள" எனக் கூறுகிறார்.

## மதங்களின் இணைப்பு

இதுகாறும் இந்துமத நூல்களில் உள்ள கருத்துகளின் சுருக்கவிளக்கமும், இந்துமதக் கிளை மதங்களின் வரலாறும் , கொள்கைகளும் ஒருவாறு எடுத்து இயம்பியுள்ளோம்.

அச்சமய நூல்களிலும், கிளைச் சமயங்களிலும் பொதுவாகச் சொல்லப்படும் கருத்துகளைப் பொன்னேபோல் போற்றி, மாறுபட்ட சிறுபான்மைக் கருத்துக்களை விடுத்து, இந்துமதம் ஏகமாதமாக இணைந்து வாழ்வதற்கு உரிய இணையிலா முறைகளை எடுத்துக்கூறவாம்.

நமது இந்து மதம் வேத, ஆகம, சாத்திர, தோத்திரங்களை யொட்டி பல முக்கியப் பிரிவுகளாக மக்களின் தகுதிக்கேற்ப ஆதியில் தோன்றிற்று. அது நாளடைவில் பல்வேறு கிளைகளாகப் பிரிந்தது. சில காலங்களில் பெரியார்கள் சிலர் தோன்றி தங்கள் கொள்கைகளைப் பரப்பலாயினர். புதுமையில் விருப்புறும் சாதாரண சமய உறுதிப்பாடில்லாத மக்கள் அவற்றை விரும்பி மேற்கொள்ளத் தலைப்பட்டனர். ஆதலால் இந்து மதம் பற்பல கிளைகளாகப் பிரிய நேர்ந்தது. ஒவ்வொரு மதத்திற்கும் பற்பல நூல்களும் எறுபடலாயின. இவ்வாறு சமயங்களும், நூல்களும், சமய ஆசாரியர்களும் காஞ்சி

பெருகலாயினர். இந்து மதம் எனும் ஒரு தனி மதம், பற்பல பிரிவு மதங்களாகி பல கொள்கைகளோடு வேற்றுச் சமயங்கள் போல நிலவத்தலைப்பட்டது. இதனால் இந்து மதம் ஒற்றுமையின்றி நிலைகுலையத் தொடங்கிற்று.

பிற மதத்தினர் பாடசாலைகளில் சமயப்படிப்புக் கொடுப்பது போல, இந்து மதப்படிப்பு எங்கும் கொடுக்கப்படாத காரணத்தால், இந்து மாணவர்கள் சமய ஞானமின்றியே படித்து, பட்டங்கள் பெற்று, பதவிககளுக்கு வரலாயினர், மத அறிவு எங்கும் பெறாத காரணத்தால் அவர்கள் மத நம்பிக்கையற்று, மதத்தைப் பழித்துப் பேசி, மதமிலா வாழ்க்கையில் வாழவுந் தொடங்கினர். பொது மக்களுக்கு மதத்துவ ஞானத்தைப் பரப்பத்தக்க திட்டங்கள் எதுவும் இல்லாததால், மக்கள் தங்கள் மனம் போனபடி மதத்தைப் புகழவும் , இகழவும் தொடங்கினர்.

சமயவாதிகள் தம்முள் மாறுபட்டு எம்மதத்திலும் உண்மைப் பற்றின்றி சமய வாதப் போரினையே முதன் மையாக மேற்கொள்ளத் தலைப்பட்டனர். இவ்வாறு இந்து மதம் சீரழிந்து சிதறுண்டதை நன்கறிந்து வேற்றுமதத்தினர் தங்கள் தங்கள் மதத்தை நமது இந்திய நாட்டில் நிலைநிறுவி, இந்து மதத்தை அழித்து ஒழிக்கத் தயங்காது முயன்று வருகின்றனர். இன்னும் சிலகாலம் சென்றால் இந்து மதமே இருந்த இடந்தெரியாமல் அழிந்து போக நேரிடும் என அஞ்சுகிறோம்.

இந்து மத வளர்ச்சிக்கு இன்றியமையாப் பணிகளில், தலைசிறந்தது, இந்துமதக் கிளை மதங்களின் இணைப்பாகும் (ஒற்றுமையாகும்)

மற்றும்– தஞ்சை மாவட்ட ஹிந்து மாநாடு சிறப்பு மலரில், 1981 ஜனவரி 3,4, ரௌத்திரி – வருடம் – மார்கழி 19,20 (சனி, ஞாயிறு)

விஸ்வ ஹிந்து பரிஷத் (உலக ஹிந்து பேரவை) மாயூரம் (மயிலாடுதுறை)

காமகோடி பீடம் ஜகத்குரு ஸ்ரீசங்கராச்சார்ய சுவாமிகள், தருமபுரம் ஆதீனம் 26—ஆம் குருமகா சந்நிதானம் முதலியவர்களின் ஆங்கீகார ஆசிகள் பெற்ற மலர்.

**மேற்படி மலர் . பக்கம் 32ல் ஒரு பகுதி.**

அரிஜன வகுப்பில் தோன்றி நந்தனாரை 63 நாயன்மார்களில் ஒருவராக ஏற்று திருப்புன்கூர் கோவிலில் தனிச்சிலையும், மற்ற எல்லாக் கோவில்களிலும் சிலை வைத்தும் போற்றுகிறோம்.

ஆதிசங்கரரும் ஹரிதத்தரும் தீண்டத்தகாதவர்கள் என்று கருதியவர்களை பெரிய தத்துவத் தரிசனம் அறிந்தவர்கள் என்று தெரிந்து அவர்களைப் போற்றி வணங்கினார்கள்.

உமாபதி சிவாச்சாரியார் ஒரு தீண்டத்தகாதவருக்கு தீட்சையளித்து வீடுபேறு அடையச் செய்தார்.

இந்நிலையில் ஹிந்துக்களாகிய நாம் தாழ்த்தப் பட்ட மக்களை நம் சகோதரர்கள் அல்ல என்று புறக்கணிக்கலாமா?

**பக்கம் 36ல் ஒரு பகுதி -**

பண்டைய நாட்களில் பல மதத் தலைவர்களும், மற்றவர்களும் போக்குவரத்து வசதி இல்லாதிருந்த காலத்திலும் நாட்டின் பல பகுதிக்கும் பலமுறை சென்று மக்களை ஒழுக்கமுடையவர்களாக வாழ்வதற்கும், தன்னலமற்று சமுதாயத்திற்காக வாழ்வதற்காகவும், எந்தச் சாதியில் பிறந்திருந்தாலும், எவ்வுயிரிடத்திலும் செம்மை பூண்டு ஒழுகி தங்களை அந்தணர் என்ற நிலைக்கு உயர்த்திக் கொள்ள நல்ல பிரசாரம் செய்து வந்தார்கள்.

**பக்கம் 37ல் ஒரு பகுதி-**

சமயங்கள்— நம் இந்து சமயத்தின் உயிர்நாடியான கொள்கைகள் தவிர, மற்றவை வெளிச்சடங்குகள் என்பதை மறந்ததும், அதை ஏற்றுக்கொள்ள மறுப்பதும்தான் இன்று, சமயம் என்றால் இளந்தலைமுறையினர் எள்ளி நகையாடும் நிலைஏற்படக்

காரணங்களாகிவிட்டன. இந்து தர்மம் அழியும் திசை நோக்கி நடைபோடுகிறது.

சில பழம் புராணங்கள், கடவுள் உண்மையைப் பாமர மக்களுக்கு நன்கு விளக்கும் பொருட்டு,நல்ல அறிவுடைப் பெரியோரால் சொல்லப்பட்ட கதைகளை உள்ளடக்கி இருக்கின்றன.

ஆனால் இப்போது உள்ள புராணக் கதைகளில் பல, பின் வந்த பலரால் தங்கள் தங்கள் மனதிற்குத் தோன்றியபடி மாற்றி அமைக்கப்பட்டவை (இடைச்செருகல்).இது பெரும் குழப்பத்தை ஏற்படுத்தியிருக்கிறது. இது இப்போது நாத்திகர்களுக்கு , மக்களிடம் கடவுள் நம்பிக்கையைக் குலைக்க மிகவும் சௌகரிய மாய் இருக்கிறது.

**பக்கம் 38ல் ஒரு பகுதி-**

ஆகவே இராமாநுஜரைப் போல, திருஞான சம்பந்தர், மாணிக்கவாசகர், சுந்தரர், திருநாவுக்கரசரைப்போல, இன்று சமயத்தின் பேரால் நடுவில் புகுந்த (இடைச்செருகல் ஆன) குப்பைகளை நீக்கி, சமயத்தின் உண்மைப் பொருளை மக்களுக்கு நன்கு விளக்கவும், அன்புநெறி தழைத்து ஓங்கவும், மக்கள் இந்து தர்மத்தின் உட்பொருளை நன்கு உணரவும், அதை வாழ்க்கையில் ஒவ்வொருவரும் கடைப்பிடிக்கும்படி செய்யவும், பெருமுயற்சிகளை மேற்கொள்வது இன்றுள்ள சமயத் தலைவர்களின் அரும்பெரும் கடமையாகும்.

முற்றிற்று

**வேண்டுகோள்**

இந்த அறிவுரைகளை ஆஸ்திக விழாக்களின் மலர்களிலும், மற்றும் பத்திரிகைகளிலும், ஆசிரியர்கள் பதிப்பித்து வெளியீடு செய்து விளம்பரம் செய்யவேண்டும்.

# சிந்முத்திரார்த்தம்

## (சிந்முத்திரையின் பொருள்)




கையிலுள்ள சிறுவிரலையும் மோதிர விரலையும் நடுவிரலையும் விலக்கிச் சுட்டுவிரலின் நுனியையும் பெருவிரலின் நுனியையும் சேர்த்து ஒன்றுபடுத்திக் காட்டுவது சிந்முத்திரையாம்.

இந்தச் சிந்முத்திரையை ஸ்ரீ ஆதி குரு தக்ஷிணாமூர்த்தி, ஸ்ரீகிருஷ்ண பகவான், ஸ்ரீசங்கராச்சாரிய சுவாமிகள் முதலிய சற்குரு மூர்த்திகளின் உபதேசக் கோல உருவங்களில் காணலாம்.

சித்முத்திரை – சிந்முத்திரை – ஞான முத்திரை – சீடர்கள் சர்வ துக்க நிவிர்த்தி பரமானந்தப் பிராப்தியாகிய முக்தி என்னும் பேரின்ப வீடு அடையும் பொருட்டு, குருமூர்த்திகள் கையில் அமைத்துக்காட்டி அறிவிக்கும் சிந்முத்திரை அறிவிப்பின் விபர விளக்கம் வருமாறு – இங்குள்ள சிந்முத்திரைச் சித்திரத்தில் குறிப்பிட்டுள்ள எண்கள் விரல்களின் விபரங்களைக் குறிப்பனவாம்.

5. சிறுவிரல் – மலம் என்னும் பாப கர்மத்தைக் குறிக்கும். சிறுவிரலை விலக்கிக் காட்டுவதால் ஈசனைக் குறித்துச் செய்யும் நிஷ்காம புண்ணிய கர்மத்தினால், மலம் என்னும் பாப கர்மத்தை விலக்க வேண்டும் என அறிவிப்பதாம்.

4. மோதிர விரல் – விக்ஷேபம் என்னும் சித்த சஞ்சலத்தைக் குறிக்கும், மோதிர விரலை விலக்கிக் காட்டுவதால், ஈசனைக் குறித்துச் செய்யும் நிஷ்காம உபாசனையால், விக்ஷேபம் என்னும் சித்த சஞ்சலத்தை விலக்க வேண்டும் என அறிவிப்பதாம்.

3. நடுவிரல் – அஞ்ஞானம் என்னும் அறியாமையைக் குறிக்கும். நடுவிரலை விலக்கிக் காட்டுவதால், சீவ ஈசுரயதார்த்த சொரூபமான ஆத்ம பிரம்ம ஐக்கிய சொரூபத்தை அறிவதாகிய ஞானத்தால், அஞ்ஞானம் என்னும் அறியாமையை விலக்க வேண்டும் என அறிவிப்பதாம்.

இங்குக் கூறிய ஆத்ம பிரம்ம ஐக்கிய (ஏக) சொரூபத்தை அறிவதாகிய ஞான விபரம் வருமாறு –

2. சுட்டு விரல் – சீவனைக் குறிக்கும். 1. பெருவிரல் – ஈசனைக் குறிக்கும். சுட்டுவிரல் நுனியையும் பெருவிரல் நுனியையும் சேர்த்து ஒன்றுபடுத்திக் காட்டுவதால் முறையே சீவனின் கற்பனா பாகம் நீங்கிய சச்சிதானந்த சொரூப ஆன்மாவும், ஈசனின் கற்பனா பாகம் நீங்கிய சச்சிதானந்த சொரூபப் பிரம்மமும் ஏகமே (ஒன்றே)யாம். ஆகவே தத்துவம் அசி – அது நீயாக இருக்கிறாய். அதாவது சச்சிதானந்தப் பிரம்மாகிய அது சச்சிதானந்த ஆன்மாவாகிய நீயாக இருக்கிறாய். இவ்வாறு அறிந்து முக்தியாகிய பேரின்ப வீடு அடைவாயாக என அறிவிப்பதாம்.

**சிவஞான வள்ளலார் சாத்திரம்**

ஈசன் வேறு யான் வேறு என்று என்னும் கடையினங்கள்
ஈசன் அடி என்னும் இடையினங்கள் – ஈசனே
ஆனோம் என்று ஏமாக்கும் ஆயில் தலையினங்கள்
ஆனாத மாணா அறி.

சீவ பரமிரண்டும் தேருமிடத்(து) ஏக(ம்) என்று
மேவியசின் முத்திரைகொள் மென்கரத்தால் – ஓவில்
வழக்கறுத்தான் பல்சமய வாதிகளே காண்மின்
மழுககரத்தில் ஏந்தியஎம் மான்.

முற்றும்.

ஓம் தத் ஸத்
ஸ்ரீ இராமாய நம:

திருச்சி மாவட்டம்
கொப்பமாபுரி – ஸ்ரீ இராமாஸ்ரமம்
ஸ்ரீ பிரம்ம ஞானச் செல்வி
**ஸ்ரீ இராம ருக்மணி அம்மையார் அவர்கள்**
ஸ்ரீ இராமச் சந்திர பகவானின் சொரூபத்தில் ஐக்கியம்
அடைந்திருக்கின்ற நாள்.

**இருபத் தெண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.**

பேர் கொண்ட கலிவருடம் ஐயாயி ரத்தோடு
பேணுமெழு பத்து நான்கில்
பெறுசாலி வாகனம தாயிரத் தெண்ணூறில்
பெருகுதொண் ணூற்றொ டைந்தில்
பிறங்குமாங் கிலமாயி ரத்துத்தொ ளாயிரம்
பெற்றவெழு பத்து நான்கில்
பிப்ரவரி இருபான்நாற் றேதிபிர மாதீச
பேசுதமிழ் ஆண்டு தன்னில்

பார்கொண்ட உத்திரா யணமாசி பனிரெண்டு
பகர்தேதி ஆதி வாரம்
பானுவுத யாதிநா ழிகைமுப்ப தைந்தினில்
பாங்குமிகு பூர்வ பட்சம்
பரவுமிகு திருதியை உத்திரட் டாதியாய்ப்
பன்னுநட் சத்தி ரத்தே
பயிலுசாத் தியநாம யோகமதில் ஆர்ந்திடும்
பரமகர ணங்க ரசையாய்

நேர்கொண்ட கன்னியா லக்கினமொ டமிர்தமாம்
நிதயோக சுபதி னத்தில்
நித்தமிகு பதியான சத்தரிஷி ஈசனார்
நீதியரு ளோட மர்ந்த
நீதமிகு தலமான கொப்பமா புரியதனில்
நீடுஸ்ரீ இராம பக்தி
நிலைத்தபிர மானந்த நிட்டை தனில் லேநின்று
நிஜநிலா அருளில் வாழ்ந்த

தார்கொண்ட ஸ்ரீபிரம ஞானமார் செல்வியெனும்
தருமமிகு நாமம் உற்ற
தவதேவி ஸ்ரீஇராம ருக்குமணி அம்மையார்
சத்தியஸ்ரீ இராமர் உருவாம்
சச்சிதா னந்தபிர மத்தினுடன் ஐக்கியமாய்ச்
சரணரா மாஸ்ர மத்தே
சமாதியா லயமேற்று சாரருள் புரிந்திடும்
தகுதெய்வ மாகி யுளரே.

---

ஓம் தத் ஸத்
ஸ்ரீ சங்கராய நம:

திருச்சி மாவட்டம்
கொப்பமாபுரி – ஸ்ரீ ஜகத்குரு சங்கர ஆஸ்ரமம்
ஸ்ரீ ஈசுவர பக்த சிரோமணி
**ஸ்ரீ நடராஜ சுவாமிகள் அவர்கள்**
ஸ்ரீ ஈசவர சொரூபத்தில்
ஐக்கியம் அடைந்திருக்கின்ற நாள்
(திருக்கணித பஞ்சாங்கத்தின் படி சரியான குறிப்பு)

**இருபத்தெண் சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்**

சீர்கொண்ட கலிவருடம் ஐயாயி ரத்தோடு
சேரு மெழுபத்தொ டொன்பான்
திர சாலி வாகனம தாயிரத் தொண்ணூறில்
தேரு தொண்ணூற்றொ டொன்பான்
செப்புமாங் கிலமாயி ரத்துத் தொ ளாயிரஞ்
சேமவெழு பத்தொ டெட்டில்
திருந்து சனவரி தேதி பதினெட்ட தாந்த தமிழில்
திகழ் பிங்க லாண்டு தன்னில்

ஆர் கொண்ட உத்தரா யணமான தை மாதம்
ஐந்தேதி புந்தி வாரம்
அருக்கனுதயாதி நா ழிகையான பதினைந்தில்
அனுகூல பூர்வ பட்சம்
அருந்த சமி தை மிகுங் கார்த்திகை யெனும் பரம
அம்ச நட்சத்தி ரத்தே
அமைந்த மா சுப நாம யோகமா வணிசையாம்
அணிமிகும் கரண மதனில்

ஏர் கொண்ட மேஷமா லக்கின மொ டமிர்தமாய்
இதயோக சுப தினத்தில்
இனிமையருள் குங்குமாம் பா சகித சத்தரிஷி
இறைவனார் கோயில் கொண்டு
இன்பவரு ளாட்சி புரி கொப்பமா புரி வாழ்ந்து
ஈசனார் பக்தி ஞானம்
இசைய வீ சுர பக்த சிரோமணி யெனும் பெயரை
ஏற்ற நடராஜ சுவாமி

கார் கொண்ட கருணையார் ஈசர சொரூபமாம்
கனமுறும் சத்து சித்தாய்க்
கருதுபிர மானந்த சொரூபமோ டைக்யமாய்க்
கதிமிகும் முக்தி நல்கும்
கருணை மா ஸ்ரீசகத் குரு சங்க ராச்ரமம்
கவினர்த்த மண்ட பத்தே
கணிதமாஞ் சமாதியாய் நந்தி கே சுரரெனக்
காண் தெய்வ மாகி யுளரே.

**காரண நீக்கத்தால் காம மரணாதி சர்வ துக்க நீக்கம் கூறும்**
**சர்வ வேதாந்த சார சங்கிரகம்.**

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

**(சர்வதுக்க காரணமுறை கூறுல்)**

1. நிகழெலாத் துயர்கள் நேரக் காரணம் அவாப்பேய் நேர்தல்
திகழவாப் பேய்தான் சேரக் காரணம் அகக்கி ரந்தி
அகங்கரக் கிரந்தி யாரக் காரணம் அவித்தை யார்தல்
வகைமிகும் அவித்தை வாழக் காரணம் தன்னாய் வின்மை.

2. நிகழெலாத் துயர்கள் நீங்கக் காரணம் அவாப்பேய் நீங்கல்
திகழவாப் பேய்தான் தீரக் காரணம் கிரந்தி நீங்கல்
அகங்கரக் கிரந்தி யாழக் காரணம் அவித்தை நீங்கல்
வகைமிகும் அவித்தை மாளக் காரணம் தன்னைக் காண்டல்.

பதினான்கு சிர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

**(காமத்தின் பயன் ஏதசொரும் காரியம் அவதிகூறும் வாயிலாகக் காரண நீக்கத்தால் காம மரணாதி சர்வதுக்க நீக்கம் கூறல்.)**

3. சகலமாந் துன்பப் பயன்செயுங் காமச்
சதிமயற் றிரற்பகைக்கேது
சடவகங் காரக் கிரந்தியா ரவித்தை
சாருரு வேண்டிடு மெண்ணம்

புகுசெயல் பாவம் செயவிருப் பறினும்
புந்தியை மயக்கிமாத் திறலால்
புகுத்திமா பாவம் செயச்செயல் மிகவும்
புசிப்பினும் அறாதுமிக் குறலாம்

உகுதலோ பகைவெல் உபாயமாஞ் சாமம்
உற்றிடுந் தானபே தத்தால்
ஒழிவின்றி ஞான சாதன தண்டம்
ஓங்கவே தற்றொழி வுறலாம்

பகருமா றசை யறுங்கணம் மரணம்
பவத்துய ரறப்புரு டார்த்தம்
பலித்திடும் எனும்மா பகவனற் கீதை
பலமறை முடிவுகள் தாமே.

# ஸ்ரீ குரு - மகா - கோவிந்த சுவாமிகள் துதி (கீர்த்தனை)

**( ஸ்ரீ இராம - ருக்மணியம்மையார் இயற்றியது)**

**முதலாவது கீர்த்தனை**

ராகம் : காம்போதி – தாளம் : ஆதி

**பல்லவி**

வந்தார் அருள்செய வந்தார்
எந்தைசற் குருநாதர் சந்ததம் துணைபுரிய (வந்தார்)

**அனுபல்லவி**

கொந்தார் அணியும் நங்கள் கோதண்ட ராமனே வந்து
கோவிந்த ஸ்வாமி என்னும் நாமம் தரித்துக் கொண்டு (வந்தார்)

**சரணம் -1**

பவக்கடல் தாண்டி நாம் பரமன் அருட்கடலில்
பரிந்து மூழ்கித் திளைக்கும்படி செய்தார்.
பாரினில் அதுநீ நீ அது என்னும்
பரமதத் துவமதை உபதேசம் புரிந்தார்
புவியினில் சர்வமுமாய் பொலிவது அதுவே
பூரண மானதது புரிந்துகொள் வாய் என
போதித் தருளி ஈசன் பாதத் துணை அடையும்
புண்ணியப் பயிற்சி தினம் பண்ணியே பயன்பெறவே (வந்தார்)

**சரணம் -2**

"அஸம்ஸயம் மஹாபாஹோ மனோ துர் நிக்ரஹம் சலம்
அப்ப்யாஸேனது கௌந்தேய வைராக்யேண ச க்ருஹ்யதே"
அதனை உணர்வாய் என்றே அருள் உபதேசம் செய்தார்
அர்ஜுனற்குக் கீதை அருளிய கண்ணன் போலே
மனோநாசம் வாசனா க்ஷயம் செய்து
வையகத்தில் ஜீவன் முக்தி எய்திடுவாய் நீ என்று
கிருபை ஆசி அளித்த அருமை பெருமையான
கீதகோ விந்தபூஜ்ய பாதசற் குருவாக (வந்தார்)

---

**இரண்டாவது கீர்த்தனை**

ராகம் : ஹிந்தோளம் – தாளம் : ஆதி

**பல்லவி**

என்னவென்று சொல்வேன் – நான்
என்னவென்று சொல்வேன்– ஐயன்
இன்னருள் புரிந்த – நன்னய வாக்யங்களை (என்னவென்று)

**அனுபல்லவி**

உன்னை நீ அறிந்திடில் – ஒரு குறை இல்லை என்று
தன்னை அறிந்தின் பமுறும் தத்துவம் உணர்த்தியதை
(என்னவென்று)

**சரணம் -1**

அபரோக்ஷஞானத்தை –அடைந்திடாமல் யானும்
பரோக்ஷ ஞானம் கொண்டு – வினவிய சங்கைக் கெல்லாம்
சாந்த ஸ்வரூபன் – சற்குணயோகி – தயாசிந்து தெக்ஷிணாமூர்த்தியாய்
தானத்தமர்ந்து மொழிந்த – சமாதானங்களை (என்னவென்று)

**சரணம் - 2**

" பித்யதே ஹ்ருதய க்ரந்திச் சித்யந்தே ஸர்வஸம் சயா:
க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி தஸ்மிந் த்ருஷ்டே பராவரே"
என்ற சுருதி ஓதி – இகத்தில் பரம்பொருளை
இனிது கண்ட அக்கணமே அகங்காரம் ஒழியும்
ஏற்படும் ஐயம் தீரும் கர்மம் எல்லாம் நசிக்கும்
என்று சொல்லி ஐயன் அப்பர வஸ்துவை
கண்டிட நீயே காந்தமாய் இருந்து
சிந்திப்பாய் என்று செப்பிய பரமகுரு
துக்க நிவிர்த்தியாகி பரமானந்த ப்ராப்தியே
அடைந்திடுவாய் என்ற ஆசி மொழிகளை (என்னவென்று)

(ஸ்ரீ சற்குரு – மகா – கோவிந்த சுவாமிகள்
அவர்களைக் குறித்த
ஸ்ரீகுரு ஸ்தியும் – வேதாந்த அர்த்தமும்
**கீர்த்தனைகள் மூலமும் - உரையும்**
என்னும்
ஸ்ரீஇராமாஸ்ரமம் 1975ல் வெளியிட்ட நூலைப் பார்க்க)



# மகா கோவிந்த சுவாமிகள் போற்றி

**கோ.பூமிநாதன்**

பேராசிரியர், A.S.வேலாயுதராஜா வேதாந்த பாடசாலை.

ஆசி செய்சிவ நாதன் தனாதருள்
ஆகி வந்துதி பேரா டிகீலக
ஆலை மண்டிய ஊர்ரா ஜபாளையம் பிறந்தாரே
ஆசை விட்டவர் பாச முநீங்கிட
ஆலம் அன்னஇல் வாழப் புகேனென
ஆத ரித்திடும் ஞான மகாமுனி அடிதேடி

தேசி கர்மடம் சீர்கோ விலூரினை
மேவிச் சென்றவர் காவி கொடாயென
வேத சொல்படி ஞான மகாவழி துறவாகி
தேனை ஒப்பன வேத பனூல்களை
தேறு வித்தவர் நாலு கலாமொழி
தேடிக் கற்றிட மாரி ஷிகேசமும் உடனேகி

காசி புண்ணிய மாந கரானதில்
காலம் ஒன்றுடன ஓதி சிதானவர்
காரை நன்குடி ஆனந் தரானவர் வரலாகி
காணி நன்னிலம் ஆதி விழாவெடு
ஏக அம்பரம் ஊரின் மடாலயம்
பாலை யஞான தேசி சுவாமிகள் மடங்காத்து

வாசி கொப்பம மாந கராமதில்
வாழ எண்ணினர் தேன வநீதமும்
வாழை யின்கனி போல மகாவுரை விரிவாக
வாடை பொன்றிட ஆடிப் ராஜோத்பத்தி
நாலு பத்தினில் வாரு சமாதியில்
வாசம் செய்மகா கோவிந் தசாமிதாள் பணிவோமே!

# ஸ்ரீ மகா.கோவிந்த சுவாமிகளின் மாணாக்கர்கள்

## (கோவிலூர் திருக்குட நீராட்டு மலர் 1978 ல் உள்ளபடி)

1. கரந்தை
   கிருஷ்ணானந்த சுவாமிகள்
2. கொப்பமாபுரி
   நடராஜ சுவாமிகள்
3. இராம ருக்மணி அம்மையார்
4. காரைக்குடி
   டாக்டர் கோவிந்த சுவாமிகள்
5. ஏம்பல்
   மு.சி.சுப்பராய செட்டியார்
6. குகையூர்
   புலவர் அடிகளாசிரியர்
7. வைரிசெட்டிப்பாளையம்
   நா.அரங்கராசன்
8. முத்தமிழ்ப்பண்ணை
   – பா.அரங்கராசன்
9. சு.நடராசன்
10. புலவர் சு.சப்தரிஷி
11. புலவர் ஆ.வே.இராமசாமி
12. பொ.பங்காருசாமி
13. எல்.மாணிக்கம்
14. கோட்டாத்தூர்
    புலவர் ச.கணபதி
15. கோட்டப்பாளையம்
    எஸ்.கிருஷ்ணமூர்த்தி
16. ஏகாம்பரக்குப்பம்
    பி.எஸ்.வெங்கடேச முதலியார்
17. ஏகாம்பரக்குப்பம்
    மு.அண்ணாமலை முதலியார்
18. ஏகாம்பரக்குப்பம்
    டி.ஏ.பொன்னம்பல முதலியார்
19. சத்திரவாடி
    ஜெ.நடேச முதலியார்
20. நல்லவாணன்பேட்டை
    தருமலிங்க முதலியார்
21. புண்ணியம்
    கோவிந்தசாமி செட்டியார்
22. புண்ணியம் எஸ்.நரசிம்மன்

23. சிந்தலப்பேட்டை
ஏ.கனகசபை முதலியார்

24. சிந்தலப்பேட்டை
ஏழுமலை முதலியார்

25. சென்னை–கீழ்ப்பாக்கம்
எம்.பி.கிருஷ்ணசாமி பிள்ளை

26. சிந்தாதரிப்பேட்டை
ஏ.கனகசபை முதலியார்

27. நன்னிலம்
பி.ஆர்.சுப்ரமணிய செட்டியார்

28. நன்னிலம்
கே.புருஷோத்தம முதலியார்

29. திருமருகல்
கே.புருஷோத்தம முதலியார்

30. திருமருகல்
கே.பத்மநாப முதலியார்

**(மலர் வெளிவந்த பின் சுவாமிகளிடம் படித்த மாணாக்கர்கள்)**

31. வைரிசெட்டிப்பாளையம்
வி.ஜி.தொல்காப்பியன்

32. உடுமலைப்பேட்டை
எஸ்.ராமகிருஷ்ணன்

33. ராஜபாளையம்
பி.எஸ்.வேலாயுத ராஜா

34. ராஜபாளையம்
புலவர் நாராயண ராஜா

35. துறையூர் எஸ்.பி.அன்பன்

36. ராஜபாளையம்
கௌசல்யா தேவி.

# ஸ்ரீ மகா.கோவிந்த சுவாமிகளின் பக்தர்கள்

**ஏகாம்பரக்குப்பம்**

1. பி.எம்.எல்லப்ப முதலியார்
2. என்.டி.ஏழுமலை முதலியார்
3. பி.வி.கங்காதரன் முதலியார்
4. கே.கே.கணேச முதலியார்
5. ஏ.சி.கண்ணியப்ப முதலியார்
6. கே.கே.குப்புசாமி முதலியார்
7. பி.எஸ்.குப்புசாமி முதலியார்
8. ஏ.ஜி. சண்முக முதலியார்
9. பி.டி.தணிகாசலம்
10. கே.தாமோதர முதலியார்
11. ஏ.எஸ்.பழனி முதலியார்
12. பி.கே.பெரியசாமி
13. எம்.கே.ஜகன்னாத முதலியார்

**கீரம்பூர்**

14. லக்ஷ்மண ரெட்டியார்
15. ஆ.பெரியண்ணன்
16. புலவர் ந.பாஸ்கரன்
17. சோதிடர் ந.பஞ்சாட்சரம்

**கொப்பம்பட்டி**

18. யசோதை அம்மையார்
19. ரா.ஜனார்த்தனம்

**சோபனபுரம்**

20. எல்.நடேசன்
21. புலவர் இரா.வாசுதேவன்

**த.முருங்கப்பட்டி**

22. தி.இரா.பஞ்சாமி
23. கு.பெ.பாலசுப்ரமணியன்

**தண்டலை**

24. வித்வான் டி.சி.ஜகந்நாத ரெட்டியார்

**துறையூர்**

25. புலவர் மு.அருணாசலம்
26. புளியம்பட்டி ஆர்.கிருஷ்ணசாமி
27. கு.கிருஷ்ணமூர்த்தி செட்டியார்
28. வி.கோவிந்தன்
29. ஆ.சீராளன்
30. சுப்பையா
31. எம்.சுப்ரமணியன்
32. எஸ்.மருதை வீரன்
33. சு.ராஜப்பா
34. து.சி.இராஜமாணிக்கம்

35. பெ.ராஜமூர்த்தி

36. கே.பி.ராமசாமி

37. கி.வெங்கட்ராமன்

38. கோ.வெங்கடேசன்

39. நாகலாபுரம் கோபாலன்

40. நாதஸ்வரம் என்.பாஸ்கரன்

**நன்னிலம்**

41. கே.இராமாமிர்த அய்யர்

42. அ.இராமையன்

43. வி.ஈஸ்வரன்

44. பா.உத்தமன்

45. பா.கோபிராம்

46. வி.சுப்ரமணியன்

47. சொக்கலிங்கம்

48. எஸ்.சௌரிராஜன்

49. எம்.தருமையன் ஆசாரி

50. மா.மாசிலாமணி

51. கே.வைத்திலிங்கம்

**ராஜபாளையம்**

52. ஏ.வி.கல்யாண வெங்கட்ராமன்

53. ஏ.கே.பாலகிருஷ்ணமராஜா

54. பேராசிரியர் கொ.பூமிநாதன்

55. பி.ஆர்.ராதாகிருஷ்ணராஜா

56.ஏ.எஸ்.முத்துகிருஷ்ணராஜா

**வைரிசெட்டிப்பாளையம்**

57. ப.அருணாசலம்

58. வி.பி.கோபாலகிருஷ்ணன்

59. ரா.கோபால்சாமி

60. கி.கோவிந்தராஜு

61. மு.சிவப்பிரகாசம்

62. பி.சுதேஷ்

63. இரா.சுந்தரராஜன்

64. வி.தங்கராஜு

65. வி.ஆர்.நடராஜன்

66. சி.பங்காருசாமி

67. ரா.பெரியசாமி

68. ப.பெரியசாமி

69. பெ.ந.பெருமாள்

70. பெ.ரஜினி

71. வி.வி.ரவிச்சந்திரன்

72. சி.ஹெச். ரெங்கராஜன்

73. ச.வரதராஜன்

74. புலவர் எஸ்.கே.ராமராஜன்

# ஸ்ரீ மகா.கோவிந்த சுவாமிகளின் மாணாக்கர்கள்



2) நடராஜ சுவாமிகள்



3) இராம ருக்மணி



7) நா.அரங்கராசன்



8) முத்தமிழ்ப்பண்ணை



9) சு.நடராசன்



10) சு.சப்தரிஷி



11) ஆ.வே.இராமசாமி



12) பொ.பங்காருசாமி



13) எல்.மாணிக்கம்



15) எஸ்.கிருஷ்ணமூர்த்தி



16) பி.எஸ்.வெங்கடேசன்



30) கே.பத்மநாபன்



31) வி.ஜி.தொல்காப்பியன்



32) எஸ்.ராமகிருஷ்ணன்



33) பி.எஸ்.வேலாயுத ராஜா



35) எஸ்.பி.அன்பன்

# ஸ்ரீ மகா.கோவிந்த சுவாமிகளின் பக்தர்கள்



1) பி.எம்.எல்லப்பன்



2) என்.டி.ஏழுமலை



3) பி.வி.கங்காதரன்



4) கே.கே.கணேசன்



5) ஏ.சி.கண்ணியப்பன்



6) பி.எஸ்.குப்புசாமி



7) கே.கே.குப்புசாமி



8) ஏ.ஜி. சண்முகம்



9) பி.டி.தணிகாசலம்


10) கே.தாமோதரன்


11) ஏ.எஸ்.பழனி


12) பி.கே.பெரியசாமி


13) எம்.கே.ஜகன்னாதன்


15. ஆ.பெரியண்ணன்


16. ந.பாஸ்கரன்


17. ந.பஞ்சாட்சரம்


19. ரா.ஜனார்த்தனம்


20. எல்.நடேசன்


21. இரா.வாசுதேவன்


22. தி.இரா.பஞ்சாமி


23. கு.பெ.பாலசுப்ரமணியன்


25. மு.அருணாசலம்


26. ஆர்.கிருஷ்ணசாமி


27. கு.கிருஷ்ணமூர்த்தி


28. வி.கோவிந்தன்


29. ஆ.சீராளன்


30. சுப்பையா


31. எம்.சுப்ரமணியன்


32. எஸ்.மருதை வீரன்


33. சு.ராஜப்பா


34. துசி.இராஜமாணிக்கம்


35. பெ.ராஜமூர்த்தி


36. கே.பி.ராமசாமி


37. கி.வெங்கட்ராமன்


38. கோ.வெங்கடேசன்


39. கோபாலன்


40. என்.பாஸ்கரன்


42. அ.இராமையன்


44. பா.உத்தமன்


45. பா.கோபிராம்


46. வி.சுப்ரமணியன்


50. மா.மாசிலாமணி


51. கே.வைத்திலிங்கம்


52. ஏ.வி.கல்யாண வெங்கட்ராமன்


53. ஏ.கே.பாலகிருஷ்ணமராஜா


54. கொ.பூமிநாதன்


56.ஏ.எஸ்.முத்துகிருஷ்ணராஜா


57. ப.அருணாசலம்


58. வி.பி.கோபாலகிருஷ்ணன்


59. ரா.கோபால்சாமி


60. கி.கோவிந்தராஜு


61. மு.சிவப்பிரகாசம்


62. பி.சுதேஷ்


63. இரா.சுந்தரராஜன்

